# ஆழ்வார்கள் சரித்திரம்





ஸி. ஆர். ஸ்ரீநிவாஸ அய்யங்கார், பி. ஏ,

எழுதியது

முதற்பதிப்பு

சென்னை:

"சுதேசமித்திரன்" ஆபீஸ்.

# முன்னுரை.

இதுவரையில் ஆழ்வார்களின் திவ்ய சரிதத்தைப்பற்றிப் பலர் எழுதியிருக்கிறார்கள். அவைகளுக்கெல்லாம் வடகலை, தென்கலை குருபரம்பரையே முக்கியமான ஆதாரமென்று எண்ணத்தகும். அவைகளுள் காலஞ்சென்ற கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ. உ. வே. சடகோப ராமானுஜாசாரியர் அவர்களால் இயற்றப்பட்ட ஆழ்வார்கள் சரித்திரமே எவ்விதத்திலும் மேலானது. ஆனால் இதுவரையில் இயற்றப்பட்ட நூல்களில் ஆழ்வார்களின் சரிதம் மாத்திரமே காணப்படுகின்றது. சரித்திர ஆராய்ச்சி முறைப்படி அவர்களுடைய கால நிர்ணயம் செய்யப்படவில்லை. மேலும் அவர்களால் பாடப்பட்ட பாசுரங்களின் விஷயம் வெளிப்படுத்தப்படவில்லை. இந்தச் சிறு நூலில் என்னால் இயன்றவரையில் அந்தக் குறையைத் தீர்க்க முயன்றிருக்கிறேன். இந்நூலின் எல்லையால் இன்னும் விஸ்தாரமாய் எழுதமுடியாததைப்பற்றி வருந்துகிறேன். ஆயினும் அறிஞர்களும் பக்தகோடிகளும் இதைப் படித்து இதனால் திவ்யப் பிரபந்தத்தையும் அதற்கு மஹான்களால் எழுதப்பட்டிருக்கும் வடமொழி தென்மொழிகளிலுள்ள உரைகளையும் படிக்கவேண்டுமென்ற ஆசை உண்டாவதே என் முயற்சிக்குத் தகுந்த பலமாகும்.

வி. ஆர். ஸ்ரீநிவாஸ அய்யங்கார்.

# ஆழ்வார்கள் சரித்திரம்.

## பீடிகை.

லக்ஷ்மீபதியாய், வைகுண்ட வாஸியாய், அடையாதவை அடைய வேண்டியவை யாதொன்று மில்லாதவனாய், அனந்த கல்யாண குணகண பரிபூரணனாய் விளங்கும் ஸர்வேச்வரன், 'அப்ராக்ருத லோகம்,' 'நலமந்த மில்லதோர் நாடு,' 'சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதி', 'தெளி விசும்பு திருநாடு', 'தெளிதாகிய சேண்விசும்பு', 'மாவைகுந்த' மென்றும் சொல்லப்படும் ஸ்ரீ வைகுண்ட நகரத்தில், செம்பொன் செய் கோயிலில், ஆயிரம் திருத்தூண்களையுடைய திருமாமணி மண்டபத்தில்,

"சென்றாற்குடையாம், இருந்தாற் சிங்காதனமாம்
நின்றான் மரவடியாம் — நீள்கடலு
ளென்றும், புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கு
மணையாந் திருமாற்கரவு" (முதல் திருவந்தாதி, 53).

என்றபடி ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் நித்ய கைங்கர்யம் செய்யும் அனந்தாழ்வாரின் ஸ்வரூபமான சீரிய சிங்காதனத்தில், ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி யென்ற மூவரோடும் கூடி எழுந்தருளி, சங்கம், சக்கரம், கதை, வாள், வில்லென்ற பஞ்சாயுதங்களும் பெரிய திருவடியான கருடாழ்வாரும் புறஞ்சூழ, சேனை முதலியார் பணிகேட்பத் திருக்கொலு விருக்கையில், தன் நித்ய விபூதியில் எப்போதும் உகந்து கைங்கர்யம் செய்யப் பெற்ற அனந்த கருட விஷ்வக்ஸேனர் முதலிய நித்யஸூரிகளைக் குளிர நோக்கி,

"இவர்கள் முக்குணங்களை வென்று, கரும பந்தங்களை யுதறிவிட்டு, மாயையைத் தாண்டிப் பரமானந்தத்தை யனுபவித்துக்கொண்டிருக்க வில்லையா? இதைப்போல் லீலா விபூதியிலுள்ள எண்ணிறந்த ஜீவகோடிகளும் பிறவியை வென்று இப்பெரும் பதவியை யடையலாகாதோ? என்னைத் தரிசித்துத் தொழுது சோத்து தியானித்துத் துதித்து உய்யுமாறு, கருமேந்திரிய ஞானேந்திரியங்களையும் மனம் முதலிய அந்தக்கரணங்களையும் கொடுத்தேன். அவைகளைச் சரியாய் உபயோகிக்கவில்லை; அக்கினி ஹோத்ரம் செய்வதற்காக ஸமித்துக்களைக் கொய்யக் கொடுத்த கத்தியால் ஊராம்பசுவின் வாலை யறுத்தவனைப் போலும், களையெடுக்கக் கொடுத்த

ஆயுதத்தால் கண்ணைக் குத்திக் கொண்டவனைப்போலும், ஆற்றைக் கடக்கக் கொடுத்த தெப்பத்தால் அவ்வெள்ளத்தின் வழியே சென்று கடலில் மூழ்கினவனைப் போலும், விஷய ஸுகங்களிலே புலன்களைப் போகவிட்டுத், தாகத்தைத் தீர்ப்பதற்கு உப்பு நீரைக்குடித்தவனைப் போல் ஆசைக்கடலி லலைந்து, மோக வலையில் சிக்கிப் பல பல பிறவிகளிற் பிறந்து, கரையேற வழிகாணுமல், துரும்புபோல் சுழல்கிறார்கள்.

அளவற்ற பெருங் கருணையாலே அவ்வான்மகோடிகளை அழிவிலாப் பெரும் பதியடைவிக்க விரும்பிப், பாவபுண்யம் நியாயாந்யாயம் தர்மா தர்மங்களைப் பகுத்தறிந்து, நல்வழியைக் கைப்பற்றித் தீ வழியைத் துறக்குமாறு நான்மறைகளை என் சுவாஸ ரூபமாய் வெளியிட்டேன், அவைகளின் உட்கருத்தை விளக்கி ஐயந்திரிபற உபதேசித்து, நடத்திக் காட்டும்படி ஸ்மிருதிகளையும் இதிகாஸ புராணங்களையும் காம பந்தத்தை யொழித்து, ஞானக் கண்ணைப்பெற்ற தவமுனிவர்களையும் அருளினேன். நள்ளிருளில் அலைந்து தவிப்பவனுக்கு ஓர் தயாளுகொடுத்த விளக்கால் அவன் அவ்வீட்டைக் கொளுத்தினது போல, ஜீவன்கள் அந்த நற்சாதனங் களையே கொண்டு கெடுதியை விளைவித்தார்கள். தன் கைவிளக்குப் பிறர்க் கன்றித் தனக்குப் பயன்படுமோ? நன்னூல்களை நுனிப்புல் மேய்வது போல் கவனமின்றி அலட்சியமாய்ப் படிப்பதும், சந்தேக விபரீதங்களால் தடுமாறுவதும், நித்தியா நித்தியத்தையும், கார்யா கார்யத்தையும், ந்யாயாந் யாயத்தையும் விவேகத்துடன் பகுத்தறியாமல் மோகத்தால் விபரீதமாய்க் கிரகிப்பதும், ச்ருதி ஸ்மிருதி இதிகாஸ புராணங்களுக்குத் தங்கள் மனம் போனபடி யெல்லாம் அர்த்தஞ் செய்வதும்; தங்களுடைய தீயசெயல் கட்கெல்லாம் ஆதாரங்களைத் தேடி ஏற்படுத்திக் கொள்வதும், பேரின் பத்தில் கை சோர்ந்து சிற்றின்பத்திலேயே ஆழ்வதுமாய்ச் சாருவாக நாஸ்திக பாஷண்ட மதங்களைக் கற்பித்துக் கள், காமம், களவுகளையே தெய்வமாய்ப் போற்றவாரம்பித்தார்கள்.

4. அதைக் கண்டு, வெறுப்பும் வியப்புமுற்று, அரசன் தன் ஆணை செல்லாவிடத்தில் தானே படையெடுத்துப் போய்ப் போர்புரிந்து கலகத் தை யடக்கி வசப்படுத்துவதுபோலும், ஆற்றில் விழுந்த மகவைப்பற்றி யெடுக்கத் தந்தையே அக்கணத்தில் குதிக்கத் துணிவதுபோலும், நானே அம்மனிதரைப்போல கருமதேகத்தை யெடுத்துக் கருப்பவாஸ துக்கத்தை யனுபவித்துச், சுகதுக்கங்களைப்பாராட்டி, அழும்போதழுது மகிழும்போது மகிழ்ந்து, இடைக்கிடையே என் இயற்கையான ஞானம், சக்தி, மகிமை முதலிய கல்யாண குணங்களை வெளியிட்டு, அவர்களில் ஒருவ னாய் நானும் நடித்து, மானைப் பிடிக்கும் வேடன் தானும் அதின் தோலைப் போர்த்து அவைகளுடன் கலந்து திரிவதுபோல், என்னருமைக் குழந்தை

களான ஜீவகோடிகளை வசப்படுத்தப் பெரு முயற்சிசெய்து ராமகிருஷ்ணுதி அவதாரங்களை எடுத்தேன். அப்படியும் அவர்கள் என் வலையில் அகப்படாமல் தப்பியோடினர். என்னைக் கேவலம் மனிதனென்றே நினைத்தனர்; என்னைப்போல் தாங்களும் வேடம் பூண்டு கேலிசெய்தனர்; என்னை எதிர்த்துப் போர்புரிந்தனர். என் அமானுஷ்யச் செயல்களையும் விசுவரூபத்தையும் வெறும் இந்திரஜாலமென்றும் மாயாவித்தை யென்றும் இகழ்ந்துரைத்தனர். இனிச் செய்வது யாதெ"ன்று கவலையுற்று,

5. அக்கருணாமூர்த்தி "நாம் போட்ட வேஷம் பலிக்கவில்லை; அவர்களைப் போலாகத் திறமையில்லை. அவர்களின் இனத்தோராய்ச், சேதனராய்ப், பரமபக்தியால மாயையைவென்று பிறவிக்கடலைக் கடந்து, அந்தயத்தில் சுகந்தரும் பெரும்பதத்தை யடைந்து, என் திருவடிகளில தொண்டுபுரியும் பேறுபெற்ற இவரையே அனுப்புவே"னென்று நிச்சயஞ் செய்து, ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி பஞ்சாயுதங்கள் ஸ்ரீவத்ஸம் கௌஸ்துபம் வனமாலை அனந்த கருட விஷ்வக்ஸேனர் முதலிய நித்யஸூரிகளைப் பார்த்து "நீங்கள் உங்களுடைய அம்சங்களால் மண்ணுலகில் லவதரித்து, பல விடங்களில பல சாதிகளில பல காலங்களிற பிறந்து, பக்திமார்க்கத்தைக் கைப்பற்றி, நம்மைப பல பல நாமஞ் சொல்லிப் போற்றி, அநாதி கர்மவாஸனையால் கட்டுண்டு, பவக்கடலில் கிடக்கும ஜீவராசிகளைக் கரையேற்றி நம் திருவடிகளில் உய்யுமாறு செய்யக் கடவீரெ"ன்று திருவாணையிட்டார்.

6. அவர்களும் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு, பாக்யமென்று மனங்களித்து ஆழ்வாராதியராய் அவதரித்தனர். பரமபுருஷனுடைய திவ்யமங்கள விக்கிரகத்திலும், ஸௌலப்ய ஸௌசீல்ய வாத்ஸல்ய தயாதி அனந்த கல்யாணகுணங்களிலும் ஈடுபட்டுக், "காலாழும் நெஞ்சழியும் கண் சுழலுமெ"ன்றபடி, ஆனந்தானுபவ வெள்ளப்பெருக்கில் ஆழ்ந்து பரவசப் பட்டவராதலால், இவர்க்கு ஆழ்வாரெனத் திருநாமம சாற்றப் பட்டது.

7. இவர்களில் பொய்கை பூதம் பேயாழ்வாரென்ற முதலாழ்வார்களும், திருமழிசைப்பிரானும் துவாபரயுகத்தின் முடிவிலும், மற்ற எண்மர் கலியுகத்திலும் அவதரித்தனர்.

8. இவர் ஆரியாவர்த்தமென்ற நமது புண்யபூமியில், திருப்பதிகள் பெரும்பாலுமுள்ள தென்னாட்டில், காஞ்சி, திருக்கடன் மல்லை, மைலாப்பூர், திருமழிசை, திருக்குருகூர், திருக்கோளூர், கொல்லி, வில்லிபுத்தூர், மண்டங்குடி, திருவாலியென பல புண்ய க்ஷேத்திரங்களில் பிறந்தனர்.

9. இவர்களில் பொய்கையார், பூதத்தார், பேயார், திருப்பாணர், ஆண்டாளென்றவர்கள் மனுஷ்ய ஸம்பந்தமின்றி கர்ப்பவாச துக்கமடையாமல் அயோனிஜராய் உண்டானவர், குலசேகரர் அரசன்; நம்மாழ்வார் வேளாளர் குலத்திலும் திருமங்கை மன்னன் நான்காவது வருணத்தில் கள்ளக்குடியிலும் தோன்றினவர்; பெரியாழ்வார் தொண்டரடிப் பொடியார் மதுரகவிகள் இம் மூவரும் அந்தணர் குலத்தில் தோன்றினவர்; திருமழிசையார் பார்க்கவமஹரிஷிக்கும் தேவகன்யைக்கும் பிறந்தவர்.

10. இவர்கள் 14 வருஷம் முதல் 4700 வருஷங்கள் வரையில்

11. இவர்களில் திருப்பாணாழ்வார், தொண்டரடிப்பொடிகள் மூன்று திவ்யதேசங்களையும், பெரியாழ்வார் ஐந்தையும்; பொய்கையாழ்வார் குலசேகரர் ஏழையும்; திருமங்கை மன்னன் 86 திருப்பதிகளையும் மங்களாசாஸனஞ் செய்தருளினர்.

12. இவர்களால் இயற்றப்பட்ட பாடல்களுக்கு நாலாயிர திவ்ய பிரபந்தமென்றும் திராவிட வேதமென்றும் பெயர். இதன் விபர மெப்படி

| | | | |
|---|---|---|---|
| பெரியாழ்வார் | அருளிச்செய்த | திருவாய்மொழி | 473 |
| நாச்சியார் | ,, | திருப்பாவை | 30 |
| ,, | ,, | திருமொழி | 40 |
| குலசேகராழ்வார் | ,, | பெருமாள் திருமொழி | 105 |
| திருமழிசையாழ்வார் | ,, | திருச்சந்த விருத்தம் | 120 |
| தொண்டரடிப்பொடிகள் | ,, | திருமாலை | 45 |
| ,, | ,, | திருப்பள்ளியெழுச்சி | 10 |
| திருப்பாணாழ்வார் | ,, | அமலனாதிப்பிரான் | 10 |
| மதுரகவியாழ்வார் | ,, | கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 |
| | | | 1047 |

(இந்த 1047 பாசுரங்களும் முதலாயிரமெனப்படும்.)

| | | | |
|---|---|---|---|
| திருமங்கையாழ்வார் | அருளிச்செய்த | பெரிய திருமொழி | 1084 |
| ,, | ,, | திருக்குறுந்தாண்டகம் | 20 |
| ,, | ,, | திருநெடுந்தாண்டகம் | 30 |
| | | | 1134 |

| | | | |
|---|---|---|---|
| நம்மாழ்வார் | அருளிச் செய்த | திருவாய்மொழி | 1102 |
| பொய்கையாழ்வார் | ,, | முதல் திருவந்தாதி | 100 |
| பூதத்தாழ்வார் | ,, | இரண்டாம் ,, | 100 |
| பேயாழ்வார் | ,, | மூன்றாம் ,, | 100 |
| திருமழிசையாழ்வார் | ,, | நான்முகன் ,, | 96 |
| நம்மாழ்வார் | ,, | பெரிய ,, | 87 |
| ,, | ,, | திருவிருத்தம் | 100 |
| ,, | ,, | திருவாசிரியம் | 7 |
| திருமங்கையாழ்வார் | ,, | திருவெழுகூற்றிருக்கை | 1 |
| ,, | ,, | சிறிய திருமடல் | 77½ |
| ,, | ,, | பெரிய திருமடல் | 148½ |
| | | | 817 |

(திருவாய் மொழிக்குப் பின்னுள்ள 10 நூல்களும் 817 பாசுரங்களுள்ள இயற்பா வெனப்படும்)

இவையனைத்தும் கூடி 4000 பாசுரங்களாகும்.

13. இந்த 23 பிரபந்தங்கள் அடங்கிய தமிழ் வேதத்தைத் திருவாய்மலர்ந்தருளின ஆழ்வார்களில் மதுரகவிகள் 11, திருப்பாணாழ்வார் 10, தொண்டரடிப்பொடிகள் 55, பொய்கையார் 100, பூதத்தார், 100 பேயாழ்வார் 100, குலசேகராழ்வார் 105, ஆண்டாள் 173, திருமிழிசைப்பிரான் 216, பெரியாழ்வார் 473, நம்மாழ்வார் 1296, திருமங்கை மன்னன் 1361 பாசுரங்களைப் பாடியிருக்கின்றனர்.

14. இவர்கள் அருளிச்செய்த பிரபந்தங்கள் எவைகளின் ஸாரமென்றால்:—

| | | |
|---|---|---|
| பெரியாழ்வாரின் | திருமொழி | ஸ்ரீமத் பாகவத புராணம் |
| நாச்சியாரின் | திருப்பாவை | உபநிஷத்துகள் |
| ,, | திருமொழி | |
| குலசேகரப் பெருமாளின் | பெருமாள் திருமொழி | — ஸ்ரீமத் ராமாயணம் |
| திருமழிசைப்பிரானின் | திருச்சந்த விருத்தம் | — சாஸ்திரங்கள் |
| தொண்டரடிப்பொடிகளின் | திருமாலை | — வேதார்த்தம் |
| திருமங்கையாழ்வாரின் | பெரிய திருமொழி | — வேதாங்கங்கள் |

| | | |
|---|---|---|
| நம்மாழ்வாரின் | திருவாய்மொழி | — ஸாமவேதம் |
| ,, | திருவிருத்தம் | — ரிக்வேதம் |
| ,, | திருவாசிரியம் | — யஜுர் வேதம் |
| ,, | பெரிய திருவந்தாதி | — அதர்வ வேதம் |

15. இப்பொழுது கிடைக்கும் ஸ்ரீ கோசங்களில், திருவாய் மொழியைத் தவிர மற்றப் பாசுரங்களின் பழைய பண்களையும் தாளங்களையும் விலக்கித் தற்கால கர்நாடக ராகதாளங்களை அமைத்திருக்கின்றன. இதற்கென்ன ஆதாரமோ, சம்பிரதாயமோ, அறியேன். திருவாய் மொழியில் இம்மாறுதலில்லை. குறிஞ்சி, முதிர்ந்த குறிஞ்சி, நட்டபாஷை, நாட்டராகம், செருந்தி, வியந்தம், கொல்லி, புறநீர்மை, சீகாமரம், பாலையாழ், பழம் பஞ்சரம், தக்கராகம், பழந்தக்கராகம், தக்கேசி காந்தாரம், இந்தளம், கைசிகம், பஞ்சமமென்ற பூர்வீக ராகங்களும் ஏழொத்து, ஒன்பதொத்து, இடையொத்து, நடையொத்தென்ற புராதன தாளங்களும் காணப்படுகின்றன. அவைகளுக்கு அடியில் எந்த வித்வானோ கர்நாடக ராக தாளங்களையும் வரைந்திருக்கிறான். இது திருஷ்டி பரிகாரம் போலும்.

16. உபநிஷத்துக்கள், பிரும்ம ஸூத்திரம், பகவத்கீதை, இதிஹாஸ புராணங்கள் முதலிய மதக் கிரந்தங்களால் வடமொழியில் உபதேசிக்கப்படும் வேதாந்தமே இப்பாசுரங்களாலும் போதிக்கப்படுவதால், இவ்விரு மொழிகளிலுமுள்ள ஞான நூல்களுக்கு உபயவேதாந்தமென்று பெயர்

17. இந்தத் திவ்யப் பிரபந்தத்திற்கு ஏற்பட்டிருக்கும் வியாக்யானங்கள்:—1. திருக்குருகைப்பிரான் பிள்ளானுடைய ஆறாயிரப்படி (வடமொழி). 2. பட்டரின் சிஷ்யரான நஞ்சீயரின் ஒன்பதாயிரப்படி 3. இவருடைய சிஷ்யரான நம்பிள்ளையின் உபந்யாஸரூபமான 36,000 படி 4. பெரிய வாச்சான் பிள்ளையின் 24,000-படி 5. வாதிகேஸரி அழகிய மணவாள ஜீயரின் 12,000படி (ப்ரதிபதம்)

18. இவ்வாழ்வார்களின் அவதாரம் வைபவம் முதலிய திவ்ய சரிதங்கள், பிரும்மாண்டம் பாத்மம் மார்க்கண்டேயம் பார்க்கவம் விருத்த பாத்மம் பிரவிருத்த பாத்மம் பவிஷ்யம் முதலிய புராணங்களிலும், திவ்யஸூரி சரிதம் ப்ரபன்னாமிருத மென்ற ஸம்ஸ்கிருத காவியங்களிலும், பின்பழகிய பெருமாள்ஜீயரின் ஆறாயிரப்படி குருபரம்பராப்பிரபாவம், குருபரம்பரா விவரணம், பன்னீராயிரப்படி குருபரம்பராப்பிரபாவம், திருதீய பிரும்ம தந்திர ஸ்வதந்திரஸ்வாமிகளின் மூவாயிரப்படி குருபரம்பரை, சடகோப ராமானு

ஜாசாரியரின் ஆழ்வார்களின் சரிததிரம், பழ நடை விளக்கம், தொன்னடைத் துவக்கம், பெரிய திரு முடியடைவு, ராமாநுஜாசாரிய திவ்ய சரிதை, வார்த் தாமாலை, விசிஷ்டாதவைத விஞ விடை, நாலாயிரப்பிரபந்தம், படிகள் முதலிய நூல்களில் சிதறியுள்ளன.

19. இவ்வாழவார்களில் பெரியாழ்வார் கிருஷ்ணவதாரததிலும், குலசேகராழ்வா ராமாவதாரததிலும், ஆண்டாளும் திருப்பாணாழ்வாரும் ரங்கநாதனிடததிலும, மதுரகவிகள் நமமாழ்வாரிடததிலும் ஈடுபட்டவர்கள்.

20. இவாகளில ஆண்டாள் ஸ்ரீதேவியின் அம்சம்; பொய்கையார் பாஞசஜன்ய மெனற சஙகததையும, திருமழிசைப் பிரான் சுதர்சனமென்ற சக்கரததையும, பூததததா கௌமோதகி யெனற கதாயுததையும், பேயாழ் வாா நந்தகமெனற வாளையும, திருமங்கைமனனன சாாங்கமென்ற வில்லையும், திருபபாணாழ்வாா ஸ்ரீவதஸமெனற திருமறுவையும், குலசேகராழ்வார் கௌஸ்துபமெனற திருவாபரணததையும், தொண்டரடிபபொடிகள் வைஜ யநதீ யெனற வனமாலையையும, பெரியாழவார் பெரிய திருவடிகளையும், மதுரகவிகள, கருடாழவாரையும குமுதரென்ற நிதய சூரியையும் அம்ச மாய்க் கொண்டு தோனறினா, நம்மாழ்வாரோ வென்றால், பரமபதநாதன் பஞசாயுதங்கள் அனநதாழ்வார் சேனை முதலியார் இவர்களின் எட்டு அம்சங் களிலிருநதுண்டானவர். ஆனதால், இவரையே பிரதானராயும் மற்ற ஆழ் வாாகளை இவருக்கு அவயவங்களாயும் கொள்வதுண்டு.

21. எளிதில அறிய முடியாத ஸம்ஸ்கிருத பாஷையில் எண்ணி றநத கிரநதங்களால உபதேசிக்கபபடும அருமையான தததுவங்களைப் பண்டிதரைத்தவிர மறற யாவரும படிததுணாவது அஸாத்தியமென்பதைக் கண்டு, மனமிரங்கி பிராமணரைத தவிர மறறுமுள்ளோரும் பெண்டிரும் அவைகளை யறிநது நறகதி யடையும வண்ணம், அபாரமான கருணை பொழிநது, ஸாதாரண ஜனங்களால் பேசபபடும் தென் மொழியென்ற தமிழ் பாஷையில் அவைகளின் ஸாரததை எடுததோதின ஆழ்வார்களுக்கு நாம செயயும் பிரதியுபகாரம் யாது முண்டோ? பௌத்த ஜைன மதஸ்தா பகாகளான புததபகவானும மஹாவீரரும தங்களுடைய போதனைகளைப் பாளிமாகதி யென்ற ஜனங்களின பாஷைகளிலேயே இயற்றினார்களன்றோ? இக்காரணம் பற்றியே சைவ சமயாசாரியரான நால்வரும் (அப்பர் சுவாமிகள், சுந்திர மூர்த்தி சுவாமிகள், மாணிககவாசக சுவாமிகள, திருஞான சம்பந்த மூர்ததி சுவாமிகள்) தேவாரம் திருவாசகமென்ற திருப்பதிகங்களைத் தமி ழில் அருளிச் செய்தனர். ஆனால் ஜனங்களின சக்தியும் ஞானமும் கூர்மை யும் பக்தியும் சிரததையும் வரவரக் குறைந்தன; காலத்தின் வலிமையால் தமி

ழின் இயல்பும் ரூபமும் மாறி அப்பொழுது எல்லோரும் எளிதில் அறியக் கூடிய பாஷை இப்பொழுது செந்தமிழாய்ப், புலவரைத் தவிர மற்ற யார்க்கும் தெரியாமல் விரிவான உரைகளையும் அரும்பத விளக்கங்களையும் பாஷ்யங்களையும் விருத்திகளையும் வேண்டிற்று. அந்தத் தமிழும் செந்தமிழாய் அதற்கே வேறு உரைகளும் மேற்கோள்களும் வேண்டியிருக்கின்றன இதுவும் கலியின் கொடுமையே.

# பொய்கையாழ்வார் வைபவம்.





நமது ஆரியா வர்த்தத்தில், முக்தியளிக்கும் ஸ்தானங்களென விளங்கும் ஏழிலொன்றாய்க், "காசி முதலான நன்னகரி யெல்லாம் கார்மேனியருளாளர் கச்சிக் கொவ்வாவெ"ன்று (அமிருதாஸ்வாதினீயென்ற தேசிகப் பிரபந்தத்தில்)கொண் டாடப்படும் திருக்கச்சிப்பதியிலே, திருவெஃகாவென்ற திவ்ய ஸ்தலத்தின் வலதுபுறத்தில், நக்ஷத்திரங்களால் விளங்கும் ஆகாச வீதி யைப் போன்ற ஓர் பொற்றாமரைப் பொய்கையுண்டு. அதில் ஒரு கமலத் தில், ஸ்ரீ வைகுண்ட நாதனுடைய நியமனத்தால், அவருடைய திருக்கரத் தில் விளங்கும் கூனற் சங்கமான பாஞ்சசன்னியத்தின் அம்சமாய், இவ் வாழ்வார் தோன்றியருளினார். இவருடைய அவதார காலம், இப்பொழுது நிகழும் சுவேதவராக கல்பம், வைவஸ்வத மன்வந்தரம், 28-வது மஹா யுகத்தில், துவாபரயுகத்தின் 8 லக்ஷத்து 62 ஆயிரத்து 901 வதான வித் தார்த்தி வருஷம், ஐப்பசி மாதம், சுக்ல பக்ஷம், அஷ்டமீ திதி, செவ்வாய்க் கிழமை, திருவோண நக்ஷத்திரம்.

## ாழ்வார் வைபவம்.

"ஆறோடீரெட்டு தொண்டை' யென்று, 108 திருப்பதிகளில் 22 உள்ள தொண்டை நாட்டில், கிழக்கு கடற்கரையில், "கச்சிக்கிடந்தவனூர் கடன்மல்லைத் தலசயனமெ"ன்ற திருக்கடன்மல்லையிலே (மகாபலிபுரத் திலே), ஓர் குருக்கத்திமலரில், கௌமோதகியென்ற திருமாலின் கதாயுதத் தின் அம்சமாய், இவர் அவதரித்தார். இவருடைய அவதார காலம், பொய் கையாழ்வார் தோன்றின தினத்திற்கு மறுநாள்.

"கடல்வண்ணன் பூதம்" "மறுத்திருமார்பன்றன் பூதமெ"ன்று பகவானை அறிந்ததால், தனது உள்ளவனு யிருப்பதை யுடையவரானது பற்றி, இவருக்குப் பூதத்தாழ்வாரென்ற திருநாமம் வாய்த்தது.

# பேயாழ்வார் வைபவம்.

தொண்டை நாட்டில், "தேனமர்சோலை மாடமாமயிலை" யென்ற திருமயிலை க்ஷேத்திரத்தில் (மைலாப்பூர்), மாதவப் பெருமாளின் ஸன்னிதித் திருக் கிணற்றில், ஒரு செவ்வல்லிப்பூவில், மஹாவிஷ்ணுவின் நந்தகமென்ற கத்தியின் அம்சமாய், இவ்வாழ்வார் பூதத்தாழ்வாரின் அவதார தினத்திற்கு மறுநாளில் தோன்றினவர்.

"அழுவன், தொழுவன், ஆடிக்காண்பன், பாடியலற்றுவன்", "காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்", "மெய்யதனுக் கண் பனிசோர, மெய் சிலிர்ப்ப, வேங்கியிளைத்து, நின்றெய்த்துக், கும்பிடு நட்ட மிட்டெழுந்தாடிப்பாடி யிறைஞ்சி, யென்னத்த னச்சன் ரங்கனுக் கடியார்களாகி, யவனுக்கே பித்தராமவர் பித்தரல்லர் காண், மற்றையார் முற்றும் பித்தரே", "பேயரே யெனக்கி யாவரும், யானுமோர் பேயனே, யெவர்க்கும், மிது பேசி யென்னுயனே, யரங்கா வென்றழைக்கின்றேன், பேயனா யொழிந்தே னெம்பிரானுக்கே", "பாமரரெனக் காண்பிப்பார், பண்டிதத் திறமை காட்டார், உளமருமாவா ருள்ளத்து வகையாம் சீவன் முக்தரெ"ன்றபடி, இவர் பகவானிடத்தில் வைத்த எல்லையற்ற பிரேமையால், எங்கும் அவரையே கண்டு, அவ்வானந்தப் பெருக்கிலாழ்ந்து, தன்னை மறந்து, ஆடிப்பாடி யெழுந்தோடி விழுந்து, அழுது சிரித்து, தேடித்திரிந்து, உலகத்தைத் துறந்து மறந்து மதிக்காமலிருந்ததால், இவர்க்குப் பேயாழ்வாரென்ற திருநாமம் வாய்த்தது. பரமபக்தியிலும், பகவத் குணானுபவத்திலும் இவர் மற்ற யாவரையும் மிஞ்சினதாலும், திருமழிசைப் பிரானைத் திருமாலுக்காட்படுத்தித் தான் பெற்ற பேற்றை யவரும் பெறுமாறு செய்ததாலும், இவருக்கு மாத்திரம் 'மஹதாஹ்வயரென்ற (மஹானென்று சொல்லத் தகுந்தவர்) சிறப்புப் பெயர் விளங்குகிறது.

(இம்மூவரின் அவதார காலத்தை மூவாயிரப்படி குருபரம்பரையில் 862, 962 என்றும், ஆழ்வார்கள் சரித்திரத்தில் 862, 932 என்றும் சொல்லியிருக்கின்றது).

சேனை முதலியாரென்ற விஷ்வக்ஸேனர் பரமபதத்திலிருந்து எழுந்தருளி, இவர்களுக்கு ஸகல ஸமஸ்காரங்களைச் செய்து, பெரிய திருமந்திரத்தையுபதேசித்தார். அதனால் இவர்கள் தாமஸ ராஜஸ குணங்களை யொழித்துச், சுத்த ஸத்துவமயராய் விளங்கினார்கள். எம்பெருமானுக்குச் சேஷபூதர்களாய், "எற்றைக்கு மேழேழ் பிறவிக்கு முன்றன்னோடுற்றோமேயாவோம், உனக்கே நாமாட் செய்வோம், மற்று நங்காமங்கள் மாற்று" என்றபடி, பகவத் கைங்கர்யத்தையே பரம புருஷார்த்தமாய்க் கோறி, "உண்டியே யுடையே யுகந்து" நிற்கும் "நாட்டு மானிடத்தோ டெனக்கரிதென்று, ஊணுறக்கமின்றி, ஸர்வேசனுடைய குணானுபவாம்ருதபானம் செய்து,

ஒருவரை யொருவரறியாமல், பகலில் தங்கினவிடத்தில் இரவில் தங்காமல் திவ்ய தேச யாத்திரை செய்துகொண்டிருந்தார்கள்.

எம்பெருமான் இவர்களுடைய அவதார காரியத்தைத் தலைக்கட்டி, ஜீவகோடிகளைக் கடைத்தேற்றுவிப்பதற்குச் சமயம் வந்ததைக் கண்டு, "சிரேறு மறையாளர் நிறைந்த செல்வத திருக்கோவிலூரிலே" வந்து சேரும்படி தோறறுவித்தார். அங்கே பெரு மழையையும் கள்ளிருளையும் உண்டாக்கி இம்மூவரையும் ஓரிடத்தில் சேர்ப்பித்தார். முதலில் பொய்கையாழ்வார் மிருகண்டு மஹாமுனிவரது திருமாளிகைக்குச் சென்று 'இங்கே தங்க இடமுண்டோ' வென்று கேட்க, 'இவ்விடைக்கழியில் ஒருவர் படுக்க இடமுண்'டென்று அநத திருஹஸ்தர் உபசரித்தார். சற்று நேரத்திற்குப் பிறகு பூதத தாழ்வாரும் அவ்விடத்திற்கு வந்து 'அடியேன் தங்குவதற்கு இநதத திருமாளிகையில் சிறிது இடங்கிடைக்குமோ'வெனப், பொய்கையார் 'ஸ்வாமி! இங்கே ஒருவர் படுக்கலாம், இருவரிருக்கலா' மென்று உபசரித்தழைத்தார். சற்று நேரங்கழித்துப் பேயாழ்வாரும் அங்கே வந்து 'இங்கே ஒருவர் சயனிக்க இடங்கிடைக்குமோ'வென, மற்றிருவரும் 'ஸ்வாமி! இங்கே யொருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலா' மென்று உபசரித்தழைத்தார்கள். பிறகு அவர்கள் ஒருவரை யொருவர் தண்டம் ஸமர்ப்பிவித்து க்ஷேமம் விசாரித்துப், பகவத் குணங்களை எடுததுச சொல்லிக்கொண்டிருக்கையில், அந்தத் திருப்பதியில் வாழும் திரிவிக்கிரமன அவர்களுடைய சேர்க்கையை விரும்பி அங்கே சென்று, அவர்களுடன் கலநது நெருக்கினன. அது கண்டு அவர்கள் 'நம்மை யொழிய இங்கொருவருமில்லையே! இப்படி நம்மை நெருக்குகிறவர் யாரெ'ன்று அறிய விரும்பிப் பொய்கையார் ஞான திருஷ்டியால் பார்த்து, லக்ஷ்மீ ஸமேதனய நிதய விபூதியில விளங்குமாறு திவ்ய ஸேவை ஸாதிக்கும் எம்பெருமானைக கண்டு ஈடுபட்டு,

"வையம் தகளியாய் வார்கடலே நெய்யாக,
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே யென்று".

என்னும் பாசுரம் தொடங்கி முதல் திருவந்தாதியைப் பாடினார். பூதத்தாழ்வார் ஞான திருஷ்டியால் திரிவிக்கிரமனைக் கண்டு களித்து,

"அன்பே தகளியா யார்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்"

என்று தொடங்கி இரண்டாந திருவந்தாதியை பாடியருளினர்: பேயாழ்வார தான் அகக்கண்ணல் கண்டனுபவித்த சுடரொளியை,

"திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன், மிகழும
அருக்கனணி நிறமுங் கண்டேன்—செருக்கிளரும
பொன்னழி கண்டேன், புரிசசங்கைக் கண்டேன,
எனனழி வண்ணனபா லின்று"

என்று தொடங்கி மூன்றாந் திருவந்தாதியைத் திருவாய்மலர்ந் தருளி ஜகததை வாழ்வித்தார்.

பிறகு இநத யோகிகள் எம்பெருமானிடத்தில் விடை பெற்று, திவ்ய தேச யாதரை செய்துகொண்டு போக பலத்தால் இவ்வுலகில் 3325 வருஷங்கள் வாழ்ந்திருந்து, முடிவில் திருக்கோவலூரையடைந்து நித்ய விபூதிக்கு எழுந்தருளினர்கள்.

இம்மூவரும் ஆழ்வார்க ளெல்லோர்க்கும் முன்பே தோன்றினதா லும், பிற்காலததில் செய்யப்பட்ட பிரபந்தங்கள் யாவற்றிற்கும் லக்ஷணக் கிரந்தங்களாகுமபடி மூனறு திருவநதாதிகளையும இயறறினதாலும், இவர் களுக்கு முதலாழ்வார்களென்று திருநாமம விளங்குமட.

## முதற்றிருவந்தாதி

இது நாலாயிரப் பிரபநதததில் மூன்றாவது ஆயிரத்தில் முத லாவது பிரபந்தம. இதில் 100 பாசுரங்கள உள்ளன. இதற்கு வியாக் கியானம் செய்தருளினவர் பெரிய வாசசானபிள்ளை. இதறகு, அரும் பதம் சாதிததவர் மணவாளமாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களில் ஒருவ ரான அப்பிள்ளை. இதறகு சிங்கபபெருமாள் கோவில மாடபூசி ராமானுஜா சாரியர் பிரதிபதம் செய்திருககிறார். இதற்கு முதலியாண்டான் "கைதை சேர" என்ற தனியனை அருளிச செய்திருக்கிறார்.

ஆழ்வார்களில் மற்றவரைககாட்டிலும் எம்பெருமானிடத்தில் உள்ள எல்லையற்ற பரேமையால் முதலாழவாாகள் மூவரையும் நித்யஸூரிகளுக்கு இணையாய்ப் போற்றுவதுண்டு. "இன் கவி பாடும் பரமகவிகள்", "செந் தமிழ் பாடுவார்" எனறும பெயர் பெற்ற இவர்கள, பகவத் விஷயத்தில ஆழ்ந்து ஈடுபட்டதால், உலக விரோதமான நடையும் ஒழுக்கமு முள்ளவர். முதலாழ்வார் ஞானதசையில் மேலானவர். பூதத்தார்க்கு ஞானம் முற்றி பக்தியாய் விளங்கிற்று. பேயாழ்வாருக்குப், பக்தியுடையராய் அவனை யொ ழிய செல்லாதவர்களுடைய ஸாக்ஷாத்காரம் பிறநதது. ஆனாலும் இம்மூ

வர்க்கும் அர்த்தம் ஒன்றே. மூன்று ரிஷிகள் கூடி ஒரு வியாகரணத்திற்கு ஆசிரியரானாற்போல, முனித்ரயம் சேர்ந்து பாடின ஒரே நூலாகும். பூமியை அகலாகவும் பெருங் கடலை நெய்யாகவும் ஸூரியனைத் தீபமாகவும் ஸர்வேசுவரனை யறிந்து, அவனுடைய திருவடிகளில் துன்பமாகிற கடல் நீங்கவேண்டுமென்று பாட்டுகளால் தொடுத்த பாமாலையைச் சூட்டினேனென்றார் முதலாழ்வார். இம் மூவர்க்குமசேவை ஸாதித்து ஞானக்கண்ணிற்கு விஷயமாய்க் கவிபாடச்செய்த திருக்கோவிலூரில நித்யவாஸஞ் செய்யும் திரிவிக்ரமப் பெருமானையே பரமபொருளாய்க் கொண்டு இவர்கள் அடிக்கடி போற்றுவார்கள்.

இவர்கள் அருளிச்செய்த பாசுரங்களில ஒவ்வொன்றும் ரத்னதீபம் போல் விளங்குகின்றதால், சிலவற்றைச சிலாக்கியமாய் எடுத்துச் சொல்லப் புகுவது சாத்தியமல்ல. ஆயினும இச்சிறு நூலின் எல்லையையே அளவாக வைத்துக்கொண்டு சொல்லத்துணிகிறேன.

1. காப்பாபையில கட்டுண்டு கிடநதபொழுதே ரங்கநாதனுடைய விஷயங்களை ஸாக்ஷாதகாரமாய்க் கண்டேன், கைதொழுதேன, ஒரு அம்சத்தையாவது மறநதறியமாட்டேன. அறிவில்லாதவர்களே! நான் இப்பொழுது அவனை மறப்பேனோ?

2. என் வாய் அவனை யொழிய வேறொருவனைத துதிக்காது; கை வேறாக மனநதவனையே தொழும, கண்கள் பூதனையைக கொன்றவனையே காணும, செவி அவனுடைய திருநாமமல்லாதனதைக் கேளாது, வாக்கு, கண், செவி, மூக்கு, உடல் என்ற ஞானேநதிரியங்களும, பூதமைநதும், அழிவற்ற ஞானமும யாகமும் தாமும் ஸர்வேசுவரனை அடைவதறகுத் தகுந்த உபாயமென்று பெரியோர சொல்வதுண்டு.

3. பாம்பின் மேல் பள்ளிகொண்டானை ஸாக்ஷாத்கரித்துத் தொழுதேன். பலபகலும பழுதாயப் போயினவேயென்று அஞ்சியழுதேன், கலக்கம் போம்படி உள்ளத்தை நன்றாக நிறுத்திப் புத்தியால் தெளிவாய் நன்கு அறிந்தவர்களுடைய மனது வருத்தமறத், தன் தாயைத தேடும் கன்று போல், அவனுடைய திருவடிகளையே விரும்பிச சென்று நாடிக்கொள்ளும்.

4. நான்முகனை உநதியில இருத்தி, அவனுக்கு வேதத்தை உபதேசித்த பெரியானுடைய திருநாமத்தை புத்தியால் சிந்திக்காமல், ஜபித்துக் கணக்கெண்ணும் ஸநதியாவநதனம முதலிய கர்மத்தால் கிட்டும் பயன் யாது?

5. மனமே! எக்காலத்திலும் வேறு காரணத்தாலாவது அந்த சக்கிர பாணியைப் புகழ்வாய். கைவிடமாட்டேனென்ற சொல்லையே சிந்தித்து உறுதியாயிரு. இன்றுமுதலாக மலைபோன்ற குற்றங்களைச் செய்யினும் அவன்

அவைகளைக் குணமாய்க் கொள்வானன்றோ? அதற்காகவே அவன் லீலா விபூதிக்கு எழுந்தருளுவது.

6. அவனுடைய திருவடிகளில் திருத்துழாயைச் சாற்றி ஜலத்தை ஸமர்ப்பித்து அடியார் தாங்களே தொழாநிற்பர். மனத்திலுள்ள அஜ்ஞானம் தீரும். அரிய வினைகளும் கிட்டா. தனமான பக்தியும் தானே கைகூடும்.

7. பிராட்டியோடு கூடின ஸர்வேச்வரனுக்கு உலாவும் பொழுது திருவனந்தாழ்வான குடையாயிருப்பார், எழுந்தருளியிருக்கையில் சிங்காதனமாய் விளங்குவார், நின்றால் மரவடியாய்த் தோன்றுவார், விசாலமான பாற கடலில், பள்ளிகொள்ளும்போது தெப்பமாயிருப்பார், ரத்தினத்தால் செய்யப்பட்ட தீபமாயிருப்பார், அழகிய பரிவட்டமாயுமிருப்பார், தழுவிக் கொள்ளும் மெத்தையாயு மிருப்பார்.

8. திருநாமத்தை வாயில் வரும்படி பலகால் சொல்லுவதே யொழிய எம்பிரானை யார் அறிவார்? அது நிற்க, அவருடைய நாபியில் உதித்த நான் முகனே அந்த அடிக் கமலத்தை யறிந்தானோ?

9. பக்கத்திலிருக்கிற பிரபலமான பாபத்தைக் குறித்து அஞ்சினேன், அஞ்சி உய்ய நின் திருவடிகளை அடைய இன்பமாயிருக்கும் பாமாலை கொண்டு தொழுது, நமோ நாராயணாவென்னும் சொன்மாலை சாற்றக்கற்

10. அநாதிகாலமாய் என்னை வந்தடைந்த கொடும் பாபம் துன்பம் நோய் கெட்ட நடத்தை முதலியவை மறுபடியும் திரும்பிவராமல் போக வேண்டுமென்றிருந்தால், மலர்மங்கையைக் கொண்டுபோன அரக்கனுடைய பலம் அழியச் சரந்தொடுத்த திருக்கையானே உபாயங்காண்.

11. சதுர்முக பிரம்மா முதல பல பல பிறவிகளில் கிடந்துழலும் ஆத்ம கோடிகளுக் கெல்லாம் ரக்ஷகனான அவனை யன்றி வேறொன்றை இவ்வுலகம் அறியுமோ?

12. ஸர்வேச்வரனுடைய பொருளான ஆத்மாவை என்னுடையதென்று விரும்பேன். தாழ்ந்த ஸம்ஸாரிகளோடு சேரேன். உயர்ந்த ஸ்ரீவைஷ்ணவராக எல்லாதவர்களுடன் ஸஹவாஸம் செய்யேன். ஸ்ரீபதியை யல்லாதுவேறு சிலரைத் தைவமென்று எத்தேன். ஆச்சரியப்படமாட்டேன். என்மேல் பாபம் வருவதெங்கே?

13. நினைத்தற்கு அரியனாய், தூரத்திலிருக்கிறவனாய், ஆயிரம் பெயர்களையுடையவனாய், செங்கண்ணனாய், கரியானாய் விளங்கும் அவனைக் கை தொழுதக் கால், கர்மபந்தத்தில் கட்டுப்படார், கொடிய நரகில் சேரார், ஒருநாளும் கெட்டவழியில் செல்லார்.

14. காலையெழுந்து, உலகத்தார் கற்குமவை யெல்லாம் கற்று, அறிந்தவர்களாய் உயர்த்தியையுடைய வைதிகர்கள் ஆசைப்படுவனவும் ஆழியானுடைய பாதங்களையே, சொல்லுவதும் தியானிப்பதும் சாரங்கபாணியின் திருநாமங்களையே உலகிலுள்ள ஆறுகள் யாவும் பெருங்கடலையே நோக்கிச்செல்லும், அழகு வாய்ந்த கமலமும் ஆகாயத்தில் ஓங்கிவளரும் ஸூரியனையே விரும்பும், ஜீவன்களும் முடிவில் காலனையே காண்பார். அப்படியே, ஞானமும் கமலா காந்தனை திருமால் ஒருவனையே விரும்பும். பரமபத நாதா! லீலாவிபூதியை படைத்தவனே! வேங்கடவா! நான்மறையின் அகப்பொருளே! காலமெல்லாம் ஒன்று கூடினாலும் உன் பெருமையை உணர்வார் யார்? உன உருவந்தன்னை உணர்வார் யார்? நீ கிடந்த பாற்கடலை உணர்வார் யார்? இவ்வுடம்பு விழுமளவும் திருமாலை அழகிய மாலைகளாலும் யாகங்களாலும் மந்திரமில்லாத கிரியைகளாலும், கிரியைகளிலலாத மந்திரங்களாலும தொழுங்கள். வாக்கு சொல்லுமளவும் திருநாமங்களாலே புகழ்வீர், அது உங்களுக்கு நன்று.

15. கம்பீரமான மனமே! நோயையும கிழத்தனத்தையும் நன்றாய் விட்டு, நாலு யுகங்களில் ஸ்திரமாயிருந்து, பூமியோடு கூடின அண்டமெல்லாம் ஆண்டாலும, கண்ணனிடத்தில் அன்பை என்றும விடவேண்டாம். மன்றாடி வேண்டுகிறேன்.

16. ப்ரீதிக்கு ஆதாரமான மனம, திருவாழியானைக் கிட்டு என்று சொல்லும, நாவு அவனுடைய திருத்தோள்களைப் பரக்கச் சொல்லித் துதியென்று பேசும, கண் ஸ்ரீதரனையே பாரென்று சொல்லும, செவி அந்துழாய் மாலைக்குடையவனுடைய புகழையே கேளென்று சொல்லும.

17. என் நெஞ்சே அவனைத் துதித்தாலும் துதி, நிந்தித்தாலும் நிந்தி, அனுதாபவு செய்தாலும் செய், அல்லது விரும்பினாலும் விரும்பு. ஏழுகடலையும் எண்மலையையும் திறந்த ஆகாயத்தையும் காற்றையும் உடலையும உயிரையும் தரித்தவனவனே.

18. "ஏற்றான், புள்ளூர்ந்தான், எயிலெரித்தான், மார்விடந்தான்,
நீற்றான, நிழல்மணி வண்ணத்தான்—கூற்றொருபால்
மங்கையான் பூமகளான் வார்சடையான், நீண்முடியான்.
கங்கையான் நீள்கழலான் காப்பு"

• எருதையுடையவனாய், திரிபுரத்தை எரித்தவனாய், சுடலைச் சாம்பலைப் பூசினவனாய், உடலின் ஒரு பக்கத்தில உமையைத் தரித்தவனாய், தாழ்ந்து விளங்கும சடையை யுடையவனாய், கங்கையைச் சிரமேல் தரித்தவனான ருத்திரன், பெரிய திருவடியை வாஹனமாயுடையவனாய், ஹிரணியனுடைய மார்பைப் பிளந்தவனாய், குளிர்ந்த நீலமணி போன்ற வடிவையுடையவனாய், கமலப்பூவில் வஸிக்கும் பிராட்டியையுடையவனாய், நீண்ட கிரீடத்தை

புடையவனாய், நீண்ட திருவடிகளையுடையவனான விஷ்ணுவின் ரக்ஷையா யிருப்பான்.

(இப்பாசுரத்தில் ஆழ்வாரின் விசால நோக்கும் மதத்வேஷமற்ற நேர்மையும் பக்ஷபாதமில்லாத ஸமபுத்தியும் விளங்கும். ஆனால் இதை மதாபிமானத்தால வேறு அர்த்தம் செய்வாருமுளர். அதாவது "இது இவனுக்கு ஏற்றமாகச் சொல்லுவானேன். அல்லாத ருத்திரனும் இப்படிச் சேஷியாயன்றோ இருப்பதென்னில், அவனுடைய பிரசாரங்களைப் பார்த்தால் ரக்ஷியமாய்த் தோன்றும், இவனைப் பார்த்தால் ரக்ஷகனா யிருக்கு மென்கிறது"

"இருவரின் குணங்களைக் கணித்தால ஏற்றத் தாழ்வு விளங்கும். திருமாலே ருத்திரனுக்குக் காப்பென்றும் பொருள கொள்ளும். அவன் சேஷனானதால இவனோடு வாசியில்லை, உடனாமுமிருமபோலவே").

19. உன்னைத் தியானித்தால் ரக்ஷகரான யமன் முதலானோர் நீங்குவார்; உன்னைத் தியானித்தால கரூரமான காமபந்தங்கள் விடடொழியும; உன்னைச் சிந்திப்பார்க்குக் கிழத்தனம் முதலிய விகாரங்களில்லை, உன்னடியை வந்தனை செய்வார் ஒப்பற்ற பதத்தை யடைவார.

20. பக்திமார்க்கத்தில் ஸ்திரமாயிருந்து உன்னைத் தொழுபவர், அழிவில்லாத வேதத்தால் போற்றப்படும ஸ்வரூபத்தையுடையவராவர. உன திருப்தியான திருமலை, ஒரு குறையும பாராத வண்ணம பரமபதத்தைக் கொடுக்கும்.

21. இந்த ஸம்ஸார துக்கத்தை யார் படுவார்? நெஞ்சமே! எழுந்திரு. இனி நமக்கு இடையூறுகள் வந்தால் முந்தி பட்டபாடு படுமன்றோ?

22. தானம் வாங்கின திருமாலை உலகத்தார பழிப்பாரல்லது தானங் கொடுத்த மாபலியைப பழிப்பாருண்டோ? ஸர்வேசுவரனுடைய பொருளான பூமியைத் தனதென்று அக்ஞானத்தால் மதித்து, அவருக்கே கொடுத்த துணிந்த அவனுடைய மனத தன்மையை யார் கண்டு நிந்திப்பார்?

23. குன்றெடுத்துக் காத்த குணக்கடலே! வீட்டிற்கு வெளியில் போகாமலும் உள்ளே புகாமலும அழகிய திருக்கோவலூரில் இடைக்கழியில் (நடுத்தலம்) நின்று நீயும் திருமகளுமாய் எனக்கு ஸேவை ஸாதித்தாய். என்ன ஆச்சரியம்! (திரிவிக்ரமனை லக்ஷ்மியுடன் முதலாழ்வார்களுடன் கலந்து நின்று ஞானக் கண்ணிறகுத தோன்றின விஷயத்தை இந்தப் பாசுரத்தால் நிரூபிக்கிறார்.)

24. உன் திருவடிகளைக் காண்பதற்கு இந்த ஜம்பூத்வீபத்திலுள்ளோர் உபாயத்தை என்றுமறிந்தனர். ஆனபின்பு ஏழுவிதமான நரகத்தின்

வாசல்களில் இனிப் புகுவார் யார்? கோபித்துக்கொள்ளாமல் உறுதியான பூட்டைப் பூட்டுங்கள்.

25. விரும்பினாலும் உன் பாதங்களையே விரும்புவேன், நாள்தோறும் பாடினாலும் உன் புகழையே பாடுவேன், சூடினாலும் உன் பொன்னடிகளையே தலையில் சூடுவேன். எனக்கு இனி எப்படியானாலென்ன?

26. எனக்கு ஒப்பானவர் யாருமில்லை. ஸர்வேசுவரன் தானே தனக்கு ஒப்பாமல்லாது எனக்கொப்பாவனோ? தன்னிலத்திலிருக்கிற காயாம்பூவின் நிறமும் மலரும் உன் திருமேனியை ஒன்றுக்க காட்டும்.

27. மாம்ஸமயமான இந்தக் குடிசையில் உள்ளே நுழைந்து அஞ்ஞானத்தை நீக்கி, ஞானமாகிற விளக்கை ஏற்றி உன் திருவடிகளை நாள்தோறும் கிட்டாதவருக்குப் பரமபதம் கிட்டுமோ?

28 நா வாயிலுண்டே, நமோ நாரணாவென்று
ஓவாதுரைக்கு முரையுண்டே—மூவாத
மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே, என்னொருவர்
தீக்கதிக்கண் செல்லுந் திறம்.

வாயில் நாக்கு இருக்கிறதே; ஓயாமல் நமோ நாராயணாவென்று சொல்லும்படியான உன் திருமந்திரம் இருக்கிறதே. கிழமுதலில்லாத மேலான மோக்ஷமார்க்கத்தில் போவதற்கு உபாயமிருக்கிறதே. ஒருவர் துர்மார்க்கங்களிலே போவதற்குக் காரணமென்ன?

29. என்னெஞ்சமே! பாபம் புண்ணியம், பூமி கடல் காற்று ஆகாயம் இவைகளுக்கும் மேலான தத்துவங்களுக்கும் அவனே ஸ்வாமியென்று உறுதிகொள்.

30. பொன் போல பிரகாசிக்கும் வடிவையும், பின்னப்பட்ட சடையையும், அழகிய புண்ணியத்தையுமுடைய ருத்திரனும், நின்று உலகத்தை யளந்த ஸர்வேசுவரனும், ஸர்வ காலத்திலும் இரண்டு சரீரத்தையுடையவராய் ஸஞ்சரித்தாலும், புண்யனான ஒருத்தன் நெடுமாலான ஒருவனுடைய சரீரத்தைப்பற்றி எக்காலத்திலும் உள்ளன. (இவ்விடத்தில் விஷ்ணு ருத்ரர்களுக்குள்ள ஸம்பந்தத்தை ஆழ்வார் விளக்குகிறார்.)

31. நெஞ்சே! புருஷோத்தமன் நமக்காகவே இருக்கிறான், எக்காலத்திலும் நம்மைக் காப்பதற்கே இருக்கிறான், தியானிப்பவர்களுடைய நெஞ்சத்திலே எப்பொழுதும் விளங்குகிறான், திருப்பாற்கடலிலே உள்ளவனும், திருமலையில் வசிப்பவனும், நமது உள்ளத்தில் நித்ய வாஸம் பண்ணுகிறவனேயென்று புத்திபண்ணு.

32. நெஞ்சமே! ஒரு அடியால் உலகை அளந்தவனைக், கேசவனைக், குளிர்ந்த திருத்துழாய் மாலையணியும் ஸ்ரீபதியை, மனத்திலே நாட்டிக்கொள். இப்படிச் செய்தால் உலகை யளந்த ஓரடியையும், சகடத்தை உதைத்த சேவடியையும், நித்ய ஸூரிகளால் போற்றப்படும் இரண்டு திருவடிகளையும் கண்டு கடைத்தேறலாம்.

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாந் திருவந்தாதி



இது இயற்பாவில் இரண்டாவது பிரபந்தம். இதில் பாசுரங்கள் 100. இதற்கும் முன் சொன்ன உரைகள் உள. இதற்குத் தனியன் திருக்குருகைப் பிரான் பிள்ளானால் அருளிச்செய்யப் பட்டது. முதல் திருவந்தாதியில், நித்யவிபூதி லீலாவிபூதியென்ற உபய விபூதிகளால் விளங்கும் மாதவனே ஜகத்திற்குச் சேஷி யென்றார். இங்கே அந்த விபூதியையும் தம்முடைய பக்தியாலே தியானித்துப், பக்திபரவசராய்க் கவி பாடுகிறார். பொய்கையாருக்கு இந்தப் பக்தியில்லையோவெனில், உண்டு. காரிய காரண ரூபமான பேதமேயுள்ளது. உபய விபூதியையும் தியானித்துப் பிறந்த ஞானம் அவருடையது. அது பக்வமாய்ப் பக்தி ரூபமான ஸ்திதி இவருடையது. ஆழ்வார்கள் ஒருவர்க்கொருவர் உள்ளத்தை நன்றாயறிந்தவர்கள். இவர் பக்தியையே அகலாகவும், ஆசையையே நெய்யாகவும் ஆனந்தத்தால் கரைந்திருக்கிற மனத்தையே போடத்தக்க திரியாகவும் செய்து, மெய் ஞானத்தைப் போதிப்பதாய, தமிழ் ரூபமான பாசுரங்களைப் பாடி, ஞானஸ்வரூபமான ஆத்மா உருகிக் கரைந்து, கேசவனுக்குப் பரபக்தி யென்ற சுடரொளித் தீபத்தை ஏற்றினேனென்று.

1. "அன்பே தகளியா, ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா — நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான்"

என்று இத்திருவந்தாதியை ஆரம்பிக்கிறார்.

2. ஸர்வ சேஷியான ஸ்ரீபதியின் திருநாமங்களையும், இதைக்காட்டிலும் வேறான குணங்களைச் சொல்லும் திருநாமங்களையும் ஞானத்தால் நன்றாயறிந்து பக்தியால் சொன்னால், நமக்குப் பந்துவாய்க் கைங்கரியமே செய்வோரான நித்ய ஸூரிகளுக்கு ஸமமாய் நம்மையும் அவன் ஸ்ரீ வைகுண்டத்தில் சேர்ப்பிப்பான்.

3. என் மனத்தை நகரமாகச் செய்து, பிரகாசிக்கும் மாணிக்க வைரங்களான என் எல்லையற்ற அன்பையே சேகரித்து, ஸ்நேஹமாகிற முத்தை சேர்த்தியான மலராய் ஸமர்ப்பித்து, ஒப்பில்லாத அழகிய தாமரைப்பூவை ஏந்திக்கொண்டு, பிராட்டியை அந்தத் திருமேனியில் வலது திருமார்பில் வைத்துக்கொண்டவனுடைய திருவடிகளைப் பணிந்தேன்.

4. குணதோஷங்களை யறிந்து, ஐந்து இந்திரியங்களையும் சரீரத்திற் குள்ளடக்கி, விஷய ஸுகங்களில் போகாமற் செய்து, சுத்தமான மலர்களை ஸம்பாதித்து, ப்ரீதியால் மிகுந்த மனதையுடையவராய், நன்றாகத் தெரிந்து கொண்டு அவனுடைய திருநாமத்தை ஓதித் துதிக்கும் மஹாபாக்யசாலிகள் அவனுடைய திருவடிகளை நேரில் காண்பார். மற்ற தைவங்களைப் போற்றி அனுபவித்த ஸுகம் சிறிது; துக்கம் பெரிது. பிரஹ்மாதி தேவர்களும் உன் வாசலிலிருந்து தினந்தோறும் உன் பாதங்களைத் தொழுது மோக்ஷத் திற்கும் பூமிக்கும் நடுவிலிருக்கிற ஸுகத்தை யடைந்தார்கள்.

5. சரணடையத் தகுந்த அந்தத் தேவாகளென்றும் சரணடையும் இம்மனிதர்களென்று பேதமில்லை. அவனுடைய திருவடிகளைத் தொழுது துதிக்காதவர் யார் ?

6. வயிற்றைப் பெரிய ஸுராகச செய்து, பிறரால் ஏறிட்ட தீமைகளை யும் புத்தி பூர்வமாகச் செய்த தீமைகளையும் ஸம்பாதித்து, இவ்வுல கத்தில் பாக்யத்தை அனுபவிப்போர்களை மதிக்காமல், புத்தியற்றவர்களே! பகவானுடைய திருநாமங்களை யோதி, ஸஞ்சரித்து ஜகத்திலுள்ள மற்றவரை யும் பரிசுத்தப் படுத்துகிறவர்களாகக் கடவீர.

7. தனக்கு எம்பெருமானிடத்தில் அடிமைத் தனம் நேர்ந்ததென்று தானே தெரிந்துகொள்ளாமற் போனாலும், அவனை மனதில் புகும்படி ஸ்தி ரப்படுத்துவதே நமது ஸகல இஷ்டங்களையும் அருளும். காட்டிலுள்ள மேட்டைத் தடாகமாக்கும்படி செய்வதே யல்லாது, அதற்கு மேல் மழை யைப் பெய்யும்படி செய்வாருமுண்டோ?

8. அறியாமற் செய்யும் தப்புகளையும் அறிந்து செய்யும் தப்புகளையும் கைவிட்டு, எக்காலத்திலும் நன்மார்க்கத்திலிருந்து உன்னை அனுபவிப்பார் களும், ஒழிவில்லாமல் வாமனனுடைய திருநாமங்களைச் செவ்வையாய் அறிந்து அழகாய்த் துதிக்கக் காரணங்களைப் பெற்றவர்களும், மேன்மேல் ஸுகத்தை யனுபவிப்பார்கள்.

9. செய்கிறவரான தாங்கள் இருந்தார்களே; தங்களுடைய கருவி யான மனது சரீரத்திற்குள்ளே யிருந்ததே, துதிப்பதற்குக் காலமுமிருந் ததே. ஜகன்னாதனுடைய திருவடிகளைக் கிட்டும்படியான தலையை யுடையரா யிருந்தார்களே, இப்படியிருக்கக் குரூரமான நரகத்தை நேராக அடை வது

10. தாங்கள் ஸர்வசக்திமானாதலால், ஜீவனுடைய தொழில்களை வேறுபடுத்தி மிகவும் முயலும் மஹா புருஷரை அடைந்தால் கிடைப்பதற் கரிய மோக்ஷம் எளிதாகும்.

11. நன்னெஞ்சே! பூர்ணமான அருளாலடையத் தக்க போகத்திற்கும் ஸம்ஸாரத்திற்கும் அவனே பிரபு. பஞ்சேந்திரியங்களுக்கும் அவனே ஸ்வாமி. பஞ்சபூதங்கள் குலவரைகள் மாகடல்கள் வடவாக்கினியென்றவைகளுக்கும் அவனே நாதன். ஆகையால் சென்று அவனைச் சரணம் புகு.

12. திருமாலே! என் மனம் தியானத்தில் ஒருமைப்பட்டுப் பிரீதியை யடைந்தது. என் வாக்கும் உன் திருவடிகளையே துதித்து, சங்க்ரங்களைப் பாடி மகிழ்ந்தது. என் உடல் நர்த்தன்ஞ் செய்வதில் நாடிக்

13. உன் திருவடிகளைத் தூபததாலும அழகிய மலராலும பூஜித்துத்ப்பிரீதியை யுடையவனுகச செய்துகொண்டு துதிதது, இனி என்னிடத்தில் பண்ணின உன கடாக்ஷமாகிற புண்யத்தால உனக்குக் கைங்கரியம் செய்கிறவனுனேன்.

14. ஸ்வாமியே! சப்தாதி விஷயங்களை இனியவை யென்று சிலர் சொல்வா. ஜலம அதைக் காட்டிலும் இனிதெனறு சிலா சொல்வர். விஷய ஸுகங்களையும் ஜலத்தையும் இனி தெனறு ஆசை கொள்ளாமல், உன் பெருமையை யறிநது, அதில் கொஞ்சமாவது ஆசை கொளவார்களேயானுல் அது அவர்களைக் காபாறறும.

15. அறப மனிதாகளால நினைக்கப்படட தங்களுடைய பெருமை அந்த அறபததனத்திலேயே சோதது விடும். பாபபுணயங்களை அறியாதவர்களும புததிருனயாகளாவாாகள். மாயவனைப போல அறபுதமான செய்கைகளைச செயயவலலவன வேறெருவனிலலை யெனறு நினைநது உறுதிபபடு.

16. உன திருவடிகளை ஏறறிப பணியாவிட்டால நாஙகளெடுக்கும பல பிறவிகளும துக்கரூபமாய விளையும.

17. தனக்கும பிறாக்குமான இருவருடைய தனதைை நமக்கு வேண்டுமெனறு பிரமிததிராமல, தங்களுக்கு எக்காலத்திலும் காப்பு இதேயென்று தெரிநதுகொண்டு, நமக்கு எக்காலததிலும மாதவனே அடைக்கலமென்கிற சிநதையையுடையவராய், அதறகு மேல் அவனுடைய திருநாமங்களைச் சொல்வதே வேதமாகும்.

18. வேதத்தின் தாத்பரியத்தை அறியாதவர்களே! வேதத்தின் அாததத்தை அறியமுடியாததால் புருஷோத்தமனுடைய திருநாமத்தைத் துதிக்கும் திறமே வேதததின் முடிவென்றும், அதின் ஸாரஸங்கிரஹமென்றும் அறியுங்கள்.

19. வயது முதிர்ந்து, ஆவி மெலிநது, சரீரமெங்கும் கோழை பரவிநின்று கழுத்தில் அடங்கும்படி இழுத்துக்கொண்டு அடைப்பதற்கு

முன்னமே லக்ஷ்மீ நாதனுடைய திருவடிகளை நினைக்கக்கடவீர். விஷய ஸுகங்கள் அறபமென்று அபிநதும் அவ்வறிவின் பிரயோஜனமான தியாகத்தைச் செய்யாத ஸுகானுபவத்தால் லாபமென்ன?

20. புருஷார்த்தமென்கிற புத்தியால் தேவலோகத்தில் பிரவேசிப் பதற்கு முயற்சி செய்யக்கூடாது. அவனுடைய கிருபையாலே புண்யலோ கங்களை அவனே கொடுக்கப் பெறலாமன்றோ? வைதிகர்களுக்கு அருளால் மோக்ஷத்தைக் கொடுத்த அநத மஹாவிஷ்ணுவின் திருவடிகளையே நீ மற வாமல் தியானஞ் செய்யக்கடவாய்.

21. உன நீண்டழகிய தோளகளைக் காண உன்னையே தியானிப் பேன். இப்படி நினைப்பவர்கள் ஒருவிதமான பிறப்பையும் கிட்டார்கள். ஓரிடத்தில் பிறந்தவா, பிறநது அடையும் பெரிய ஸுகங்களையும், உன்னைத் தொழுபவாகள் பொருட்படுததாமல் தளளுவாா.

22. அவனுடைய பாதகமலங்களை யார் தொழுவரோ அவருடைய சரணங்களைத் தொழுவதே எனக்கழகு. என கைகள் பண்ணும் சிறப்பு.

23. சிரேஷ்டரான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு போகத்தக்க அர்சிராதிமார்க்கத்திற்கு ஸஹாயமாய் இருக்கும அவனுடைய திருநாமத்தை மற ந்தவர்களை மனிதர்களாக நினையேன்.

24. அவனுடைய சரண கமலங்களை ஆச்ரயித்துத் தனம் உண் டென்று காவப்படாா, முனபு உண்டாயிறறு, இப்பொழுது இல்லையென்று கவலை அவாகளைக் கிட்டாது.

25. திருமாலிருஞ்சோலை, திருமலையென்ற இவ்விரண்டும் நீ உகந் தருளின திருப்பதிகளென்று எண்ணுவதுபோல், என் மனதும் நீ உகந்து பள்ளிகொள்ளும் திருக்கோயிலென்று எண்ணவேண்டும். இதையே வேண்டினேன்.

26. வரதராஜனே! ஏழ பிறப்பிலும் எலலா நிலைமையிலும் உன் னையே துதித்து, உன்னை விட்டகலாத இயறகையை உடையவனுதால், எக்காலததிலும் உன்னை மறந்தறியேன். நீ எனக்கு ஆனந்தக் கடலைக் கொடுத்தருளவேணுங்கான்.

27. திருமாலை ஸேவிக்க வேண்டுமென்று பொங்கித்ததும்புகின்ற பிரீதி அமைக்கப்போகாமல் தோன்றினால், அடங்கி யிருக்க வேணுமென்று விசாரித்தால் அடங்குமோ?

28. திருமகளுடன் நின்றருளும தைவத்தை நாவால் துதிக்கும் கர் மத்தில் உறுதியாயிருங்கள். நாங்கள் எமக்கு ஸ்வாமியான ரமாகாந்தனுடைய

திருவடிகளை சேஷ சேஷி பாவமென்ற ஸம்பந்தத்தை ஒட்டித், திருநாமங்களைக் கொண்டு துதித்தோம். எட்டுத்திக்கிலுமுள்ளவர்களே! கேட்டீர்களோ?

29. ஒருபடியாயிருக்கும் ஸ்வரூபத்தையுடையவனன்று; தன்னை அண்டினவர்க்கெளியவனாய் விளங்கும் ஸ்வரூபமே உன்னுருவம்; இப்புவியிலுள்ளோர் இவ்விரண்டு ஸ்வரூபத்தையுடையவனென்று உன்னைச் சொல்லுவர். ஆனால் அடியார்க்கெளியவனான உன்னுருவமே ஜகத் காரணமாய்த் தொண்டர் உய்யும் வண்ணமாய் விளங்கிறதென்று அறிவார்களே. எல்லோர்க்கும் உடதேசிப்பதான நியாயத்தால இப்பூமியை எப்பொழுதும் ரக்ஷிப்பார்கள்.

30. கண்ணனே நம் பாவங்களுக்குச் சத்ருவென்று நினைத்து வணங்கினேன். அறிவில்லாமையால் இதற்கு முன்பு இப்படி யொரு புருஷார்த்த முண்டென்று அறியேன், பெற்றறியேன்.

31. கண்ணா! இதிஹாஸ புராணங்களுடைய தாத்பரியத்தை உள்ளபடியே அறிந்து துதித்தால் முக்யமான அர்த்தங்களும் உனக்கு வாசகமான திருநாமமாகவே யிருக்கும். விசேஷமாய்ச் சொல்லப்படுகிற சப்தங்களுக்கு நீயே பொருள். உன்னைப் பரிபூர்ணமான மொழிகளால் துதித்துக் காண எனக்கு அருள் செய்வாய்.

32. உன திருமேனியைப் பணிந்தேன். உன் சேவடிமேல் அழகிய கமலங்களை அன்பாய்ச் சாற்றினேன். விரும்பி உன்னை ஏற்றினேன். இந்தத் தேஹம் விழுந்தபின் புகும் ஸ்ரீவைகுண்டத்தில் உன்னை ஸாக்ஷாத்காரஞ் செய்து அவ்விடத்திலேயே யிருந்து துதி செய்து வாழவதென்ற இப்புருஷார்த்தத்தில் துணிந்தேன்.

33. நன்னெஞ்சே! இந்த ஸம்ஸாரம் துக்கரூபமென்றும் தோஷங்கள் நிறைந்ததென்றும் கண்டாய். நாம் அனுபவித்ததெல்லாம் இந்தத் துக்கமே கண்டாய். ஸர்வ சேஷியான அவனுடைய திருநாமத்தை ஓதி நரகம்போன்ற ஸம்ஸாரத்தினருகிலும் செல்லாமைக்குக் காரணம் இதே கண்டாய். இந்தத் தோஷங்களை ஆராய்ந்தறிய வலிமை யிருந்தால் பார்.

34. உன் திருமேனியைக் கனவில் கண்டதுபோல் கண்டேன். அக்கனவில் உன் திருக்கையில் விளங்கும் சுடர் திரு சக்கரத்தைக் கண்டேன். ஆத்மாவுடன் கூடியும் துக்கத்தை விளைவிப்பதுமான புண்ய பாபங்களிரண்டையும் துரத்தி விட்டுப் பினனும திரும்பி வரக் கட்வதாய்ச் செய்யும் வாஸனையைப் போக்கடிக்கும் உன் சக்தியையும் கண்டேன்.

35. எல்லையற்ற புகழும் தடையற்ற அதிகாரமும் நினைப்பதற்கரிய செல்வமும் வாய்ந்த இப்புவியை யாளும் ராஜ ராஜாக்களும், எண்ணிறந்த

பிறவிகளிலும் அவனுடைய திருவடிகளில் நறுமலரைச் சாற்றினவர்களான பக்தாகளே.

36. ஏழு ஜன்மங்களிலும் எல்லா நிலைமைகளிலும் தபஸைப் பண்ணினவன் நானே. தவத்தின் பலனை யடைந்தவனும் நானே. ஸகல லக்ஷணங்களாலும் நிறைந்ததால் தமிழ் ரூபமாய் விளங்கும் இப்பாமாலையை அவனுடைய திருவடிகளுக்கே சொல்லப் பெற்றேன். பெரிய தமிழ்ப் பண்டிதனும் நானே. மிகவும் சிரேஷ்டனுனேன்.

37. மனமே! புருஷோத்தமனுடைய பாத கமலங்கள் ஆசிரயிக்கத் தகுந்தவை. அவைகளை அழகிய தாமரை மலரால் பூசனை செய்யத் தகும். ஏறறிப்பணிந்து அவனுடைய ஆயிரம் திரு நாமங்களை எக்காலத்திலும் சொல்வதென்ற தவமே உனக்கு உபதேசம்.

38. கைங்கரியத்தைக் கிட்டினேன். அழகிய உன் திருவடிகளை நினைந்தேன். அவைகளின் மேல பிரீதி யுடையவனுய்ப் பரிபூரணனுனேன். அவைகளை அனுபவித்தவாகளுக்கு முன்பு திருமேனியின் அழகைக் கண்ட காலம எப்படியாவதோ ?

39. அக்ஞானமான நள்ளிருளாய் என் ஆயுள் முடியாமல் விடியுங் காலத்தைக்கண்டேன். அதாவது, ஸர்வ வியாபகனை ஸாவேசுவரனைக் கண்டேன். விஷயஙகளினின்றும் திரும்பி ஸ்வபலத்தைக காட்டிலும் தெளிவாய் அவனை நேருக்கு நேராய்க கண்டேன். அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தில் விளங்காநின்ற திருவாழியையும திருச்சோதியையும் விசேஷமாய்க் கண்டனுபவித்தேன்.

40. வேதங்களால அதுவதெனறு சொல்லப்பட்ட பெருமையை யுடைய திருமாலைப பரிபூர்ண மிலலாத குறையுள்ள கொடிய சொற்களால் பாடினேன. அவன் எனக்குக் கொஞ்சமாவது பிரஸாதத்தைச் செய்வனோ வென்று நினைதது எக்காலததிலும் ஏங்கியிருநதேன.

41. அமிருத மென்றும் தேனெனறும் சக்கரபாணி யென்றும் தேவாகளுக்கு அமிருததத்தைப் பகுநது கொடுததவனெனறும் வேதங்களில் சொல்லப்படுகிற அந்தத் திருமாலைத் துதித்து அமிருதம் போன்ற சொல் மாலையால் அவனுடைய திருவடிகளை அலங்கரிததேன.

42. அவனுடைய திருநாமங்களைப் பலகால் சொன்ன கவிகள் அவனைப்பூஜிதது ஆசிரயித்ததால் அடைந்த பயன் ஏதோ ? அண்டினவர்களுடையபூசரீரத்தால செய்யப்படும் தவம் அவனைக் காணமுடியுமோ ? மணிவண்ணனுடைய திருமேனியை நான இபபொழுது எந்தத் தவத்தால் அனுபவிக்கப் பெற்றேன் ?

43. யாதொரு ஸாதனத்தையும் செய்ய முடியாமல் தாயின் கர்ப்பப்பையில் கட்டுண்டு கிடந்த பொழுது, திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கும் என் ஸ்வாமியின் மஹிமையைக் கண்டேன். அவருடைய திருவடிகளை இப்பொழுதுதான் ஆச்ரயித்தேனோ ?

44. திருக்கோயிலில் பள்ளிகொண்ட என் ஸ்வாமியின் வழியைப் பற்றினவர்களுக்கேயொழிய, அனுபவித்து முடிக்கப் போகாத அபாரமான நரகத்தைப் போக்கித், தாங்கள் ஸர்வேச்வரனைக் கிட்டுவதற்கு முன், நித்ய ஸூரிகள் வஸிக்குமிடமான ஸ்ரீ வைகுண்டத்தின் வாசற் கதவு தப்பிறது. இப்பொழுது தெரிந்து கொண்டேன்.

45. அண்டினவர்களுக்குக் கற்பகவிருக்ஷமாய் விளங்கும் எங்கள் ஸ்வாமியைச் சரண்புகுந்த பின், அவனுடைய லீலாவிபூதியில் அடங்கின இந்த லோகங்கள் என் ஆளுகைக்குள் வரமாட்டாவோ ? நித்ய ஸூரிகளுக்கும் பெருமையுடையவனைக் கொண்டு பரமபதத்திலே பொருந்தியிரேனோ?

46. இந்தச் சரீரம் விழுந்த பிறகு கொடிய நரகங்களில் சேராமல், மனங்கலங்கியிருக்கும் நீங்கள் இறப்பதற்கு முன்பே பல பல நூல்களால் நிச்சயிக்கப்பட்ட எம்பெருமானை அடைக்கலமாகப் புகமுயலுங்கள்.

47. கொடிய நரகம் கொடியது கொடியதே. அங்கே சென்ற பின்பும் யமகிங்கரர்கள் செய்யும் தண்டனைகள் மிகவும் கொடியவையேயென்று இப்படி நினைத்து நினைத்து மனந்தளரா முன்னமே, சங்குசக்கரமேந்தின கேசவனுடைய திருவடிகளைத் துதியுங்கள்.

48. "இறையெம்பெருமா னருளென்று, இமையோர்
முறையினின்று மொய்மலர்கள் தூவ — அறை கழல
சேவடியான செங்கணெடியான், குறளுருவாய்
மாவலியை மண் கொண்டான் மால்.''

அதாவது—' எங்களுக்கு ஸ்வாமியான வாமனனே ! கிருபை செய்யென்று தேவர்கள் வரிசையாய் நின்று அழகிய மலர்களை ஸமர்ப்பிக்க, ஒலிக்கும் வீரத்தண்டையை அணிந்த சிவந்த திருவடிகளையுடையவனும், சிவந்த திருக்கண்களையுடையவனும், யாவற்றிற்கும் மேலான ஸர்வேச்வரன் அவர்களிடத்தில் அன்புகூர்ந்து வாமன ரூபியாய் அவதரித்து மஹா பலியின் யாகசாலைக்குச் சென்று பூமியை வாங்கி வசமாக்கிக் கொண்டான். (இவ்வாழ்வார் இத்திருவந்தாதியின் முதலிலும் முடிவிலும் திருக்கோவலூரில் தனக்கு ஸேவை ஸாதித்து ஆட்கொண்ட த்ரிவிக்ர மாவதாரத்தின் சிறப்பையே வர்ணித்து அதில் ஈடுபடுகிறார்.)

" மாலே, நெடியோனே, கண்ணனே, விண்ணவற்கு
மேலா வியன் துழாய்க் கண்ணியனே—மேலாய்
விளவின் காய் கன்றினல் வீழ்ததவனே, என்றன்
அளவன்ருல் யானுடைய வன்பு ".

அதாவது—குணங்களின் பெருமையை யுடையவனே! ஸ்வரூபத்தாலும் விபூதியாலும் எல்லையற்றவனே! யாவற்றையும் தரிக்கிறவனே! நடத்துகிறவனே! நித்ய ஸூரிகளைக் காட்டிலும் மேலானவனே! ஆச்சரியகரமான திருத்துழாய் மாலையை யுடையவனே! அதற்கு மேல் கிருஷ்ணனாய் அவதரித்து அஸுரனான விளாமரத்தின் கனியை அஸுரனான கன்றாலே விழச்செய்தவனே! உன் விஷயமாய் நான உடைத்தான அன்பு என்னிடத்தில் அடங்கி நின்றதன்று. என்ன ஆச்சரியம்.

பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.





# மூன்றாந்திருவந்தாதி.

இந்தக் கிரந்தம் இயற்பாவில் மூன்றாவது பிரபந்தம்; இதில் பாசுரங்கள் 100. இதற்கு குருகைக்காவலப்பன் தனியனை அருளிச் செய்திருக்கிறார்.

முதலாழ்வார் மாயவனை நித்யவிபூதி லீலா விபூதி யென்ற இருவிபூதிகளையுடையவனாய்த் தியானஞ் செய்தார். நடுவிலாழ்வார் அதற்கு நாராயணனே பொருளென்றார். இவ்வாழ்வார் அதற்கு ஸ்ரீ யென்ற சப்தத்தைக் காட்டிக்கொண்டு லக்ஷ்மீ ஸமேதனான கோவிந்தனைத் தியானஞ் செய்யென்றார். முதலாழ்வாரின் முதற்பாசுரமான 'வையந்தகளி' யென்றது ஞானத்தைச் சொல்லுகிறது; நடுவிலாழ்வாரின் முதற்பாசுரமான 'அன்பேதகளி' யென்றது ஞானம் முற்றின பக்தியைச் சொல்லுகிறது. இவ்வாழ்வாரின் முதற்பாசுரமான

"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன், திகழும்
அருக்கனணி நிறமுங் கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன், புரிசங்கங்கைக்கண்டேன்,
என்னாழி வண்ணன் பாலின்று."

என்றதில் பக்தியால் பகவானை ஸாக்ஷாத்கரித்தபடி சொல்லப்படுகிறது. அதாவது, 'பகவானுடைய அநுக்ரஹமான கடாக்ஷத்தைப் பெற்ற நான் இன்று என் ஸ்வாமியான திருமாலிடத்தில் பெரிய பிராட்டியை ஸேவித்தேன். அழகிய திருமேனியைக் கண்ணாரக் கண்டேன். கோடி ஸூரியப் பிரகாசமான வடிவை யறிந்தேன். திருவாழியையும் திருச்சங்கையும் திருக்கையில் காணலுற்றேன்.'

என் மனம் உன்னைப்பற்றி ஆசைகொண்டது. இப்பொழுதே உன் திருவடியை ஸேவித்தேன், எல்லையற்று வளரும் பிறவிகளைப் போக்கினேன்.' கொடிய நரகங்களில் விழாமல் என்னைக் காப்பதற்கு அவனே அருமருந்தாவான். என் மனதில் என்றும் குடிகொண்ட அவனுடைய திருவடிகளே அமிருதமும் தனமுமாகும்.

எனக்கனுகூலமான நெஞ்சே! அவனுடைய பல பல நாமங்களையும் நமோ நாராயணா வென்ற திருமந்திரத்தையும் வாயாரச் சொல்லி கைகூப்பிச் சரணடைவோம். விருப்புற்றுவா. அவனையே நம்முடைய கண்கள் காணக் கடவதாக.

அவனுடைய திருநாமத்தைச் சொல்லி, அதின் பலத்தைப் பேசினால் செல்வமும் அழகும் மேன் குலத்தில் பிறப்பும் ஒளியும் திறமையும்

மற்றுமுள்ள நன்மைகளும் தங்களுடைய மேன்மையை விரும்பித் தாமே வந்து நம்மை அண்டும். எப்பொழுதும் செவ்வையாய் வேதத்தை ஆராய்ந்து கிடைத்த ஞானமாகிற பூட்டைத் தொடுத்து, பஞ்சேந்திரியங்களை யடக்குதலென்ற வலிய கதவைச சாத்தி, நன்றாயறியவல்லவர்களே. ஸர்வேசுவரனுடைய வகையை நாள் தோறும் அறிவார்கள்.

அவனுடைய திருவடிகளை ஆசிரயித்து அவனிடத்தில் மனதை நாட்டினால் பெண்ணாசையை யழித்து வேதங்களின் உட்கருத்தான பரம்பொருளை படைவதெளிது.

திருப்பாற் கடலில் திருவனந்தாழ்வானாகிற பூம்படுக்கையில் பள்ளி கொண்ட ஸ்வாமியே அப்படுக்கையை விட்டு வந்து அடியேனுடைய மனமாகிற மலரணையில் படுத்தானன்றோ ?

பதமாஸனியான பிராட்டியுடன் அடியார்களுக்கு ஸேவை ஸாதிக்க பரமபதத்தை விட்டுத் திருவல்லிக்கேணியில் எழுந்திருளி யிருக்கிற பார்த்தஸாரதியே எனக்கு ஸ்வாமி. (துவாபர யுகத்தின் முடிவிலிருந்த இவ்வாழ்வார் அருளிச் செய்த இப்பாசுரத்தால் திருவல்லிக்கேணி யென்ற திருப்பதி சுமார் 7000 வருஷங்களுக்குக் குறையாமல் விளங்கி வருகிறதென்று ஏற்பட்டது.)

ஸர்வேசுவரன் எங்களிடத்தில் ஆசை கொண்டவன் என்றறிந்த நாள், அதற்கு முன் கழிந்தநாள், இனி வரக்கடவதான நாள்களாகிய எல்லா நாளும் நன்னாளே யாகும். அவனுடைய திருவடிக்குத் தாஸனாய், அவனை மறக்காமல் என் வாக்கு அவனையே மங்களாசாஸனம் செய்யக் கடவதாக.

அவனுடைய திருவடிக்கே மேல் வரும் ஜன்மங்களெல்லாவற்றிலும் ஆட்பட்டுப் பயப்படாதிருக்கும்படி அவனே அருள் புரிய வேண்டும். அவனுடைய படியைப் பேசவல்லார் எவ்வளவு முடியுமோ அவ்வளவே பேசுவார்கள். பூர்ணமாய்ப் பேச யாவராலும் முடியாது.

அவன் நித்ய வாஸஞ் செய்யும் ராஜஸ்தானங்கள் திருப்பாற் கடல், திருக்குடந்தை, திருமலை, பரமபதம், என் மனம், வேதங்கள், திருப்பாடகம், திருவனந் தாழ்வான் என்றவையே.

அவனுடைய அழகிய திருமேனியைக் கண்கள் காணவேண்டும் காண வேண்டுமென்று ஆசைப்படாநின்றன. அவனுடைய திவ்ய சரித்திரங்களைப் பாட்டில் வைத்துப் பாடி அவனுடைய திருவடிகளைக் காணஞ் செய்து நம் கைகளால் தொழுவோம்.

ஸகல வஸ்துக்களையும் தனக்குச் சரீரமாயுடையவனாய், தவமே உருவான வஸிஷ்டாதிகளையும் நக்ஷத்திரங்களையும் தனக்குப் பிரகாரமாயுடைய

வனாய், அக்னியையும் குலவரைசளையும் எட்டுத் திசைகளையும் ஸூர்ய சந்திரர்களையும் சரீரமாயுடைய ஸ்வாமிக்கு அவனே ஒப்பானவன்.

நன்னெஞ்சே! புருஷோத்தமனான அவனிருக்கிறனென்று மறவாதே. எப்போது மிருக்கிறனென்று தேறு. தியானஞ் செய்யுமவர்களுடைய உள்ளத்தில் விளங்குகிறனென்று உறுதி கொள்.

தனக்கிணையற்ற லோகநாதனுடைய ஸங்கல்பத்தில் இவ்வுலகம உள்ளதென்ற தன்மையைப் பெற்றிருக்கிறது. அவனுடைய பெருமையைக் கலைமகளான ஸரஸ்வதியும் நன்றாய்ப் புகழவல்லவளோ?

"தாழ் சடையும் நீண்முடியு மொண் மழுவும் சக்கரமும்
சூழரவும் பொனனாணுந தோன்றுமால்—சூழும்
திரண்டருவிபாயும் திருமலை மேலெந்தைக்கு
இரண்டுருவு மொன்றா யிசைந்து"

நாற்புறத்திலும் சுற்றிக் கொண்டிருக்கிற திரண்ட அருவிகள் பாயா நின்ற திருமலைமேல் எழுந்தருளி யிருக்கிற என் ஸ்வாமிக்குத் தொங்குகிற சடையும் நீண்ட திருமுடியும், அழகிய மழுவென்ற ஆயுதமும சக்கரமும், இடுப்பில் சுற்றி யிருக்கிற பாமபும் தங்கமயமான அரை நாலுமாகிய இவ்விரண்டு ஹர ஹரி ரூபமும் அமாநது ஒரு படியாய்த்தோன்று நின்றது ஆச்சரியம். (இவ்வாழ்வாருக்கும சைவ வைஷ்ணவ பேதமின்றி ஸமதிருஷ்டியாய்ப் பரம்பொருளைப் பார்த்தனுபவிக்கும் ஞானமே வாய்நததென்று இதனால் அறியலாம்). ஆனால் இதறகு ஸம்பிரஸ்தாய உரை பின் வருமாறு:—

(1) விததமான வேஷத்தையும் ஸாத்நகமான வேஷத்தையும் ஒக்கத்தரிப்பதே; இது ஒரு சிலைதனையே யெனகிறார்.

(2) இரண்டுருவு மொனறாயிசைந்து ஒன்று ஸாத்தகமாய் ஒனறு விததமானால் சேராச் சோததியாயிருக்குமோ வென்னில், இரண்டுருவும் இசைநது ஒன்றாயிருக்கும, (பொருந்தியிருக்கும்.)

காஞ்சி நகரத்திலுள்ள திருவெஃகாவில் பள்ளிகொண்டு, கச்சியில் எழுந்தருளியிருந்து, திருப்பாடகத்தில் நின்றது, ஸமுத்ரததைக் கடையும் பொழுது வாஸுகியையும் மநதர பாவததை யும் திருப்பாற்கடலையும் சேர்த்து, அதில் அமிருததனத உண்டாக விருப்புறறு ஆடியாடிக் கடைந்த சிரமத்தினாலேயோ?

அந்த ஸ்ரீகாந்தனுடைய திருவடிகளைப் போற்றுவதே நாவினால் பெறத்தக்க பயன்.

ஜனங்களே! நீங்கள் தவம் செய்கைக்காக மலைச் சாரல்களில் ...ற்கவும் வேண்டாம்; பொய்கைகளில் முழுகவும் வேண்டாம்; பஞ்சாக்னி

மத்தியில் வாடவும் வேண்டாம். பலத்தை அபேக்ஷிக்காமல் கண்ணபிரானுக்கு அன்புடன் மலர்களை ஸமர்ப்பித்துக் கை கூப்பினால், பாபங்கள் இவ்விடம் தமக்கிருக்கத்தகாதென்று அஞ்சித் தாங்களே விட்டுப்போகாவோ? திருவாழியை வலது திருக்கையில் ஏந்தினவனாய் நம்மை ரக்ஷிக்குமிடத்தில் நமக்கு ஞானமேது, அனுஷ்டானமேது, ஜன்மமேது என்று ஆலோசிக்காதே. யாதொன்றையும் பார்க்க வேண்டாம். நீ செய்ய வேண்டியது அவனைத் தியானித்துச் சொல்வதே.

அவனையே ஸ்திரமாயிருந்து தியானிக்கும் மன முடையவர்களாய்ப், பஞ்சேந்திரியங்களை யடக்கி, விஷய பாகங்களிலுள்ள தோஷத்தை ஆராய்ந்து, அவைகளினின்று மனதைத் திருப்பினால், மேல் வரப்போகிற ஜன்மங்களை யெல்லாம் போக்கலாம்.

மனதால் நினைக்க முடியாதவனாகிலும் மனமே, ஸ்திரமாயிருந்து, அவனைச் சொல்லப்பாராய். ஒருக்கால் நினைக்கில மனதை விட்டுப்போகாமல ஸ்திரமாய் வாஸஞ் செய்யும் பரம புருஷனை அறிவு நினையாதிருப்பது எந்தக் காரணத்தாலிருக்கலாம்?

அறியப் பார்க்கில் அறிவதற்கு அஸாத்தியன். ஹிருதயத்தில் புகுந்து சேர்ந்திருந்தாலும உள்ளபடியாகக் காண்பதற்கு அஸாத்தியன், அவனை இப்பொழுது எங்கே போய்க் காண்போம்.

அவன் இப்பொழுது காண்பதற்கரிய மாயாவியென்று சொல்லப்பட்டாலும், அவனை ஸாக்ஷாத்காரஞ் செய்வது அஸாத்தியமானாலும், என மனத்தினுள்ளே நிறைந்திருக்கிறான்.

நான்மறைகளின் உட்பொருளாயுள்ளவனை மனமென்ற கோயிலில் எழுந்தருளியிருப்பவனாய் ஆராய்ந்து அறிந்தார்களேயாகில், அவனைக் கவிபாடுவதற்கு ஆசைப்படுவாரல்லது ஸாக்ஷாத்காரமாய் எவர் பார்க்க முடியும்?

அந்தப் பகவத் விஷயம் நன்று, இந்த ஸம்ஸாரம் தீயது என்ற அம்சத்தில் சந்தேஹப்படாமல் ஜகன்னாதனுடைய திருவடியைச் சரணம் புகுங்கள். அப்படி யடைவதற்கு முயன்ற பொழுதே ஸகல பாபங்களும் உங்களை விட்டு நீங்கும்.

ஞானமென்ற ஒளியையுடைய திருவிளக்கை உள்ளத்தில் ஏற்றி வைத்து, அந்த ஜனார்த்தனனை ஆராய்ந்து கிட்டி வலையில் கட்டிவிட்டேன். எனக்கு வசமாக்கிக் கொண்டேன். அவனும் என் மனத்தை விட்டுப் பிரியாமல் புகுந்து மெள்ள எழுந்தருளி நின்றான், வீற்றிருந்தான், பள்ளி கொண்டான்.

ஆச்சரியப்படத்தக்க குணங்களையும் செய்கைகளையுமுடையவனை பத்மநாபன் செய்த வியாபாரங்களில் இந்திரன் பிரஹ்மா ருத்ர னென்றவர்களுக்கும் கொஞ்சமாகிலும் நினைக்கத்தான் போமோ?

இமய மலையையும் பெரிய ஆகாசத்தையும் காற்றையும் மற்றும் யாவையும் ஊடுருவி நின்ற அச்சிரீதரன், யமனால் ஆளப்பட்ட நரகத்தில் இட்டாதபடி நம்மைக் காத்தருளுவன்.

"தொட்ட படையெட்டும் தோலாத வென்றியான்,
அட்ட புயக்கரத்தா னன்றன்று—குட்டத்துக்
கோள் முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான்
தாள் முதலே நங்கட்குச் சார்வு."

அதாவது, திருக்கையிலெடுத்த ஆயுதங்கள் எட்டினாலும் தோலாமல் ஜயசிலனாய், முன்காலத்தில் மடுவிலுள்ள சத்துருவான முதலை சாகும்படி குறி வைத்து எறிந்த திருவாழியையுடையவனான மாதவனுடைய பாதமூலமே நமக்கு அடைய வேண்டும் பொருள்.

"சார்வு நமக்கென்றும் சக்கரத்தான், தண்டுழாய்த்
தார் வாழ்வரை மார்பன் றான் முயங்கும்—காரார்ந்த
வானமரு மின்னிமைக்கும் வண்டாமரை நெடுங்கண்
தேனமரும் பூமேல் திரு."

அதாவது—திருவாழியை யுடையவனாய் குளிர்ந்த திருத்துழாய் மாலை விளங்கா நின்ற மலை போன்ற திருமார்பை யுடையவனான ஸர்வேசுவரன், தானே ஆசை கொண்டணையு மவளாய், மேகம் நிறைந்த ஆகாசத்தில் பொருந்தியிருக்கிற மின்னலைப்போல் பிரகாசிக்குமவளாய், அழகிய தாமரைப் புஷ்பத்தைப் போல் விசாலமான திருக்கண்களை யுடையவளாய், தேன் நிறைந்த தாமரை மலர்மேல் வஸிக்கிறவளான ஸ்ரீ மஹாலக்ஷ்மியே நாம் எப்பொழுதும் அடையவிரும்பும் பரம் பொருள்.

பேயாழ்வார் திருவடிகளே சரணம்

---

# திருமழிசையாழ்வார் வைபவம்

முன்னொருகாலத்தில் அத்திரி, வஸிஷ்டர், பிருகு, புலஸ்தியர், அங்கிரஸ் முதலிய மஹரிஷிகளெல்லோரும் பிரம்மாவிடத்திற் சென்று "நாங்கள் தங்குவதற்குத் தகுந்த ஓர் புண்யஸ்தலத்தைக் காட்டவேண்டு"மென, நான்முகன் ஞானமென்ற தராசில் பூமியை ஒரு தட்டிலும் திருமழிசையை ஒரு தட்டிலும் வைத்துச் சீதூக்கிப்பார்த்து, மழிசையை வைத்தெடுத்த பக்கம் வலிதென்று கண்டு அதற்கு மஹீஸார க்ஷேத்ரமென்று பெயரிட்டு, அங்கே அவர்களைப் போகச்செய்தார். பிறகு அவர்களில பார்க்கவர் தனியே ஓர் பெரிய யாகம் செய்துகொண்டிருக்கையில், இந்திரன் அதைத் தடுக்க நினைத்துக், கனகாங்கியென்ற அப்ஸரஸை அனுப்பினன். அம்முனிவர் அவளுடைய வலையில் சிக்கி அவளுடன் சிலகாலம் கழித்தார். அவள் கருத்தரித்துப் பன்னிருமாதங்கள் கழிந்தபிறகு, ஓர் பிண்டரூபமான குழந்தையைப் பெற்றாள். அவர் எம்பெருமானுடைய ஸுதர்சனமென்ற திருச்சக்கரத்தின் அம்சமாய் அவதரித்தவர். அவருக்கு பக்திஸாரரென்றும் திருமழிசைப்பிரானென்றும் நாமங்களுண்டு. முதலாழ்வார்கள் அவதாரஞ் செய்த வருஷத்தில் தையீ கிருஷ்ணபக்ஷ பிரதமை ஞாயிறுக்கிழமை கூடின மக நக்ஷத்திரத்தில் அவதரித்தாரென்று சொல்லப்படுகிறது. பெற்றோர் அந்தப் பிண்டத்தை அங்கேயே விட்டுப் போனார்கள். பிறகு பெரிய பிராட்டியின் திருவருளால் ரக்ஷிக்கப்பட்டு எல்லா அவயவங்களும் பூர்ணமாய் விளங்கி, பசிதாகத்தால் மெலிந்து அழுது கொண்டிருந்தார். அப்பொழுது திருவாளனென்ற ஓர் பிரம்பறுப்போன அங்கே வர நேர்ந்து, அந்த அழுகுரலைக் கேட்டுக், குழந்தையைக் கண்டெடுத்துத், தன் மனைவியிடத்தில் கொடுத்து, வெகு அன்புடன் வளர்த்து வந்தான். இவ்வாழ்வார் எம்பெருமானுடைய திவ்ய ஸேவையையே தாரகமாய்க் கொண்டு, ஊண் உறக்கம் மலம் மூத்திரம் முதலிய பிராகிருத குணங்கள் அற்றவராய் எப்பொழுதும் தியானத்திலேயே ஆழ்ந்துநின்றார் இதைக் கேள்வியுற்ற ஓர் சூத்திரன் அவரிடத்தில் பக்தி மிகுந்து, பாலமுது காய்ச்சிக்கொண்டு வந்து ஸமர்ப்பித்து மிகவும் வேண்டினன. ஆழ்வார் அவனுடைய மனத்தூய்மையைக் குறிவைத்து அதை ஸ்வீகரித்தருளினர். இப்படியே வெகுநாள் செல்ல, அந்தத் தம்பதிகளின் மனக்குறையை யறிந்த ஆழ்வார், அந்தப் பாலில் சிறிது அவர்களுக்குக் கொடுத்து "இதை யுண்டால் உங்களுக்குப் புத்ரபாக்கியம் கிடைக்கு" மென்றார். அவ்வாறே கேசவனுடைய அடியாரில் ஒருவனான கணிகண்ணனென்ற புத்திரன் அவர்களுக்குப் பிறந்தான்.

ரிஷிபுத்திரராகையால் ஆழ்வார் ஸகல வேத சாஸ்திரங்களையும் தானே புரிந்து, யோக மார்க்கத்தில் மனம் வைத்து, அதற்குமுன் ஜகத்காரணமான

வஸ்து இன்னதென்று நிச்சயித்தறியவேண்டி, ஒவ்வொரு மதத்திலும் புகுந்து அதற்குரிய நூல்களைக் கற்று அம்மதத்தினருடன் கலந்து பழகி, முடிவில் சைவத்தில் ஆழ்ந்து சிவவாக்கியரென்ற பெயருடன் பல நூல்களைச் செய்து சிவதீக்ஷை பெற்று ஸஞ்சரித்துக் கொண்டு வருகையில், திருமயிலையில் வந்துசேர்ந்தார். அப்பொழுது அங்கிருந்த பேயாழ்வார் இவருடைய அவதாரத்தின் மஹிமையையும் அதற்கு இடையூறாக வந்து நேர்ந்த சைவமதப் பிரவேசத்தையும் கண்டு, இப்படிப்பட்டவரைத் திருத்திப் பரம வைஷ்ணவராய்ச் செய்து, இவரால் லோகத்திற்கு அரிய தத்வோபதேசம் செய்விக்க வேண்டுமென்ற எம்பெருமானுடைய திருவுள்ளத்தை நிறைவேற்ற விரும்பி ஒருஉபாயஞ் செய்தார்.

வழியிலுள்ள தன் நந்தவனத்தில் சில பூஞ்செடிகளைப் பிடுங்கித் தலைகீழாக நட்டு, ஒரு மண்குடத்தில் நூறு துவாரங்களைச் செய்து, அறுந்த தாம்புக் கயிற்றால் ஜலம் எடுத்து அந்தச் செடிகளுக்கு ஊற்றிக் கொண்டேயிருந்தார். அதைக்கண்ட திருமழிசைப்பிரான் கைகொட்டிச் சிரித்து "நீர் யார் காணும், பித்தரோ! அறுந்த கயிற்றையும் ஓட்டைக் குடத்தையும் கொண்டு, வேரைப்பிடுங்கித் தலைகீழாக நட்ட செடிகளுக்கு நீர் பாய்ச்சி வளர்க்கப் போகிறீரோ? ஒரு சொட்டாவது செடியின் மேல் விழவில்லையென்று காண உமக்குக் கண்ணில்லையோ" யென்று கேலி செய்தார். அதற்குப் பேயாழ்வார் "தேவாதி தேவனாய், ஒப்பாரும் மிக்காருமில்லாதவனாய், அநந்த கல்யாண குண நிதியாய்க், கருணைக் கடலாய் விளங்கும் வாஸுதேவனை விட்டு, அநித்யமான மற்ற தைவங்களைப் போற்றி, ஒவ்வொரு மதமாய்ப் புகுந்து பார்த்து ஆயுளை வீணாக்கும் பேயன் நீரே காணும். அதை வாய்திறந்து சொல்லவும் பொறுமல் வெறுப்படைந்து இப்படிச் செய்து காட்டினேம். இதை அறியாத நீரோ, உம்மையும் உம்மைச் சேர்ந்தவரையும் காக்க வல்லவரென்று விருது கூறிக்கொண்டு திக் விஜயஞ் செய்ய வெளிப்பட்டீரே" வென்றார்.

பிறகு அவ்விருவர்க்கும் சைவ வைஷ்ணவ மதங்களின் உயர்வு தாழ்வைப் பற்றிக் கடுமையான வாதம் நடந்தது. முடிவில பேயாழ்வார் வாஸுதேவனுடைய பரத்வத்தை ஸ்தாபித்துத், திருமழிசைப்பிரானைத் திருமாலுக்கு அடிமையாக்கிப், பெரிய திருமந்திரத்தை உபதேசித்துப், பஞ்ச ஸம்ஸ்காரஞ் செய்வித்து, அவர் அவதரித்த உத்தேசத்தை நிறைவேற்றுவதற்குத் தகுந்தவராகச் செய்தார். திருமழிசைப்பிரான் எல்லையற்ற ஞானனந்த சக்திகளால் அலங்கரிக்கப்பட்டு, ஆசாரியனுடைய ஸந்நிதியிலேயே வெகு காலம் யோக ஸமாதியில் எழுந்தருளியிருந்தார். அப்பொழுது கேசவன் தன் திவ்யாத்மஸ்வரூபத்தையும் ஆறுகுணங்களையும் திவ்யமங்கள விக்ரஹத்தையும் பெரிய பிராட்டி முதலிய தேவிமார்களுடனும் பெரிய திருவடி முதலிய பரிவாரங்களுடனும் அவருக்கு ஸேவை ஸாதித்தார். அந்தப் பேறுபற்ற ஆழ்வார் மட்டில்லாத ஆனந்தமடைந்து,

"சாக்கியங்கற்றோம், சமணங்கற்றோ மச்சங்கரனார்,
ஆக்கியவாகம நூலாராய்ந்தோம்—பாக்கியத்தால்
செங்கட்கரியானைச் சேர்ந்தியாந் தீதிலோம்
எங்கட்கரிய தொன்றில்"

என்று பலபல மதங்களிலும் புகுந்து உண்மைப் பொருளைக் காணாது தடுமாறின எனக்குப் பூர்வ புண்யவசத்தால் தன்னுடைய திருவருள் கிடைத்தது. பாவம் விலகிற்று. இனி நான் அடைய முடியாததுமுண்டோ" வென்று மார்தட்டிப், பேயாழ்வாரிடத்தில் உத்தரவு பெற்றுக் கொண்டு திருமழிசைக் கெழுந்தருளி, 700 வருஷங்கள் வரையில் கஜேந்திர ஸரஸின் கரையில் யோகத்தில் எழுந்தருளியிருந்தார்.

பற்பல சித்தர்களும் யோகிகளும் அவரிடத்தில் வந்து தங்களுடைய அபூர்வமான சக்திகளைக் காட்டி அவருடைய மஹிமையைக் கண்டு வெட்கமடைந்து, அவரை வணங்கி அடிபணிந்து போனார்கள். வெகு காலங் கழித்து முதலாழ்வார் மூவரும் திவ்ய தேசயாத்திரை செய்துகொண்டு அந்த மார்க்கமாய் வருகையில், ஓர் திவ்ய சுடர்ச்சோதியைக் கண்டு, அதைத் தொடர்ந்து குகைக்குள் வந்து, திருமழிசைப் பிரானைக் கூவி யழைத்து க்ஷேமம் விசாரித்தார்கள். அவர்கள் சிலகாலம் வரையில் அங்கே பகவத் குணங்களைப் போற்றிக்கொண்டு தங்கியிருந்து பிறகு எல்லோரும் திருமயிலைக் கெழுந்தருளிப், பேயாழ்வாருடைய அவதார ஸ்தலத்தைத் தரிசித்து, அங்கேயே யோகத்தில் ஆழ்ந்திருந்தார்கள்.

பிறகு திருமழிசைப்பிரான் அங்கிருந்து ஸத்யவிரத க்ஷேத்ர மென்ற திருவெஃகாவுக் கெழுந்தருளி, யதோக்தகாரியை ஸேவித்துப், பொய்கையாழ்வாரின் அவதார ஸ்தலமான பொற்றாமரைக் கரையில் 700 வருஷங்கள் யோகாப்யாஸஞ் செய்துகொண்டிருந்தார். அங்கே கணிகண்ணன் இவரை வந்தடைந்து அருள் பெற்றுப் பணிவிடை செய்துகொண்டிருந்தான். அவ்வூரிலுள்ள ஓர் கிழவி அந்த ஸ்தலத்தைப் பெருக்கி மெழுகி அலங்கரித்துக் கொண்டு வெகு பக்தியுடன் கைங்கர்யம் செய்துகொண்டிருந்தாள். ஒரு நாள் அவள் ஆழ்வாருடைய கருணைப் பிரவாஹத்தில் மூழ்கிக் கிழத்தனம் மாறி, யௌவனத்தை யடையும் வரத்தைப் பெற்றாள். அவ்வூரரசனான பல்லவராயன் அவளைக் கண்டு ஆசை கொண்டு மணம்புரிந்தான். தனக்கு நாளுக்கு நாள் கிழத்தனம் அதிகரிப்பதையும் அவளுக்கு யௌவனம் மாறாமலிருப்பதையும் கவனித்து, அதின் காரணத்தை யறிந்து கொண்டு, கணிகண்ணனை ஸேவித்துத் தனக்கும் நித்ய யௌவனம் கிடைக்கும்படி வரந்தர, ஆழ்வாரைத் தன்னிடத்திற்கு அழைத்துவர வேண்டினன். அது அஸாத்யமென்று கணிகண்ணர் சொல்ல, 'என்மேல் ஓர் கவியாவது பாடவேண்டு'மென்று பிரார்த்தித்தான்.

கணிகண்ணர் சிரித்து, வாய்க்கொண்டு மானிடம் பாடவந்த கவியல்லவென்று அவனுக்கு மறுமொழி கூறினார். அப்படியும் அவன் நிர்ப்பந்தஞ்செய்தான். அப்பொழுது கணிகண்ணர் அவனைப் பாடாமல் அவ்வூரையும் தெய்வத்தையும் பாடினார். அவ்வரசன் கோபங்கொண்டு “என் ராஜ்யத்தில் இராமல் வெளியில் போ”மென்று ஆக்ஞாபித்தான். கணிகண்ணர் நடந்த வரலாற்றை ஆழ்வாரிடத்தில் தெரிவித்து விடைபெற்றுக்கொண்டார். “ஆனால் எனக்கிங்கே வேலையில்லை யென்று நானும் எம்பெருமானும் உன்னுடன் வருகிறோமெ”ன்று, யோகநித்திரையில்பள்ளிகொண்டிருக்கும் பெருமானிடத்திற் சென்று,

“கணிகண்ணன் போகின்றான், காமறு பூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்கவேண்டா—துணிவுடைய
சென்னாப்புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய் சுருட்டிக்கொள்”

என்று விண்ணப்பஞ் செய்தார். உடனே அந்த எம்பெருமானும் பாம்பணையைச்சுருட்டிக் கொண்டு இவரைப் பின்தொடர்ந்தார். மற்ற ஆலயங்களிலுள்ள தெய்வங்களும் அவருடன் சென்றன. அதைக்கண்டு ஜனங்களும் மந்திரிகளும் அரசனைப் பலவிதமாய் நிந்தித்து ஆழ்வாரைப் பின்தொடர்ந்து, ‘ஓரிரவிருக்கை’ யென்ற கிராமத்தில் பரமபதத்தில் போல வீற்றிருக்கும் கணிகண்ணருடைய திருவடிகளில் வீழ்ந்து, அபராதத்தைப் பொறுக்க வேண்டுமென்று கெஞ்சி, மறுபடியும் நகரத்துக்கு எழுந்தருளும்படி விண்ணப்பஞ் செய்து கொண்டார்கள்.

கணிகண்ணர் ஆழ்வாரை வேண்ட, ஆழ்வார் கிருபைகூர்ந்து சொன்ன வண்ணஞ் செய்த பெருமாளை வணங்கி,

“கணிகண்ணன் போக்கொழிந்தான் காமறு பூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்கவேண்டும்—துணிவுடைய
சென்னாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப்பாய் படுத்துக்கொள்”

என்று வேண்டினார். பெருமாளும் திருவெஃகாவுக்குத் திரும்பி எழுந்தருளி ஆழ்வாருடைய மகிமையை உலகத்தார்க்கு வெளிப்படுத்தினார்.

சில காலங்கழித்து ஆழ்வார் திருக்குடந்தையில் விளங்கும் ஆராவமுதனை ஸேவிக்க விரும்பித் திவ்ய தேசங்களைக் கடந்து செல்லுகையில் பெரும்புலியூரென்ற கிராமத்தில் உஞ்சவிருத்தி செய்துகொண்டிருந்தார். அப்பொழுது அங்குள்ள கோயிலிலிருந்த எம்பெருமான் இவர் போகும் வீதிகள் தோறும் அவரைப் பார்த்துத் திரும்பி நின்றார். அந்த ஆச்சரியத்தைக் கண்ட அர்ச்சகர்களும் மற்றவரும் அங்கே யாகம் செய்துகொண்

டிருந்த தீக்ஷிதரிடத்தில் அதைத் தெரிவித்தார்கள். அவர் ஆழ்வாரை அடிபணிந்து ஸகல உபசாரங்களுடன் யாகசாலைக்கு எழுந்தருளிவித்துக், கடவுளைப்போல் போற்றிப் பூஜித்தார். அதைக்கண்டு அங்கிருந்த அந்தணர் அது பொறுக்காமல், "அந்யாயமாய் யாகத்தைக் கெடுத்து விட்டீர்; ஊரும் பேருந்தெரியாத இந்தப் பாஷண்டனை எல்லோர்க்கும் நேராய்ப் பூஜித்த நீர் பிராயச்சித்தம் செய்து கொள்ளக்கடவீர்" என்றார்கள். தீக்ஷிதர் ஆழ்வாரை அடிபணிந்து "ஸ்வாமி! உங்களுடைய மஹிமையை வெளியிடவேண்டு"மென்று விண்ணப்பம் செய்ய, ஆழ்வார் மனமுகந்து தன் ஹிருதய கமலத்தில் நித்ய வாஸஞ்செய்யும் எம்பெருமானையும் ஆயிரம் முனைகளுடன் தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ் திருச்சக்கரத்தையும் அனைவர்க்கும் காட்டும்படி

"அக்கரங்களக் கரங்களென்று மாவதென்கொலோ
யிக்குறும்மை நீக்கியென்னை ஈசனுக்கவல்லையேற்
சக்கரங் கொள்கையனே சடங்கா வாயடங்கிட
வுட்கிடந்த வண்ணமே புறம் பொசிந்து காட்டிடே"

யென்று பாடி வேண்டினர். அப்படியே சக்கரபாணி இவரது திருமேனியில் ஸேவை ஸாதிக்க, அவர்கள் பயந்து நடுங்கி ஆழ்வாருடைய பாதங்களில் விழுந்து "எங்களுடைய அறியாமையால் செய்த அபராதத்தைப் பொறுக்கவேண்டு"மென்று கெஞ்சித் திவ்யோபசாரங்களால் கொண்டாடினார்கள்.

பிறகு ஆழ்வார் திருக்குடந்தைக்கு எழுந்தருளி அங்கே தான் செய்த நூல்களைத் திருக்காவிரியில் விட்டார். அவைகளில் திருச்சந்த விருத்தமும், நான்முகன் திருவந்தாதியும் எதிர்த்துவர, அவற்றை எடுத்துக்கொண்டு ஆராவமுதனை ஸேவித்து, அவர் சயனத்திருக்கோலமாய் எழுந்தருளியிருப்பதைக் கண்டு

"நடந்த கால் கணொந்தவோ நடுங்க ஞாலமேனமா
யிடந்த மெய் குலுங்கவோ விலங்கு மால்வரைச் சுரங்
கடந்த கால் பரந்தகா விரிக்கரைக்குடந்தையுட்
கிடந்தவா றெழுந்திருந்து பேசு"

என்று விண்ணப்பஞ் செய்ய, ஆராவமுதன் அவரிடத்தில் வைத்த ஆசையால் அர்ச்சாவதாரத்தின் எல்லையை மீறி விபவாவதாரத்தின் தன்மையையடைந்து, சயனத்திலிருந்து எழுந்து பேசப்போகும்பொழுது, ஆழ்வார் "இந்த எங்களுடைய ஸௌலப்யத்திற்கு ஒரு தீங்கும் வாராமலிருக்க வேண்டுமே" யென்று "வாழி கேசனே"யென்று மங்களாசாஸனஞ் செய்தார். ஆராவமுதன் அந்த நிலையிலேயே படுக்கையிலிருந்து எழுந்தவாய் இப்பொழுதும் ஸேவை ஸாதிக்கிறார்.

ஆழ்வார் அங்கேயே அந்தத் திவ்ய மங்கள விக்ரஹத்தைத் தியானம் பண்ணிக்கொண்டு யோகஸமாதியில் 2300 வருஷங்கள் எழுந்தருளியிருந்தார். இப்படி த்வாபரயுகத்தில் ஆயிரம் வருஷங்கள் அன்னிய மதங்களில் புகுந்து நின்று, மிகுந்த 99-ம் கலியுகத்தில் 3601-ம் சேர்ந்து 3700 வருஷங்கள் ஸ்ரீ வைஷ்ணவ மத ஸ்தாபனஞ் செய்து உலகத்தாரைக் கடைத்தேறுவித்தது, இந்த விபூதியில் 4700 வருஷங்கள் எழுந்தருளியிருந்தார். இவருக்குப் பக்திஸாரரென்றும் பெயருண்டு.

# திருச்சந்த விருத்தம்.

இது சாஸ்திரங்களின் ஸாரமெனப்படும். இதற்குத் திருக்கச்சி நம்பிகள் தனியனை அருளிச் செய்திருக்கிறார். இது 120 பாசுரங்களுள்ளது. இதற்குப் பெரிய வாச்சான் பிள்ளை அருளிச்செய்த வியாக்யானமும் அதற்கு அரும்பத விளக்கமும், அண்ணாவய்யங்கார் ஸ்வாமி இயற்றின பிரதிபத வியாக்யானமும் கிடைத்திருக்கின்றன. இவ்வாழ்வார் சைவ சமயத்திலிருந்து திருத்தியமைக்கப்பட்டு வைஷ்ணவம் புகுந்தமையால், சிவனிடத்தில் அலக்ஷியமும் தாழ்ந்த புத்தியும் மட்டற்ற வெறுப்புமுள்ளவர். விஷ்ணுவிற்குக் கீழானவனாய்ச் சங்கரனை மதிப்பதுமல்லாமல் தனக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் அவன் தாழ்ந்தவனென்று சொல்வதால் இது விளங்கும். இவருடைய சரித்திரத்தில் காணப்படும் சிற்சில கதைகள் இவருடைய மதாபிமானத்தையும் தன்னைப் பற்றித் தான் கொண்ட மேலான எண்ணத்தையும் விளக்கும். இவர் கிருஷ்ணாவதாரத்தில் அதிகமாய் ஆழ்ந்தவர். கண்ணனைப்போல் தானும் தாழ்ந்த குலத்தில் வளர்ந்து, தாழ்ந்தவர்க்கு முகங்கொடுக்கைக்காக அவர்களுடன் கோபாலனைப்போல் தானும் கலந்து பழகினாரென்று சொல்லத்தகும்.

இவர் க்ருபாஸ்வரன் மட்டுப்படாத கருணையால் தன ஸ்வரூபத்தையும் கல்யாண குணங்களையும் அவதாரப்பெருமையையும் லீலா விபூதியில் நடத்தின திவ்ய சேஷ்டிதங்களையும் காட்டிக் கொடுத்தது, இப்படி மற்றுமுள்ளோரும் பகவானை அடைந்து அனுபவிக்காமல் அதோகதி அடைகிறார்களே யென்று, யோகபலத்தால் நெடுங்காலம் இவ்வுலகத்தில் தங்கி ஜீவகோடிகளைக் கரையேற்றும் பொருட்டு, தாமதங்களாலும் புத்தியை மயக்கும் வாதங்களாலும் ஞானமழிந்து நரகில் புகும் மனிசரைக்கண்டு பொறுக்காமல், பரதத்வத்தை உபதேசித்து வேதவிரோதமான மதங்களைக் கண்டித்து "பாக்யஹீனர்களே! மாதவனை அடைவதற்கு அவனுடைய பரவியூக ஸ்வரூபங்களை நம்மைப் போன்றவர்கள் அடையும் தேசம் இதல்ல. அவை லீலா விபூதியில் கிட்டா. அவதார ரூபங்களோ இக்காலத்தில்

நமக்குக் கிடைப்பதரிது. ஆகையால் அவனே அர்ச்சாவதாரத்தில் திருக்கோவில்களிலும் தநதம் வீடுகளிலும் எழுந்தருளி நம்மை ஆட்கொள்ள நம்மைத் தேடி வந்திருக்கும்பொழுது சரணடையாவிட்டால் வேறு கதியுண்டோ”வென்று இப்பிரபந்தத்தை இயற்றிய தன் அனுபவத்தையும் வெளியிடுகிறார்.

“பூனிலாய வைந்துமாய்ப புனற்கணின்ற நான்குமாய்த்
தீனிலாய மூன்றுமாய்ச் சிறந்த காலிரண்டுமாய்
மீனிலாய தொன்றுமாகி வேறு வேறு தன்மையாய்
நீனிலாய வண்ண நின்னை யார் நினைக்கவல்லரே.”

அ—து. பூமியிலுள்ள ஐந்து குணங்களுமாய், ஜலத்திலுள்ள நான்கு குணங்களுமாய், தீயிலுள்ள மூன்று குணங்களுமாய், வாயுவிலுள்ள இரண்டு குணங்களாய, ஆகாசத்திலுள்ள ஒரு குணமாய, வேறு வேறு தனமையாய், காரிய காரண வஸ்துககளில் விளங்கும உனனை நினைக்க வல்லவர் யார்? (அவனே ஜகத்திறகு உபாதான காரணம, ஸகுண ரூபி, யாவுக்கும் அந்தராத்மா).

லோகத்திலே ஒன்றிற்கொனறு தாரகமாயும் தரிக்கப் படுவதாயும் உள்ளவை யாவுக்கும் தேவரீரே தாரகம். இநதத தத்வத்தை ஒருவரும் தன சக்தியால் காணமுடியாது.

எலலோராலும் ஆசிரயிக்கத் தகுநதவனென்பதால் அவனையே உபாஸிக்க வேண்டுமென்று ஏறபட்டது. மேலும ஜகத்திற்கு அவன் காரணமானதாலும அவனை நாம் போறறுவது தகும்.

அவனுடைய அவதார ரஹஸ்யததை யாவரும் அறிய முடியாதோ வெனில் கோபாலாகளுடன கலந்து பழகின அவனே காட்டித்தர வேண்டுமே யல்லாது நமது ஸாமர்த்தியத்தால் காண முடியாது.

ஆனால் நீ எபபடி அறிந்தாயென்றால், வேறு பிரயோஜன மற்றவர்களுக்காக சேதனுசேதன பதார்த்தங்களாய் வநது அவதரித்த உன் குணங்களை நான் முறறிலும் அறியமாட்டேனாகிலும், உன் திருமேனியின் அழகு வேதத்தாலேயே நன்ருய் அறியத தகுநததென்றறிந்தேன். இது போதாதோ.

பரம பதத்தில் நித்ய விபூதியில் எழுநதருளியிருப்பவன் அதைத் துரும்பா யெண்ணித் துறந்து வியூகம் முதல் ஸ்தாவரங்கள் வரையில் அவதரித்து லீலா விபூதியைக் கைக்கொண்டதும், இவை ஒவ்வொன்றே பிரமாணங்களால் அறிய முடியாதிருக்க அர்ச்சாவதாரமெடுத்து அண்டினவர்க்கெளியனாய், அடியாருடைய கோறிக்கைகளை நிறைவேற்றுகிறவனாய்

உலகத்தில் தன்னை நியமித்த உன் ஸௌலப்யத்தை நினைக்க நினைக்க ஆச்சரியமுண்டாகிறது.

பிரஹ்மாதி கணங்கள் போற்ற, திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளுகிற இம்மேன்மைதானே உன் ஸ்வபாவத்தை விளக்கிற்று. ஸமுத்ரத்தைக் கடைந்து அமிருதத்தை எடுக்கும்பொழுது ஆமையாய் நின்ற நிலைமையே உன் மேன்மைக்கு எல்லையாயிற்று. இவைகளைப் பிரித்து என் நெஞ்சிலே பட அருளிச் செய்ய வேண்டும்.

உன் கல்யாண குணங்களின் எல்லையை நித்ய ஸூரிகள் அறியார். பிராட்டியைத் தவிர வேறு யாருக்குத் தெரியும்?

தன்னை அண்டினவர்களுக்கு நேரும் இடையூறுகளைப் போக்குமிடத்தில் நீ எதைச் செய்தாலும் செய்வாய். அரசனாய்ப் பிறந்து அரக்கனைக் கொல்வாய். வாமனனாய்ப் பிறந்து பிச்சையுமெடுப்பாய்.

இப்படி உன் பிறவிகளுக்கு ஏற்றத் தாழ்வைப் பார்க்காததுபோல், உன்னை அண்டினவர்களின் பிறப்பு ஞானம் சீலம் முதலியவைகளையும் நீ பொருட்படுத்துவதில்லை.

தேவதைகளை ரக்ஷிப்பதல்லாமல், பிராட்டி முதல் அசேதன பதார்த்தங்கள் வரையில் தன்னை வந்தடையாமற் போகக்கூடாதென்ற ஒரு காரணத்தையே மேற்கொண்டு அவர்களுக்கு நேரும் இடையூறுகளைப் போக்கி அவர்களைக் காப்பாற்றும் ஆச்சரியத்தை வர்ணிக்க முடியுமோ?

உன் கருணைக் குகந்தவரைக் காப்பாற்றுமிடத்து, நீயும் அவரைப் போல் பிறந்து அவர்களுடன் கலந்து பழகுகிறாய். உன்னைத் திரும்பிப் பாராத ஜீவர்களையும், உன் ஸங்கல்பத்தால் உனக்கனுகூலமாகும்படி செய்து கொள்ளுகிறாய்.

உன் ஸௌலப்யத்தையும் கருணையையும் பயனின்றி செய்து, அதை அதிகரித்த என்னைப்போன்ற ஸம்ஸாரிகளின் தீய காம வாஸனையை என்ன சொல்வேன்? அவர்களி லொருவனான எனக்குத் தேவரீருடைய பரத்வத்தையும் ஸௌலப்யத்தையும் அடியார்க் கெளியனாய்ப் போறாதார்க்கு அரியனாயிருக்கும்படியையும் காட்டி என்னை உனக்கே தகுந்தவனாய்ச் செய்தது என்ன ஆச்சரியம்?.

ஐயா! அனந்தன்மேல் கிடந்த எம் புண்ணியா! வென்று ஸ்வரூபத்தை அறிவிக்கையாலே; ஸம்ஸாரத்திலே வந்து பிறந்தும், பெரிய திருவடிகளின் தோளிலே ஏறி அடியாரிருக்கு மிடத்திற்குச் சென்று காப்பாற்றின காலத்தையெல்லாம் இழந்தேன். இனியாவது இடையூறுகளைப்போக்கி நான் உன்னைப் பெறும் உபாயத்தை அருளிச்செய்.

பர வியூக விபவங்கள் நீ ஆசிரயிக்கத் தகுந்தவையன்றோ? அவை களில் ஓரிடத்தைப்பற்றி நம்மைப் பெறமாட்டீரோவெனில், அவ்விடங்கள் எனக்குக் குறிப்பல்ல. நான் கைப்பற்றி ஆசிரயிக்கக்கூடிய ஓரிடத்தை அருளிச் செய்யவேண்டும்.

"நீ ஒன்றைப்பற்றி என்னைச் சரணமடைந்தால் அதற் கனுகூலமாக பலத்தைக் கொடுப்பதே யொழிய நீ பற்றத் தகுந்த ஸ்தலங்களைக் காட்டிக் கொடுப்பது நம கடமையோ" வெனில், உன்னை அண்டினவர் அண்டாதா ரென்ற பேதமின்றி எப்பொழுதும் பிறர்க்கே இதத்தைச் செய்யும் இயற் கையை யுடையவனென்று ஏற்பட்டபிறகு நான் வேண்டினதைச் செய்வதும் உன் கடமையே.

நான் இருந்தவிடத்திலே என் பார்வைக்கு விஷயமாய் அவதாரங் களி லுண்டான மேன்மைகளும் இழக்க வேண்டாதபடி ஸகல கல்யாண குணங் களோடும் திருக்கோயிலில் கண்வளர்ந்தருளும் காக்ஷியைக் காட்டக் கண்டு அனுபவிக்கப் பெற்றேன்.

"நடந்த கால்கள் நொந்தவோ! நடுங்க ஞாலமேனமாய்,
இடந்த மெய் குலுங்கவோ விலங்கு மாலவரைச்சுரம்
கடந்தகால பரந்த காவிரிக் குடந்தையுள்
கிடந்தவா றெழுந்திருந்து பேசு வாழி கேசனே."

அ—து—உலகத்தை அளந்த திருவடிகள் நோவுபட்டது பொறுமையா லோ? ராமனுக்குக் காட்டிலும் மேட்டிலும் நடந்த திருவடிகள் நோவுபட் டது பொறுமையாலோ? காலல சேவாலே நடுங்குகிற பூமியை வராஹமாய் அண்டசுவரிலேயே புகுந்து தூக்கியெடுத்த திருமேனியில் சோம்பலா லோ? திருக்காவிரிக்கரையில் திருக்குடந்தையில் கண்வளர்ந்தருளுகிற விதத தை யெழுந்திருந்து அருளிச்செய

இங்கே ஆழ்வார் ஆராவமுதனுடைய திருவடிகளில் தன்னை இழந்து அனுபவித்து அவர் அர்ச்சாவதார மென்பதையும் மறந்து தன்னு டன் பேசவேண்டினார். இவருடைய பக்திக்கு வசப்பட்டு ஆராவமுதனும் சயனித்த திருக்கோலத்தை விட்டு சற்றுச் எழுந்தாரென்றும் அப்படியே இப் பொழுதும் ஸேவை ஸாதிக்கிறாரென்றும் இவருடைய சரித்திரத்தில் காண லாம். அதைக் கண்டே இவர் எம்பெருமானுக்கு திருஷ்டித்தோஷம் வரா மல் மங்களாசாஸனம் செய்தார்.)

கடல் வண்ணனான கண்ணன் அன்பிற் கெளியவன். நமது ஆயு ளோ கர்ப்பவாஸத்தில் முடிந்தாலும் முடியும். நூறு வருஷங்கள் சென் றாலும் செல்லும். இப்படி எல்லையில்லாத பிரஹ்மா முதலானவர்களும் பதினன்கு புவனங்களும் அவனிடத்திலேயே உண்டாகி, இருந்து அழி

கின்றன. இந்த ஸம்ஸாரமோ அல்பம், அஸ்திரம், ஈச்வரனை ஆசிரயித்தால் மறுபிறப்பில்லாத மோக்ஷம் கைமேல் கிடைக்கும். இப்படியிருந்தும் ஸம்ஸாரிகள் அவனை அடைய எண்ணமிலிருப்பது எக்காரணத்தாலோ?

இப்படி அவர்கள் தங்களுக்கு ஹிதம் இன்னதென்று அறியாவிட்டாலும் இதில் ருசி பிறந்தபொழுது, இதை இழக்கக்கூடாதென்று பார்த்து, இவர்கள் கொடிய நரகங்களை அடைவதைத் தடுக்க முயன்று அதற்குத் தகுந்த தத்வோபதேசத்தைச் செய்வது நமது கடமை. அர்சிராதி மார்க்கமாய்ப் போய் என்றும் அழியாத பரமபதத்தை அடைய விரும்பும் மானிடர்களே! பகவானே உங்களுக்கு உபாயம், பகவானே உங்களுக்கு அடைவிக்கிறவன், பகவானே நீங்கள் அடையும் பயன், அவனையே சரணம் புகுங்கள்.

முக்குணங்களின் வலிமைக்கு உட்பட்டு, ராஜஸ தாமஸ தேவதைகளைப் போற்றிக் கடைத்தேறப் பார்க்கும் மூடர்காள்! ஸத்வகுணம் தலையெடுத்துப், புருஷோத்தமனை ஆசிரயித்துக் கடைத்தேறும் வழியைத் தேட மாட்டீர்களா?

அந்தத் தேவதைகளைக் கைப்பற்றியல்ல கடைத்தேற வெண்ணுவதோ வெனில், ஐயோ! அவர்களைப் பாரிப்பது எளிதா? அப்படிப் பூஜித்தாலும் நமக்கு வேண்டிய பலன்களைக் கொடுப்பதில் அவர்களுக்குச் சக்தியுண்டோ? ஆகையால் ஜகத்காரண வஸ்துவான பரமபுருஷனை அண்டி ஸம்ஸாரப் பெருங்கடலைத் தாண்டுங்கள்.

தேவதைகளுக்குச் சக்தியில்லையென்று சொல்வதேன்? அவர்களைப் பூஜித்துத் தங்களிஷ்டங்களை நிறைவேற்றினவரில்லையோவென்றால், ருத்ரனை அண்டின பாணாஸுரன கதியைப் பாருங்கள்.

எம்பெருமானுடைய கிருபையே மோக்ஷத்திற்கு ஸாதனமானால் அதை விரும்பும் ஸம்ஸாரி அனுஷ்டிக்க வேண்டும் காரியமென்னவென்றால், அவனுடைய திருவடிகளிலே தலை சாய்த்தல், அவனுடைய திருநாமங்களை வாயாரச் சொல்லுதல், இவைகளால் புருஷார்த்தங்கள் ஸித்திக்கும்.

அவனுடைய கடாக்ஷத்தால் இடையூறுகளைப் போக்கி அவனைப் பெறுவதைத் தவிர வேறு உபாயங்களைக் கைப்பற்றுவது வீணேயாகும். கர்மயோகம் முதல் பரமபக்திவரையில் ஸாதிக்கும் ஜீவன்களின் முயற்சிகள் யாவும் நமது மனோபீஷ்டங்களைக் கொடுக்காது.

திரவியத்தை ஸம்பாதிப்பதாலுண்டாகும் வருத்தமும் பரஹிம்ஸை முதலியவையால் வரும் பாபமும் நிறைந்த கர்ம யோகத்தைக் காட்டிலும்

மேலான படி யென்று நினைத்து இந்திரியங்களை அடக்கிச் செய்யும் ஞான யோகத்திலே ஆரம்பத்தில் புகுகிறவர்களுடைய முயற்சிகளும் பயன்படா. ஆகையால் கர்ம ஞானங்களை உதவியாகக் கொண்டு விருத்தியடைந்த பக்தியாலே பகவானை யடைய முடியும்.

ஸர்வாந்தர்யாமியான பரமாத்மாவை சாஷ்டாங்கமாய் நமஸ்காரஞ் செய்து அவனுடைய திருமந்திரத்தால் அவனை யார் ஆராதிக்கிறார்களோ அவர்களுக்கே பரமபதம் உரியது.

ஆனால் சுவேத த்வீபத்தில் வஸிக்கும் புண்யாத்மாக்களுக்குத் தவிர மற்றவர்களுக்கு இந்தப் பாழும் ஸம்ஸாரத்தில் அது கிடைக்குமோ வென்றால், பத்து அவதாரங்களுக்கும் இருப்பிடமான பாற்கடலிலிருந்து தன் மேன்மையைப் பாராமல் இவ்வுலகத்தில் வந்து நமக்கு ஸுலபனான அவனுடைய திருவடிகளிலே அந்த அவதார ரஹஸ்ய ஞானத்தையே கொண்டு பக்தி பண்ணினவர்களுக்கல்லாது மற்றவர்க்கு மோக்ஷத்தில் ஸம்பந்தமில்லை.

இடைச்சேரியில் வந்து தாழ்ந்தவர்களுடன் பழகி அவர்களைத் தன் திருவடிகளில் சரணடையச் செய்து அவர்களுக்கு நேர்ந்த இடையூறுகளைப் போக்கின கண்ணனுடைய திவ்ய சரிதங்களில் மனம் லயித்தா லல்லது நித்யஸூரிகளுடன் ஸமமாய்ப் பரமபதத்தில் விளங்குவதற்கு வேறு உபாயமில்லை.

பர வியூக விபவ முதலிய நிலைமைகள் வேறு தேசத்திலும் வேறு காலத்திலுமே பயன்படக்கூடியவை யென்றறிந்து அதில் சக்தியற்ற ஸம்ஸாரிகள் அஜ்ஞானத்தால் அழியாதபடி திருமலையில் வந்து ஸேவை ஸாதித்தருளும் எம்பெருமானுடைய திருவடிகளை யடைந்து நற்கதியைப் பெறுங்கள்.

துக்கக் கடலான இவ்வுலகத்தில் ஸுகங்கிடைப்ப தேதென்றால் உன்னைப் பரமபதத்தில் வந்தடையும் ஆனந்தம் இந்த ஸம்ஸாரத்திலே யிருந்து உன் திருவடிகளில் இடைவிடாத அன்பு செலுத்தி பக்தி செய்வதாலுண்டாகும் ஆனந்தத்திற்கு ஈடாமோ.

ஐயோ! இவ்விதமான பக்தியை என்னிடத்தில் காணேனே. கேவலம் மாயைக்கும் முக்குணங்களுக்கும் அடிமையா யிருக்கிறேனே. எம்பெருமானோ ஸ்வதந்திரன். அவன் நினைத்தால் மோக்ஷம் கிடைக்கும். என் விஷயத்தில் அவன் என்ன எண்ணியிருக்கிறானோ. அவனுடைய திருவடித் தாமரைகளில் பரமபக்தி செய்யும் பாக்யத்தை அருளிச் செய்

வானோ; அல்லது, எப்பொழுதும் இந்தப் பிறவிக்கடலில் தடுமாறும்படி கிடத்துவானோ.

என்னை இப்படி சீர்கேட்டில் வைத்தபோதே உன் எண்ணம் இன்னதென்றறிகிலேன். ஆயினும் உன்னருளால் உன் திருவடிகளில் பிறந்த பக்தியை மாற்றி மற்றவைகளில் என் மனம் செல்லாதபடி செய்வது உன் கடமையே.

இப்படி என்னைப்பற்றி ஸந்தேஹப்படுவதற்குக் காரணமென்னவென்றால், எனக்கு நேரும் இடையூறுகளைப் போக்கவல்ல நீ மாயையின் பாசத்தைத் தெறித்து, என்னை யாட்கொள்ளாம விருப்பதே காரணம போதாதோ.

என்னைத் தவிற உனக்கு வேறு அடைக்கலமில்லையோ வென்றால், பிரஹ்ம ருத்ராதிகள் தங்களுடைய மேன்மைக்கும அதிகாரத்திற்கும் காரணமாய் உன்னையே உபாஸிக்கிறார்களன்றோ. எல்லாம் வல்ல உன்னைத தவிர வேறொரு பற்று எனக்கில்லை.

நீயே எனக்கு அடைக்கலமானாலும் உன்னை யடைய உன் திருவடிகளைத் தவிற என்னிடத்தில் வேறு உபாயமில்லை.

பெரும் பயனை யடைய விரும்பும் நீ உனக்கு நேரும் இடையூறுகளை நீயே தீர்த்துக் கொள்ள வேண்டாமோ, எனனை வேண்டுவதேனென்றால், அசோகவனத்தில் சிறையிலிருந்த சீதாபிராட்டி தன்னை விடுவித்துக் கொள்ள நினைக்கும்போது எனக்கும அந்தப புத்தி தோன்றட்டும்.

என்னாலொன்றும் முடியாது; வேறொருவரைச சரணடையேன்; என்னை நானே காப்பாற்ற நினைக்கும புத்தியைக் கொடுக்க வேண்டாம்.

நான் உன்னை விட்டுப் பிரியாதிருப்பதற்கு நீ செய்யும் உபாயமென்ன? நான் உனக்குச் செய்ய வேண்டியதெனனவென்றால், உன்னைச் சரணடைவதற்கு வேறு யோக்யதை வேண்டுவதில்லை. நான் அசக்தன்; அக்ஞானி. பாபியென்றதும், நீ ஸர்வேச்வரனென்றதுமே போதும். உன்னைச் சரணமடைந்தேன். 'இனி பயப்படாதே, உன் காரியத்தை நான் பார்த்துக்கொள்ளுகிறே'னென்று உறுதி சொல்.

இவ்வளவே போதுமல்லவாவென்றால் வேறு உபாயங்களைக்காட்டி என்னைத் தள்ளிவிடாமலிருப்பதற்காக நான் சொன்ன வார்த்தையல்லவா அது. உம்முடைய ஒப்பற்ற அழகைக் கண்டு அனுபவிக்க ஆசைகொண்ட எனக்கு மற்ற விஷயங்களிலிருந்து என்னைத் திருப்பி உன்னையே அனுபவிக்கும்படி என்னிடத்தில் இரக்கம் வை.

உன்னை யனுபவிப்பதற்கு விரோதிகளைப் போக்கவும் அதற்கனுகூல மானவைகளை உண்டாக்கவும் அந்த அனுபவத்தை நித்யமாகச் செய்யவும் வேண்டுமென்று நீ விரும்பாமல் என்னிடத்தில் இரக்கம் வை யென்று கேட்கலாமோவென்றால், ஜகத்தில் யாவும் உனக்கு உட்பட்டதேயொழிய ஸ்வதந்திரமாய் ஒன்றுமில்லையே. என் எண்ணம் நிறைவேறுவதற்கு உன் அருளே போதும்.

லௌகிக ஸுகங்களில் ஆசையைத் தவிர்த்து உன்னிடத்தில் ருசியை யுண்டாக்கி உன் கைங்கரியத்தையே வேண்டும்படி என்னைச்செய்த நீ, பிறகு எண்ணம் மாறிக் கைவிட்டு விஷய ஸுகங்களில் கிடந்துழலும் படி செய்தாலும் உன்னைத் தவிற வேறு கதி எனக்குண்டோ.

இது போகட்டும். உனக்கு வேண்டியதை நிச்சயித்துச் சொல் லென்கிறீரோ, ஸம்ஸாரத்தை யறுத்து, உன் திருவடிகளிலே பொருந்தும் படியாக அருள்புரிவதே.

என் விசேஷ கடாக்ஷத்திற்கு உன்னிடத்தில் ஒரு முதல் வேண் டாமோ வெனறால், உன் திருமார்பில பிராட்டி எழுந்தருளியிருக்க, திருக் கையிலே திவ்யாயுதங்களிருக்க ஒரு முதல வேண்டுமோ. அப்படி உனக்கு நிர்ப்பந்தமிருந்தால் என் இடையூறுகளை நீக்கி உன்னையண்டி அடிமை செய் வதறகு ஓர் உபாயத்தை நீயே தந்தருளவேண்டும்.

உன்னை யடைய வேண்டுமென்று ஆசையும், அவ்வாசையால் இடை யூறுகள் நீங்குவதுமே பற்றாகக கொண்டு இந்தப் பிறவி துயரங்களை யொழிக் குமபடி நீயே பண்ணியருள வேண்டும்.

இதையே உனக்கு முதலாகச் சொல்வாயானால் அநாதி காலமாய் நரக ஹேதுவாய் நீ செய்த இடையூறுகளுக்குப போக்கடியாக நீ நினைத் திருந்ததென்னவெனறால் பிராட்டியைப புருஷகாரமாக வைத்துக்கொண்டு ஸமஸ்த பாபங்களிலிருந்தும் உன்னை விடுவிக்கிறேனென்று உறுதி சொன்ன உன் திருவடிகளிலேயே ஸகல பாரத்தையும வைததேனென்பதை யொழிய வேறு போக்கடியுண்டோ. ஆகையால் கீழ்ச் சொன்ன கர்மத்தின் பயனாக வரும யம பாதையை நீக்கி உன் திருவடிகளில் இடை விடாது பக்தி செய்ய அருள்வாய்.

இந்திரியங்களை ஜயித்து இடைவிடாது உன்னையே தியானஞ் செய் யும்படி அனுக்ரஹிப்பாய்.

அதற்கு இந்தச் சரீரம் போக வேண்டுமென்றால் உன்னைக் காப் பாற்றுகிறேனென்று ஒரு உறுதி வார்த்தையாவது சொல்,

பிரஹ்ம ருத்ராதிகளுடைய லோகங்களையும் இந்திரனுடைய பதவியையும் சேர்த்துக் காலமுள்ள வரையில் ஆளும் பாக்யத்தைப் பெற்றாலும் அந்த மோக்ஷம் வேண்டாம். உன்னைக் கூட வேண்டுமென்று ஆசையைத் தவிற வேறொன்றையும் என் மனம் வேண்டாது.

எனக்கு முன்னிருந்த தேவர்களும் முனிவர்களும் உன்னைப் போற்றினபடி நான் துதிக்க வல்லேன். என கொடிய சொல்லையும் பொறுத்தருளி, ஏதோ ஆசையால் சொன்னேனென்று மன்னிப்பாய். நீ என்னையாட் கொள்ளும் வரையில் காலம் போக்குவதற்காகச் செய்யும் உபாயமன்றோ

மற்றக் கருமங்கள் போனாலும் பிராப்தம் அனுபவித்தே தீருமென்றார்கள். ஆனால் உன்னை யடைந்து உன்னிடத்தில் அனன்யமாய்ப் பிரபத்தி செய்தவர்களுக்கு அந்தப் பிராரப்தமும் ஒழியும்.

"இயக்கராத பல் பிறப்பிலென்னை மாற்றி இன்று வந்
துயக்கொண் மேக வண்ணனண்ணி என்னிலாய தன்னுளே
மயக்கினான் தன் மன்னு சோதியாதலா லென்னாவிதான்
இயக்கெலா மறுத்தறாத வின்ப வீடு பெற்றதே"

அ—து·—இடைவெளியில்லாத பல பிறப்புகளில் புகுந்ததால் அக்ஞானியான என்னை மாற்றுவதற்காக என்னிடத்தில் யாதொரு யோக்யதையுமில்லாவிட்டாலும் கேவலம் கிருபையால் நீயே வந்து கடைத்தேறும்படி நானிருக்குமிடத்தைத் தேடி என் மனத்தில் உன் நித்யமான ஒளி வீசும திவ்யமங்கள விக்ரஹத்தை காட்டிப் பிரிக்க முடியாதபடி கலந்தாய். ஆகையால் என் ஆத்மா மாயை முக்குணங்கள் கர்ம வாஸனை முதலியவைகளைத் திரும்பாதபடி யழித்து நித்யமாயும் ஒப்பற்றதாயும் துக்கக் கலப்பில்லாததாயுமிருக்கும் ஆனந்த மென்கிற உன் கைங்கரிய ரூபமான மோக்ஷத்தை யடைந்தது.

## நான்முகன் திருவந்தாதி.

இது இவ்வாழ்வார் அருளிச் செய்த இரண்டாவது பிரபந்தம். இதில் பாசுரங்கள் 96. இதற்கு சிராமப் பிள்ளை தனியனையும் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தையும் அருளிச் செய்திருக்கிறார். முதலாழ்வார் பரஸ்வரூபத்தையும் அதை யடைவதற்குப் பக்தியையும் ஞானத்தையும் உபதேசித்தார்கள். இவர் இந்தப் பிரபந்தத்தால் அதற்குக் களைப்

பிடிக்கிறார். 6வது பாசுரத்தில் "அறியார் சமணர் அயர்த்தார் பௌத்தர்" என்று சொல்லுவதைக் கொண்டு இந்த நூல் செய்யப்பட்ட காலம் ஜெயின பௌத்த மதங்கள் உண்டான கி. மு. 7-வது நூற்றாண்டிற்குப் பிறகு இருக்கவேண்டுமென்று தோன்றும். ஆனால் துவாபரயுகத்தின் முடிவில் இவ்வாழ்வார் அவதாரம் செய்தாரென்பதற்கும் எப்படிப் பொருந்தும். ஆனால் இவர் கலியுகம் பிறந்து 3600 வருஷங்களுக்குப் பின்பே வைகுண்டம் சென்றாரென்று சொல்லியிருப்பதால் அந்த மதங்களுக்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னும் இருந்ததால் இதில் முரணில்லை. இந்தப் பிரபந்தத்தில் இவ்வாழ்வார் நாராயணனுடைய பரத்வ ஸ்தாபனத்தையும் இதர மத கண்டனத்தையுமே உத்தேசித்தாரென்று "நான்முகனை நாராயணன் படைத்தான். நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்" என்றதால் விளங்கும்.

திருமழிசை யாழ்வார் திருவடிகளே சரணம்.





# பெரியாழ்வார் வைபவம்.

இவர் கலியுகத்தில் 47-வதான குரோதன ஸ்ரீ ஆனிமீ சுக்லபக்ஷம் ஏகாதசி ஞாயிற்றுக்கிழமை ஸ்வாதி நக்ஷத்திரத்தில் பாண்டிய நாட்டிற்குச் சிரோமணிபோல் விளங்கும் ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதாரஞ்செய்தார். இவர் வேதாதமாவான பெரிய திருவடியின் அம்சத்தாற் பிறந்தவர். இவருடைய பிதா முகுந்தபட்டர், மாதா பத்மவல்லி. இவருடைய குடிப் பெயர் வேயா குலம். சோழிய ரென்று சொல்லப்படும். முன் குடுமி பிராமணர். இவருக்கு விஷ்ணுசித்த ரென்ற பெயருக்குத் தகுந்தபடியே பிறந்தது முதல எம்பெருமானிடத்திலேயே நாடின உள்ளமுடைய வராய் மனோ வாக்குக் காயங்களால் அவரிடத்திலேயே ஈடுபட்டிருந்தார். ஸ்ரீவைகுண்டத்திலிருந்து சேனை முதலியார் வந்து இவருக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களையும் மநதிரோபதேசத்தையும் செய்தார். இவருடைய மனம் இயற்கையாய்த் தசாவதாரங்களில் மிகவும் மனோஹரமாயுள்ள கிருஷ்ணவ தாரததில் நாடி, அவனுக்கு உகந்த கைங்கரியம யாதென்று ஆலோசிதது ராமகிருஷ்ணர்கள் கோகுலத்தினினறு மதுரைக்குச் செல்லுகையில் ஒரு மாலைக்காரன் அவர்களுக்கு அழகிய மாலைகளைக் கட்டி ஸமர்ப்பிதது அனுக்கிரஹம் பெறறு, நீங்காத செல்வமும நேர்மையும் நீண்ட ஆயுளும் நல்ல ஸந்ததியும் தர்ம சிந்தையும் பெற்றதைக் கவனித்துத்தானும் அப்படியே செய்தார். ஒரு திருநந்தவனத்தை யமைதது அதில் வளரும் பலவகைப் புஷ்பங்களாலும் திருததுழாயாலும் பலவிதமான மாலைகளைக் கட்டி அத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கிற வடபெருங்கோயிலுடையானுக்கு ஸமாப்பிதது வந்தார்.

இபபடியிருக்கும நாளில் அந்த நாட்டை யாண்டுகொண்டிருந்த வல்லபதேவ பாண்டியன் மதுரையில் ஓரிரவில் மாறுவேடம் பூண்டு நகர் சோதனை செய்ய வந்தபொழுது, அங்கோர் திண்ணையில் தனியே படுத்திருந்த ஓர் அந்தணனைக்கண்டு யெழுப்பி "யாரெ"ன்று கேட்டான். அவரும் "நான் கங்காஸ்நாநஞ் செய்து திரும்பி ஸேதுவுக்குப்போகும் யாத்ரை பிராமண"னென, அரசன், "நீர் பலவிடங்களில் சுற்றித்திரிந்தவர்; பலரைக் கண்டு பேசியிருப்பீர். இதுவரையில் உமக்குத் தெரிந்த தனுள் முக்கியமான நன் மொழியா"தென, அந்தப் பிராமணன் "மழைக் காலத்திற்கு வேண்டியவற்றை மிகுந்த எட்டு மாதங்களிலும், இரவிற்கு வேண்டியவற்றைப் பகலிலும் கிழவயதிற்கு வேண்டியவற்றை இளமையிலும், பரலோகத்திறகு வேண்டியவற்றை இவ்வுலகி

தும் ஸம்பாதிக்கக் கடவனெ"ன்ற சுலோகத்தைச் சொன்னார். அரசன் அவரை யடிபணிந்து போற்றி, அரண்மனைக்கு வந்து, "இவ்வுலகத்தில் நான் விரும்பும் பொருள் யாதொன்றுமில்லை; பர லோகத்தில் நல்ல கதி யடைவதற்கு வேண்டிய உபாயததை இதுவரையில் செய்யாமலிருந்ததே குறை"யெனறு நிச்சயித்தது, தனக்கு நண்பரும் புரோஹிதரும் ஸ்ரீ வைஷ்ணவரும் வேதவேதாந்தங்களில் கரைகண்டவருமான செல்வநம்பியை யடுத்து, அடிபணிந்து "ஸ்வாமி! மறுமையில் பரம மங்களத்தையடைவதற்கு நான் போற்றவேண்டிய தெய்வம் யாது? அதை நிச்சயிக்கும் வழியென்ன" வென்றான். நம்பி "மன்னவா! தத்வக்ஞானிகளான பல மத நிபுணர்களையும் பாகவதாகளையும் தருவித்து ஒன்று சேர்த்து அவர்களுடைய திருமொழிகளைக் கேட்டு முடிவில் பர தைவம் யாதென்று ஸித்தாந்தமாகிறதோ அதையே கைப்பற்ற வேண்டும். உன் ஸபா மண்டபத்திற்கு முன் ஒரு தோரணக் கம்பத்தை நாட்டி. அதன் உச்சியில் பெரிய தனத்தைக கட்டி வைத்து, 'எந்த மதஸ்தரானாலும் பரம் பொருள் இன்னதென்று நிர்ணயம் செய்பவா அதை யெடுத்துக் கொள்ளலா'மென்று நாடெங்கும பறை சாற்றக் கடவா" யென்றார். அரசன் அபபடியே செய்ய, தேச தேசங்களிலிருந்து பௌதத ஜையின சைவ சாக்த மாயாவாத சாங்கிய வைசேஷிக பாசுபதாதி மதங்களில் முதன்மை வாய்நதவர் யாவரும் திரள் திரளாகத தென்மதுரைக்கு வந்து, குறிப்பிட்ட நாளில் ஸபா மண்டபத்தில கூடினார்கள்.

அதற்குள் எம்பெருமான் இவ்வாழ்வாரின ஸ்வபனத்தில் எழுந்தருளி "நீர் பாண்டியனுடைய ஸதஸிற்குப் போய் நமது பரத்வத்தை நாட்டி அநதக் கிழியை யறுத்து வாரு"மென விஷ்ணுசித்தர் "அடியேன் பண்டிதறகன்றோ. சாஸ்திரக்ஞானமற்ற எனக்கு அநத யோக்யதை யில்லையே" யெனக், கோவிந்தன் "உமக்கு அந்த விசாரமேன்? உம்மை யனுப்பும் நான் அதறகு வேண்டிய ஏறபாடு செய்யாமலிருப்பேனோ" வென்று வறபுறுத்திச் சென்றார். ஆழவார் தான் கண்டகனவை அவ்விடத்திலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குத தெரிவிக்க, அவர்களும் ஸகல விருதுகளுடன் அவருக்குத் துணையாய்ச் சென்றாகள். அவர் மதுரையில் திருப்பல்லக்கில் பாகவத கோஷ்டியுடன் எழுந்தருளுவதைக் கண்ட அரசனும் செல்வநம்பியும் அவரை எதிர்கொண்டழைத்து விசேஷ உபசாரங்களுடன் ஸபையில் எழுந்தருளப்பண்ணி, அடிபணிந்து உத்தமமான ஸிங்காதனத்தில் வீற்றிருக்கச் செய்தான்.

அதைக்கண்ட யாவரும் சாஸ்திர வாஸனையே யில்லாத இந்த வறட்டு பிராமணனுக்கு அகாரணமாய் இவ்வரசன் செய்த உபசாரம் யாவும்

நம்மை அவமதித்ததுபோ லாகுமென்று கோபத்துடன் ஆரவாரித்தார்கள். அப்பொழுது அரசனும் நம்பியும் ஆழ்வாரைக் கைகூப்பி நமஸ்கரித்து "ஸ்வாமி! தேவரீர் இந்த மஹா ஸதஸில் திருவாய் மலர்ந்தருளி, இதர மதங்களை ஆராய்ந்து பரீக்ஷித்துக் குணதோஷங்களை எடுத்துச் சொல்லி பரதெய்வம் யாதென்று வேதசாஸ்திர பிரமாணங்களால் நிர்ணயம் செய்ய வேண்டு" மென்று பிரார்த்தித்தார்கள்.

அப்படியே எம்பெருமானுடைய கிருபாகடாக்ஷத்தால் விஷ்ணுசித்தர் ஸகல வேத சாஸ்திர இதிஹாஸ புராணநிதியாய் விளங்கிக் கங்காப் பிரவாஹம்போல கம்பீரமாய்த் தடையின்றி வைதிக மதங்களையும் அல்லாதவற்றையும் ஒவ்வொன்றாய் எடுத்து விசாரித்துப் பூர்வபக்ஷ ஸித்தாந்தஞ் செய்து, முடிவில் புண்டரீகக் கண்ணனை மஹாவிஷ்ணுவே பர தெய்வமென்று ஸ்தாபித்து, 'அந்த வடபெருங் கோவிலுடையானைச் சரணமடைகிறேன். நீங்களும் ஜனனமரண பிரவாஹரூபமான ஸம்ஸாரத்திலிருந்து கரையேற விரும்பினால் அவனுடைய திருவடிகளிலேயே சரண் புகக்கடவீர்' ரென்று பரதத்வ நிர்ணயஞ் செய்தார். அங்கிருந்த மற்ற சமய நிபுணர்கள் தங்களுடைய மதக் கொள்கைகளை வெகு விமர்சையுடன் எடுத்துச் சொல்லப்பட்டதை, தாங்கள் கூறும் ஆக்ஷேபங்களும் எடுத்துக் காட்டி கண்டிக்கப்பட்டு, அவைகளுக்கு மேல தாங்கள் எவ்வகையிலும் ஆக்ஷேபிக்க முடியாத ஸித்தாந்தம செய்யப்பட்டதைக்கண்டு, தலைகுனிந்து, மௌனமா யிருந்தார்கள். அப்பொழுது கம்பத்திற் கட்டியிருந்த பொற்கிழி தானே தாழ வளைந்து ஆழ்வாரின கையண்டை வர, இவரும் அதை யறுத்தருளினார்.

பிறகு அரசனும் செல்வநம்பியும் ஸபையிலிருந்த பண்டிதர்களும் ஆழ்வாரை அதிகப் பிரீதியுடன பட்டத்து யானைமேல் ஏற்றுவித்து, அந்நகர வீதியில் வலம் வந்து அவருடைய பெயரையும் பிருதுகளையும் வேதப் பயன் கொள்ளவல்ல விஷ்ணுசித்தரென்றும், வில்லிபுத்தூர் வேதக்கோனென்றும், பட்டர்பிரானென்றும் எடுத்துக்கூறி மஹோத்ஸவங் கொண்டாடினார்கள். அப்பொழுது வடபெருங்கோவிலுடையான் தேவிமார்களுடன் பெரிய திருவடிமேல் நித்ய ஸூரிகளால் சூழப்பட்டுத் தன் மகன் பெற்ற கௌரவத்தையும் கீர்த்தியையும் கண்டுகளிக்க ஆகாசவீதியில் எழுந்தருளி அவருக்கு ஸேவை ஸாதித்தார். ஆழ்வார் அந்தப் பெரும் பேற்றால் தான் சிறிதும் இறுமாப்புக் கொள்ளாமல் அவரை வணங்கி அநுபவித்துத் தனக்கு வேண்டியவற்றைக் கோராமல் தன்னை மறந்து, பரமபுருஷனை திருமாலுடைய ஸௌந்தரியத்தில் ஈடுபட்டு ஸ்ரீவைகுண்டத்தில் திருமாமணி மண்டபத்தில் விளங்கும் இப்பரம் பொருள் கால்

யாய் இவ்வுலகத்தில் வந்து ஜீவன்களுடைய கண்களுக்குப் புலப்பட்டால் இந்தத் திருமேனிக்கு என்ன தீங்கு நேருமோ, என்ன திருஷ்டிதோஷம் நேருமோ வென்றஞ்சி, ஸர்வேச்வரனை மாதவனைத்தான் மங்களாசாஸனஞ் செய்து, 'உனக்கு ஒரு குறையும் வராதிருக்கக்கடவ' தென்று வாழ்த்தி, யானையின் மணியோசையையே தாளமாய்க்கொண்டு திருப்பல்லாண்டை பாடியருளினார்.

பிறகு பாண்டியனையும் செல்வநம்பியையும் கடாக்ஷித்து ஹிதோபதேசஞ்செய்து ஸ்ரீவில்லிபுத்தூருக்கு வந்து அந்தத்தனத்தை வடபெருங்கோயிலுடையானுக்குக் கைங்கரியம் செய்வதில் உபயோகித்துத் தான் முன்போல் நந்தவனத்தில் திருமாலை கட்டி ஸமர்ப்பித்துக் கொண்டிருந்தார். கிருஷ்ணாவதாரத்தில் வெகுவாய் ஈடுபட்டவராகையால் அந்த அவதார சேஷ்டிதங்களை ஆதிமுதல் ஞானக் கண்ணால் பார்த்து, தானே யசோதை யாயும் கோபியாயு மிருந்து அநுபவித்து அதைப் பெரியாழ்வார் திருமொழி யென்ற பிரபந்தரூபமாய் அருளிச் செய்து உலகத்தாரைக் கடைத்தேற்றுவித்தார்.

தனக்கு எம்பெருமான் திருவருளால் கிடைத்த கோதைநாச்சியாரை ரங்கநாதனுக்கு மனைவியாய் ஸமர்ப்பித்து, ஸர்வேச்வரனுக்கு மாமனாராய் விளங்கி மறுபடியும் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு வந்து புஷ்ப கைங்கர்யம் செய்துகொண்டு 85 வருஷங்கள் வரையில் இப்பூவுலகில் எழுந்தருளி யிருந்து பேரானந்தப் பெரும்பதத்தை யடைந்தார்.

## திருப்பல்லாண்டு

இது பெரியாழ்வார் அருளிச்செய்த இரண்டு பிரபந்தங்களில் முதலாவது, இதில் 12 பாசுரங்கள் உள. இதற்கு நாதமுனிகள் தனியனை அருளிச்செய்திருக்கிறார். தெங்கலை ஸம்பிரதாயத்தில் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வியாக்யானமொன்றும், வடகலை ஸம்பிரதாயத்தைச் சேர்ந்த இரண்டு மூன்று வியாக்யானங்களும் இதற்குண்டு.

பெரியாழ்வார் பாண்டியனுடைய ஸபையில் வைஷ்ணவ மத ஸித்தாந்தஞ் செய்து, கிழியறுத்து, யானைமேல் வீதி வலம் வரும்பொழுது, எம்பெருமான் பரிவாரங்களுடன் ஆகாசமார்க்கத்தில் எழுந்தருளிக் காக்ஷி தந்தனன். அதைக்கண்டு ஆழ்வார் தனக்குண்டான மேன்மையைக் குறித்துக் கொஞ்சமேனும் கர்வ மடையாமல் கோவிந்தனுடைய வடிவழகை முதல் முதலிற்கண்டு அவனுடைய அநந்த கல்யாண குணங்களையும் ஸர்வக்ஞன்

ஸர்வசக்திமான் ஸர்வரக்ஷகனென்பதையும் மறந்து, நித்ய விபூதியில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் இவ்வுலகத்தில் வந்தாரே. அந்தத் திவ்ய மங்கள விக்ரஹத்திற்கு ஸம்ஸாரிகளின் திருஷ்டி பட்டு என்ன தீங்கு நேருமோவென்று அவைகளைத் தீர்ப்பதற்காக அவரை மங்களாசாஸனம் செய்து திருப்பல்லாண்டு பாடுகிறார். பகவான் பிரத்யக்ஷமானபொழுது தனக்கு வேண்டியதை அவரிடத்தில் பெறாமல் அவனுடைய வாழ்வையே தனக்குப் பரமபுருஷார்த்தமாய் இவர் நினைத்தாலும், எல்லோரையும் ரக்ஷிக்கும் நாதனை மற்ற ஆழ்வார்களைப்போல் இவர் ரக்ஷகனை யெண்ணாமல் தன்னால் ரக்ஷிக்கப்படுகிறவனாய் நினைத்து, அவனுடைய மங்களத்தில் ஈடுபட்டதாலும் தான் மகளாய் வளர்த்த சூடிக்கொடுத்த நாச்சியாரை அவனுக்கு மனைவியாய் ஸமர்ப்பித்து, அவனுடைய மாமனாரென்று பெயர் பெற்றதாலும் விசேஷ பெருமையை யடைந்த இவருக்குப் பெரியாழ்வார் என்ற பெயர் தகும்.

பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத்தாண்டு
பல்கோடி நூறுயிரம
மல்லாண் டதிண்டோள் மணிவண்ணா உன்
சேவடி செவ்வி திருக் காப்பு.

அ-து. கொடிய மல்லர்களை ஜயித்த பெருந் தோள்களையுடையவனாய் நீலமணியை யொத்த நிறம் பொருந்தினவனே! பல பல வருஷங்களிலும் அநேக பிரம்ம கலபங்களிலும இப்படி யுண்டான காலமெல்லாம் உன் சிவந்த திருவடிகளின அழகுக்குக் குறைவற்ற ரக்ஷை யுண்டாகக் கடவது.

இதில் எம்பெருமானுடைய திருவடிகளுக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறார்.

2. உபய விபூதி யோகத்தைத் தியானித்து மங்களாசாஸனம் பண்ணுகிறார்.

3. பகவானை யடைய விரும்புகிறவர்களைப் பார்த்து 'நீங்களும் லோகநாதனை மங்களாசாஸனம் பண்ண வாருங்க'ளென்று அழைக்கிறார்.

4. ஆதமானுபவமா யிருக்கும் கைவல்யத்தில் நாடும் மனமுடையவர்களை பல்லாண்டு பாட அழைக்கிறார்.

5. லௌகிகமான ஐசுவரியங்களை விரும்புகிறவர்களையும் அழைக்கிறார்.

6. மூன்றாவது பாட்டில் அழைக்கப்பட்ட அடியார் தங்களுடைய ஸ்வரூபம் முதலியவைகளைச் சொல்லிக்கொண்டு வந்து புகுகிறார்கள்.

7. நாலாவது பாசுரத்தில் அழைக்கப்பட்ட கைவல்யம் வேண்டுவோர் வரும் விதம்.

8. 5-ம் பாசுரத்தில் அழைக்கப்பட்ட ஐசுவரியத்தை விரும்புவோரின் வருகை.

9. மூன்றாவது பாசுரத்தில் அழைக்கப்பட்டவர்களுடன் கூடிப் பல்லாண்டு பாடுகிறார்.

10. முதலில் கைவல்யம் விரும்புவார்களைக் கூடித் தானும் பல்லாண்டு பாடுதல்.

11. ஐசுவரியத்தை விரும்புவோர் பல்லாண்டு பாடுதல்.

# பெரியாழ்வார் திருமொழி

இதில் 461 பாசுரங்கள் அடங்கியிருக்கின்றன. இதற்குத் திருவாய் மொழிப் பிள்ளை செய்த வியாக்யானம் பூர்ணமாய்க் கிடைத்திருக்கிறது. பெரியவாச்சான் பிள்ளையின் உரை நான்கு பத்து வரையில் கிடைக்கவில்லை. அவைகளுக்கு ஸ்ரீ மணவாள மஹாமுனிகள் வியாக்யானஞ் செய்திருக்கிறார்.

இவ் வாழ்வார் எம்பெருமானுடைய பத்து அவதாரங்களிலும் கிருஷ்ணாவதாரத்தில் அதிகமாய் ஈடுபட்டவர். அதற்குக் காரணம் கண்ணனுக்குண்டான எண்ணிறந்த அபாயங்களே. மற்ற ஆழ்வார்களைப் போல் கரையிலிருந்து ஏற்றாமல், விஷ்ணு ஜித்தன் மனத்தே கோயில் கொண்ட கோவல னென்னும்படி அந்த அவதார சேஷ்டிதங்கள் யாவையும் தானே அனுபவிக்கக் கோரி, அதில் மனத்தை நாட்டித், தன்னையிழந்து, யசோதையாயும் கோபிகைகளாயும் தன்னை யெண்ணி, அவர்களுடைய அனுபவத்தைத்தானே யனுபவித்த வகையை இப் பாசுரங்களில் அருளிச் செய்கிறார்.

கண்ணபிரான் திருவாய்ப் பாடியில் அவதரித்த பொழுது அங்குள்ளவர் செய்த மஹோத்ஸவம், யசோதை கண்ணனுடைய திவ்ய விக்ரஹத்தினழகை பாதாதிகேசாந்தமாய் வர்ணித்தது, தாலாட்டுதல், அவனுக்காக சந்திரனை யழைப்பது, செங்கீரையாடுதல், சப்பாணி கொட்டுதல், தளர் நடை நடப்பது, தானே ஓடிவந்து தாயை யணைந்துகொள்வது, ஓடி வந்து தாயை முதுகில் கட்டிக்கொள்வது, பூச்சிகாட்டுதல், முலையுண்ண அழைத்தல், காதுகுத்த வழைத்தல், மஞ்சனமாட்டுதல், குழல்வாரக் காக்கையை அழைத்தல், கோல்கொண்டு வருதல், பூச்சூட்டுதல், காப்பிடுதல், கோபிகைகள் கண்ணனுடைய தீம்புகளை யசோதையிடத்தில் முறையிடுதல், 'நாங்கள் இனி இங்கிருக்க முடியா'தென்று முறைப்படுதல், யசோதை கண்ணனுடைய அமானுஷ்ய சரிதங்களைக் கண்டு பால்கொடுக்க அஞ்சுதல்,

அதை மறந்து மகனென்றெண்ணி மாடுமேய்க்கப் போகவிட்டதைப் பற்றி வருந்துதல், அவனுடைய வரவைக் கண்டு மகிழ்ந்து 'இனி நீ போகவேண்டுவதில்லை' யென்றது, கோபியர் கண்ணனைக் கண்டு காமுறுதல், கோபாலன் கோவர்த்தனத்தைக் குடையாய்ப் பிடித்தது, அவனுடைய குழலோசையைக் கேட்ட கோபியரும் மற்றப் பிராணிகளும் பட்டபாடு, இவை ஆரம்ப முதல் 360 பாசுரங்களில் வெகு அழகாய் வர்ணிக்கப்படுகின்றன.

இவர் மற்ற ஆழ்வார்களைப் போல் எம்பெருமானை அனுபவிக்க விரும்பி, அப்பொழுதே அது தனக்குக் கிடைக்காததால் மனந்தளர்ந்து, தன்னை மறந்து, ஓர் கோபியின் தன்மையை அடைந்து, அவள் படும்பாட்டை அவளுடைய வாயாற்சொல்ல சக்தியற்று, அவளுடைய தாய் சொல்லும் விதமாய், மூன்றாவது பத்து ஏழாந் திருமொழியில் அருளிச் செய்கிறார்.

8. எம்பெருமானிடத்தில் தன் மகளுக்கு மிகுந்த காதலுண்டென்றறிந்து தாய் அவளை அவனிடத்தில் கொண்டு போய்விடும்படி பந்துக்கள் சொல்லியும் கேட்கவில்லை. ஒருநாள் இரவில் அவனே வந்து தாயுடன் படுத்திருந்த இவளை எழுப்பித் திருவாய்ப்பாடிக்குக் கொண்டுபோனான். தாய் கண் விழித்துப் படுக்கையில் பெண்ணைக் காணாமல் பலவகையாய்க் கதறுகிறாள்.

9. கண்ணனுடைய வைபவத்தையும் ராமபிரானுடைய வைபவத்தையும் ஒரே காலத்தில் அனுபவிக்க விரும்பி, இரண்டு கோபிகைகளின் தன்மையை அடைந்து, ஒருத்தி கண்ணனைப் பாடுவதாயும், ஒருத்தி ராமனைப் பாடுவதாயும், ஒருவர்க்கொருவர் 'எதிர்' நின்று 'உந்தீபற'வென்ற விளையாட்டின்படி சோபனங் கொட்டிப் பாடுவதை யருளிச் செய்கிறார்.

10. சிறிய திருவடி (மாருதி) சீதாபிராட்டியை அசோகவனத்திற் கண்டு அவளுக்குத் திருவாழி மோதிரத்தைக் கொடுத்து மகிழ்வித்து விண்ணப்பஞ் செய்த அடையாளங்களை வர்ணிக்கிறார்.

## நான்காம் பத்து.

பகவானுடைய அவதாரங்கள் யாவையும் கண்ணாலே கண்டு அனுபவிக்க வேண்டுமென்ற ஆசை ஒரு புறத்திலும், அப்படியே தான் கண்டு விட்டதாய் ஒரு தோற்றம் ஒரு புறத்திலும் சூழ்ந்து, இவ்வாழ்வார் தன்னை இரண்டு வகையாக வகுத்துக்கொண்டு, எம்பிரானைக் கண்ணாலே காணவேண்டு மென்று தேடுவதை ஒரு கட்சியாயும், அப்படி நீங்கள் தேடினால் அவனையுள்ளபடி கண்டவருமுண்டென்று விடை சொல்லுதல் ஒரு கட்சியாயும் வர்ணிக்கிறார்.

"கொலையானைக் கொம்பு பறித்துக் கூடலர் சேனைபொரு தழிய
சிலையால் மராமர மெய்த தேவனைச் சிக்கென நாடுதிரேல்
தலையால் குரக்கினம் தாங்கிச் சென்று தடவரை கொண்டடைப்ப
அலையார் கடற்கரை வீற்றிருந்தானை யங்குற்றுக் கண்டாருளர்."

அ—து. தன்னைக் கொல்லவந்த குவலயா பீடமென்ற யானையின் தந்தங்களைப் பிடுங்கினவனும், ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸ ஸேனையை அழித்தவனும், ஒரு பாணத்தால் ஏழு ஸாலமரங்களைப் பிளந்தவனுமான எம்பிரானை விடாமுயற்சியுடன் தேடுகிறீர்களோ? அவனிருக்குமிடம் சொல்லுகிறேன். வானரசேனை தலையால் மலைகளைக் கொண்டுபோய்க் கடலில் அணைகட்ட, கடற்கரையில் எழுந்தருளியிருந்த ராமமூர்த்தியை அந்தத் திருக்கோலத்துடன் கண்டவருமுண்டு.

மேற்சொன்ன அவதார வைபவங்கள் அந்தந்தக் காலங்களில் பிறந்தவர்களுக்கே கிடைக்கும். பின்வந்தவர்கள் ஏமாறுபடாமல் எம்பெருமானே அர்ச்சாவதாரமாயக் கொண்டு உகந்தருளின திருப்பதிகளில் அந்தப் பெருமைகளை நன்கு விளக்கிக்காட்டி நிற்கிறானல்லவோ.

அவைகளில் மேலான திருமாலிருஞ் சோலையென்ற தென்திருக் கோயிலையடைந்த அழகனைக் காட்டிலும் அம்மலையே மேலென்று அதை வர்ணிக்கிறார்.

திருக்கோட்டியூரென்ற திவ்ய ஸ்தலத்தை மங்களாசாஸனம் செய்தவர்கள் இவ்வாழ்வாரும் திருமங்கை மன்னனுமே.

எம்பெருமானுடைய திருவடிகளில் அன்பில்லாதவர்களைப் பழித்தும் அன்புள்ள பாகவதர்களைப் புகழ்ந்தும், இந்தத் திருமொழியில் வெகு உருக்கமாய்ப் பாடுகிறார். ஐயோ! எம்பெருமானை நெஞ்சாலும் நினையாத பாவிகளை பிரஹ்மா எதற்காகப் படைத்தானோ அறியோம்.

யாதொரு குற்றமுமின்றி நற்குணங்களையே பெருக்கிக்கொண்டு குருக்களுக்கு அனுகூலராய் பொறாமை கொஞ்சமேனுமில்லாமல், உதாரமான கையையுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழும் திருக்கோட்டியூரில் விளங்கும் பெருமானை வணங்காதவர்களைப் பெற்ற தாய்களின் வயிற்றைப் புண்படுத்துவதற்காகவே அவர்கள் பிறந்தவர். அவனுடைய திருநாமங்களை எண்ணுவதற்காகப் படைக்கப்பட்ட விரல்களாலே, அப்படி க்ஷணமாவது ஜபிக்காமல் வெளியிற் சென்று, வயிற்றை வளர்ப்பதற்காக செய்யாதவை செய்கிறார்களே. அந்தப் பாபிகள் குடிக்கின்ற நீரும் உடுக்கும் துணியும் என்ன பாபம் செய்தனவோ! அந்த வன்னெஞ்சர்கள் பூமிக்குச் சுமையே தவிர வேறல்ல. அவர்கள் உண்ணும் சோற்றைப் பிடுங்கியெறி

நதுவிட்டு அறிவற்ற பசுக்களுக்கு உணவான புல்லைக்கொண்டு அவர்களுடைய வயிற்றை நிரப்புங்கள்.

பஞ்ச பூதங்களால் அமைந்த சரீரத்தாலும் பஞ்ச மஹாயக்ஞங்களாலும் பஞ்சேந்திரியங்களாலும் யாதொரு குற்றஞ் செய்யாதவர்களும் உதாரமான கைகளையுடைய ஸ்ரீ வைஷ்ணவர்கள் வாழும் திருக்கோட்டியூரில் விளங்கும் எம்பெருமானுக்கு, அடிமை செய்யும் பாகவதர்களின் பாததூளி படுவதால் இவ்வுலகம் பாக்யம் பெற்றதே: வேத வேதாந்தங்களில் நிபுணர்களாய் ஈசுவரனுடைய குணங்களிலே ஆழ்ந்து அவனுடைய திருவுருவை எக்காலத்திலும் மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டு வாழும் ஸ்ரீ வைஷ்ணவர்களால் நிறைந்த திருக்கோட்டியூரிலுள்ளவர்கள் என்ன தவஞ் செய்தார்களோ! அந்தப் புண்யபூமியில் விளையும் தான்யத்தையும் ராக்ஷஸர்கள் தீண்டத்துணியார். அந்தப் பரம பாகவதர்கள் என்னை இஷ்டப்படி விற்று வாங்கவும் அதிகாரம் பெறுவார்கள்.

## ஐந்தாந் திருமொழி.

தமக்கு ஆசையுள்ள விடத்திலேயே போய்ப் பதிந்த நெஞ்சையுடையவராய், என் தாய், என் தகப்பன், என் பிள்ளைகள், என் பூமி, என் மனைவியென்று மயங்கி, மாளும் ஸமயத்தில் வாயைத் திறந்து, அவர்களுடைய பெயரைச் சொல்லியழைக்காமல் கேசவனே, புருஷோத்தமனே யென்று சொல்லுகிறவர்கள் அடையும் பெருமைகளை நம்மால் சொல்லிமுடியுமோ.

சீயால் நிறைந்த புண்ணின் மேல் ஈ இருந்து முட்டையிட்டு அவை புழுத்து நீராய்ப்பாயும் பொழுது, உடல் முழுதும் ஈக்களாலே அரிக்கப்பட்டு வேதனை பொறுக்கமாட்டாமல் மூர்ச்சையடைந்து சாவதற்கு முன்னே, வாயால் நமோ நாராயணா வென்று கைகூப்பிச், சரீரத்தைவிட்டுப், பரமபதம் போய்ச் சேர்ந்தால், நித்ய முக்தர்கள் இவர்களை ஒருநாளும் இவ்வுலகில் மறுபடியும் வரவொட்டார்கள்.

களவு செய்தாவது, எங்கேனும் திரவியம் வைக்கப்பட்டிருந்தால் அதைச் சொல்லு, சொல்லென்று சூழ்ந்து கொண்டு, அன்பர்கள் பலவிதமாய்க் கேட்டாலும் அவர்களுக்குப் பதில் சொல்லவும் வாய் திறக்கமுடியாமல், மரணகாலம் கிட்டுவதற்கு முன்னே, ஹ்ருதயமென்ற ஒரு கோயிலை அமைத்து, மாதவனென்ற தைவத்தை நாட்டிப் பக்தி யென்ற மலரால் அவனைப் பூஜிப்பவர்கள், யமகிங்கரர்களால் வரும் துன்பத்தினின்றும் தப்பிப் பிழைக்கலாகும்.

மேல்மூச்சுக் கிளம்பி நெஞ்சு கீழே இடிந்து விழ, கைகால்கள் பதை பதைக்கத், திரும்பாத யாத்ரைக்குப் போகுமுன்னே, வேதங்களுக்கு

மூலமான பிரணவத்தை முறைப்படி யுச்சரித்து, எம்பெருமானைச் சரண மடைந்தால், ஸ்ரீ வைகுண்டத்தில் அடியார் கூட்டத்தில் கலந்து வாழலாம்.

யமதூதர்களைக் கண்ட பயத்தால் மலமூத்திரங்களை விட்டு, வாயில் ஊற்றின கஞ்சி கழுத்தைபடைக்க, வாயால் வழிந்து, அப்படியே உயிர்போகா முன்னம் எம்பெருமானுடைய திருநாமத்தைச் சொல்லித் துதித்தால், யம லோகத்திலுள்ள செந்நாய்கள் உங்களைத் தொடையிலே கவ்வாது; யமதூதர்கள் சூலாயுதத்தால் குத்தமாட்டார்கள், நடுவழியில வஸ்திரத்தையும் பறி கொடுக்க மாட்டீர்கள்.

பஞ்சப் பிராணங்களும் தேஹத்தைவிட்டுப் போனபின்பு, பக்கத்தி லுள்ளவர்கள், மூக்கில் கையை வைத்து மூச்சிருக்கிறதா இல்லையா வென்று பார்த்து, இல்லை யென்றறிந்த பினபு, அவன இனிப் பிழைக்க மாட்டா னென்று கை விடுகிறார்கள். அங்கு வந்தவர்கள், இவர்க்கு இப்பொழுது திருமேனி எப்படியிருக்கிறதென்று கேட்டால், அதறகு வாய் விட்டுப் பதில் சொல்லாமல் ஜாடையாகக் கையை விரித்துக் காட்டிவிட்டு, ஒரு மூலை யில் தலை குனிந்து அழுவார்கள். அதறகுமுன எங்கள் பெருமானை மன தில் வைத்தால் எநநாளும் குறையில்லை.

எருதுகளை அதட்டி ஒட்டுவதுபோல், யமகிங்கரர்கள் வந்து பாசங் களால் கட்டி அடித்துத், தலைகீழாக இழுத்துக் கொண்டு போவதற்கு முன், அந்தக் காலனுக்கும் காலனான எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும மஹிமைகளையும் சொல்லிச சொல்லி நெஞ்சால நினைத்து, மனதிலுள்ள அக் ஞானம் நீங்கும்படி அவனையே ஸேவித்து, தேஹமுள்ள வரையிலும் அவனு டைய திருநாமங்களையே ஜபிப்பவர்கள், ஸ்ரீவைகுண்டத்தில நித்ய ஸூரிகளு டன் கைங்கர்யத்திற்காக மன்றாடுவார்கள்.

இறந்தபின்பு, உற்றார் கூடிக் கூடியிருந்து, செத்தவன் செய்த குற் றங்களை விட்டு, நலங்களைச சொல்லிச் சொல்லிப், பலாக்கணம் பாடி ஒரு பாடையிலே வைத்துக்கட்டி, கோடித்துணியால் மூடி, நரிக்கூட்டத்திற்கு ஒரு பாகுக் குடத்தைப பச்சையாகக் கொடுப்பதுபோல், இப்பிணத்தைக் கொடுக்கச் சுடுகாட்டிற்குக் கொண்டு போவதற்கு முன், எம்பெருமானிடத் தில் நெஞ்சத்தை நாட்டினால் யமலோகத்தைத் தாண்டிப் பரமபதஞ் சேர்ந்து உஜ்ஜீவிக்கலாம்.

"வாயொரு பக்கம் வாங்கி வலிப்ப, நீர்க்குமிழிக் கண்கள் மிழற்றத்,
தாயொரு பக்கம் தந்தையொரு பக்கம் தாரமும் மொரு பக்கம் மலற்றத்
தீயொரு பக்கஞ் சேர்வதன் முன்னம் செங்கண்மா லொடுஞ்சிக்கென சுற்ற
மாயொரு பக்கம் நிற்கவல்லலார்க் கரவதண் டத்திலுய்ப் பதுமாமே,"

அ - து. வாயுவால் வாய் ஒரு பக்கம் இழுத்து வலிக்க, உள்ளே இடிந்த கண்களில் நீர் பெருகத், தாயொரு பக்கத்திலும், தந்தையொரு பக்கத்திலும், மனைவியொரு பக்கத்திலும் இருந்து கதறி யழ, மற்றொரு பக்கத்தில் சுடும் நெருப்பு மார்பில் வந்து விழா முன்னம், கண்ணனையே பந்து வாய்க் கொண்டு அவனிடத்திலேயே மனதை நாட்டினவர்க்கு யமதண்டனை ஒருநாளுமில்லை.

## ஆறுந்திருமொழி.

உலகத்தில் பெற்றோர் பிள்ளைகளுக்குப் பெயர் வைப்பது, திரவியம், ஆடை ஒரு கட்டு கற்றை கிடைக்குமென்ற எண்ணத்தாலல்லது, தனக்காவது அந்தப் பிள்ளைகளுக்காவது இஹபர க்ஷேமம் உண்டாகவேண்டுமென்றில்லை. மிகவும் கொடிய அல்ப தேவதைகளின் பெயர்களை வைக்கும் மூடர்களே! எம்பெருமானுடைய திருநாமங்களை வையுங்கள். கொடிய நரகங்களில் விழமாட்டீர்கள்

மனுஷ்ய ஜாதியில் பிறந்த ஒரு மனிதனுடைய பெயரையே மற்றொரு மனிதனுக்கு வைத்தால் மோக்ஷத்திற்கு வழியுண்டோ?

> "நம்பி பிம்பியென்று நாட்டு மானிடப் பெயரிட்டால
> நம்பும் பிம்புமெல்லாம் நாலு நாளிலழுங்கிப்போம்
> செம்பெருந் தாமரைக் கண்ணன் பெயரிட்டழைத்தால
> நம்பிகாள் நாரணன் தம்மன்னை நரகம் புகாள."

அ - து. நம்பியென்றும் பிம்பியென்றும் அல்ப மனிதர்களுடைய பெயர்களை உங்களுடைய பிள்ளைகளுக்கு இட்டால் அதற்குக் காரணமான மேன்மையெல்லாம் நாலு நாள்களுக்கெல்லாம் அழிந்துபோம். திருமாலின் பெயரிட்டழைத்தால் அப்பிள்ளைகளின் தாய நரகத்தில் புகமாட்டாள்.

> "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக்குமேல்
> என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலும்
> மன்னுடைய விபீடணற் காமதிளிலங்கைத் திசை நோக்கிமல் கண்வைத்த
> என்னுடைய திருவரங்கற கன்றியும் மற்றொருவர்க்காளாவரே."

அ—து. எம்பெருமானுடைய அடியார்களைப்பற்றிச் சிபார்சு செய்ய வேண்டிய திருமகள், தானே அவர்களிடத்தில் குற்றங்களைக்கணக்கிட்டுச் சொல்லத் தொடங்கினாலும், 'என்னடியார் அப்படிச்செய்யார். அப்படி என் பொறுமையை நம்பிக்கொண்டு செய்தாலும் நன்மையையே செய்தார்

களென்று வாதனுசெயயும் ஐசுவரியம் பொருந்திய எம்பெருமானுக்கல்லால் வேறொருவர்க்குக் கைங்காயம் செய்கிற வருமுண்டோ?

அடியாரைக் காப்பதில் ஸாமர்த்தியமுடைய உம்மை ஆசிரயிப் பது ஏனென்றால், எல்லா இந்திரியங்களும் சிதறிப்போகும் காலத்தில், தேவரீர் துணையாயிருக்கு மென்ற எண்ணத்தினாலல்லவா? அப்படி உமக்கு வேண்டியவர்களுடன என்னை ஒப்பிடமுடியாது. ஆயினும், யானையைக் காத்தது போல் என்னையும காக்கவேண்டுமெனறு சரணம் புகுந்தேன். வாத பித்த கபங்களால் நெஞ்சடைக்கும்பொழுது, நான் உன்னைக் கொஞ்ச மேனும நினைக்கமாட்டேன். ஆகையால தேஹேந்திரியங்கள் செவ்வை யாயிருக்கும இப்பொழுதே என் விண்ணப்பத்தைச செய்துகொண் டேன.

யம படர்கள் வெகுகோபததுடன நாக்கை மடித்துக்கொண்டு என் னைப் பலவகையாயத் தண்டித்து இழுத்துககொண்டு போகும்பொழுது, என் மனம என்னிடத்தில கொஞ்சமேனும நாடாதபடி மாயை செய்ய நீ வலல வனன்றோ? ஆகையால இப்பொழுதே உன்னைச் சரணமடைந்தேன். என்னை ஆட்கொண்டருளே.

யம கிங்கரர்கள் அடித்துப் பிடிக்கும்பொழுது அவர்களை நெருங் காதேயெனறு சொலல ஒருபாயமும் என்னிடத்திலில்லை யாகையால், உன திருநாமங்களையெல்லாம் சக்தியிருக்கும்பொழுதே வாய்விட்டுச் சொனனேன. ஆகையால அடியேனை ஞாபகம வைத்துக்கொண்டு துன் பம வராமல காக்கவேண்டும.

யமபடர்கள் இவனுக்கு வாழுநாள் முடிந்ததென்று நினைத்துப் பிடிக் கிற பிடியில அஞ்சும்படி உபத்திரவிக்கும்பொழுதும, நீ என்னைக் காக்க வேண்டும்.

யமதூதர்களைக் கண்டு நான நடுங்கிக் கதறும் பொழுது, அஞ்சாதே யென்று எனக்குக் கைகொடுப்பாய். அடியேன உன் மாயைகளில் யாதொன் றையும் அறியேன்.

யமபடர்கள் என்னைப் பிடித்து இச்சரீரத்தில் பண்ணவேண்டிய தும்பைகளையெல்லாம் செய்து, பின்பு இந்த யாதனாசரீரத்தில் புகு வென்ற டிக்கும்பொழுது, உன்னைக் கொஞ்சமேனும் நினைக்கமாட்டேன். இப பொழுதே உன் திருநாமங்களை உச்சரித்தேன். அடியேனைக் காத்தருள் வாய்.

நீ எனக்கு அருள்செய்து நான் உன்னைப் பல்லாண்டு பாடின நாள் முதல் இனறுவரையில உன திருமேனியை மறந்ததில்லை. என்னை யமப டர்களின கையில் காட்டிக்கொடுக்காமல் காப்பாற்று.

# ஐந்தாம் பத்து.

என வாய்மொழிக்குப பரிசுததியில்லாமையால் உன்னைத் துதிக்கததகாதவன். சும்மாவிருபபோமென்று பார்த்தாலும் பழகி ரஸமறிந்த என் நாக்கு, உன்னைத தவிர மற்றொருவரைத் துதித்தறியாது. உன்னைப் போறற அஞ்சுகிறேன். அநத நாக்கும என் வசபபட்டு நிற்காது. இவன் மூடர் பேசும பேசசைப் பேசுகிறானென்று நீ கோபித்தாலும், என் நாக்கின் பதட்டத்தை நான் பொறுக்கமுடியாதவன். காக்கையின் கொடிய வார்த்தையையும் ஸாதுக்கள் நற்சொலலாகக் கொள்வரன்றோ?

தமக்கு அடிமைப்பட்டவருடைய சொல்லைப் பொறுத்தருளுகை பெருநதன்மையுடையவாக்குக கடமையன்றோ? புள்ளிமானுக்கு ஒரு புள்ளி ஏறுவதும குறைவதும குறறமா?

"நன்மை தீமைகளொன்று மறியேன
நாரணனென்னு மித்தனையல்லால
புனமையாலுன்னைப புளளுவம் பேசிப
புகழ வானனறு கண்டாய் திருமாலே!
உன்னைமாறுன்னை யொனறு மறியேனே
வாதே நமோ நாராயணாவெனபன்
வனமை யாவதுன கோயிலில் வாழும்
வைட்டணவ னெனனும் வன்மை கண்டாயே."

அ—து. நாராயணனென்று கூபபிடுவதேயொழிய, நனமை தீமை வேறொனறையும அறிந்தேனில்லை. எனக்கு இயற்கையாயுள்ள அற்பத்தனத்தால வஞ்சகமான சொறகளைச சொல்லி உன்னைத் துதிக்கிற உன்னை நினைக்கும வழிகளில ஒனறையேனுமறியேன். ஓய்வின்றி நமோ நாராயணாவெனறே சொனனேன். உன் கோயிலில் வாழும் வைஷ்ணவனெனறதே எனககு மேனமையாயிருக்கும.

உனககடிமையான என்னை வேலை ஏவ ஸந்தேஹப்படாதே. சோறும் துணியும நீ எனக்குக் கொடுக்கவேண்டியதில்லை. உன் ராஜகுலத்தின பெருமையால் அவை அங்கங்கே கிடைக்கும்.

தோட்டமும, பசுக்களும், தொழுவமும், குளங்களும், வயல்களும் பெண்டுபிள்ளைகளும குறைவிலலாமல அடியேன உன் திருவடியில் திரளவந்ததுககொண்டேன. நாடு மானிடரோடு கூடுவது எனக்குப் பொறுக்கவில்லை. மற்றவர் விரும்பினாலெனககென்ன?

உன் நித்ய விபூதியின் அழகைக் காணவேண்டுமென்ற ஆசையால் வார்த்தை குளறி மயிர்ச்சிலிர்த்துக் கண்ணீர் பெருகப் படுக்கையில் தூங்கக் கொடுத்துவைத்தவனல்ல; அப்படி எனக்கு அருள்செய்வாய்.

2. நெய்க்குடத்தைப் பற்றிக்கொண்டு ஏறுகின்ற எறும்புகளைப் போல் என் உடம்பெங்கும் பரவி என்னையே இருப்பிடமாகக்கொண்ட வியாதிகளே! நீங்கள் பிழைக்கவேண்டுமானால் வேறிடத்திற்குப் போங்கள். எம்பெருமான் என் சரீரத்தில் பள்ளிகொண்டிருக்கிறார். அவருடைய பட்டணமான இவ்வாதமா முனபோலவல்ல. அவனால காக்கப்பட்டிருக்கிறது.

எம்பெருமான் என் காப்பவாலத்தைக் கழித்தருளினா. இநதிரியங்களைத் திரியவொட்டாமல் நெருக்கினார். சரீரத்தில ஆசையை யொழித்தருளினார். யமபாசங்களைத் தெறித்தார். இரவும பகலும் தன் ஸ்வரூபத்தை எனக்கு உபதேசித்து, அதை அனுஷ்டானத்திற கொண்டுவந்து நிதய கைங்கர்யம் பண்ணும்படி என்னைக் கைக்கொண்டருளினார்.

முன் பாவங்களால் வளர்ந்த வியாதிகளே! நீங்கள் அழியாதபடி உபாயந் தேடுங்கள். இங்கே வரவேண்டாம, வரவேண்டாம. என்னை நெருங்கமுடியாது. இங்கே வரவேண்டாம். என ஆதமா எம்பெருமானுக்குத திருக்கோயிலானதைப பார்த்து அவமானபபடாமல் பிழைத்துப் போங்கள்.

எம்பெருமானை எழுநதருளப்பண்ணி என் நெஞ்சினுள்ளே புகும்படி வேற்றுமையில்லாமல் அமைத்துக்கொண்டேன். கொடிய குறும்புகளைச் செய்யும் இநதிரியங்களே! தாமதிக்காமல வேறிடததிறகு ஓடுங்கள்.

"உற்ற வுறுபிணி நோய்காளுமக்கொன்று சொல்லுகேன் கேண்மின்.
பெற்றங்கள் மேய்க்கும பிரானார் பேணுந திருக்கோயில் கண்டீர்.
அற்றமுறைக்கின்றே னின்னமாழவினை காளுமக்கிங்கோர
பற்றிலலை கண்டீர் நடமின் பண்டன்று பட்டினங்காப்பே."

அ—து. என்னை வாதனைசெய்யவேண்டுமென்று கிட்டியிருக்கும் நோய்களே! உங்களுக்கொரு வார்த்தை சொல்லுகிறேன், கேளுங்கள். நீங்கள் இப்பொழுது குடியிருக்கும் என் உடல் கண்ணபிரானுக்கு உகந்த திருக்கோவிற்று, கண்டீர்களா? என்னை ஸம்ஸாரததில் அழுத்தின உங்களுக்கு மறுபடியும் சொல்லுகிறேன். இங்கே சற்றேனும் நீங்களிருக்க முடியாது. இப்பொழுதே நடவுங்கள். முன்போலல்ல, எம்பெருமான் அதைக் காக்கின்றானன்றோ?

எம்பெருமான் பிரம்மோபதேசம் பண்ணும் ஆசாரியனாய் எழுந்தருளி என் ஹிருதயகமலத்தினுள் புகுந்து, அங்குள்ள தோஷங்களை நீக்கி, என் தலையின்மீது ஸ்ரீ பாத முத்திரையை வைத்தருளினான். திருவாழியே! திருச்சங்கே! நாந்தகமென்ற உடைவாளே! சாரங்கமென்றவில்லே! கௌமோதகியென்ற கதையே! திக்பாலர்களே! உறங்கவேண்டாம், உறங்க வேண்டாம், உறங்க வேண்டாம். பெரிய திருவடியே! உறங்க வேண்டாம், விழித்துக்கொண்டிருந்து எம்பெருமானுக்குத் திருப்பள்ளியறையாகிற என் சரீரத்தை நோக்கிக் காத்திடுங்கள்.

3. நீ புகுந்த விடங்களிலெல்லாம் நானும் புகுந்து உன்னைச் சேவித்து துக்கச் சுழலான இந்தச் சரீரத்தில் இருப்பைப் போக்கிக்கொண்டேன். இனி உன்னை வேறிடத்திற்குப் போகவிடுவேனோ?

உன்னைச் சூழ்ந்துகொண்டேன். இனி வேறிடத்திற்குப் போக வொட்டேன். உன் இந்திரஜாலங்களால் நீ ஒளித்திடில் உன் பிராட்டியின் மேலாணை. நீ ஒருவரிடத்திலும் உண்மையைச் சொல்வதுமில்லை, நடப்பதுமில்லை.

உனக்குக் கைங்கரியம் பண்ணும் பாக்யத்தைப் பெற்ற அடியேன் இனி வெளியிற போய் வேறொரு அல்ப மனிதனுடைய வாசலில் நிற்பது உன் மேன்மைக்குக் குறைவன்றோ?

"காதம் பலவுந்திரிந்து உழன்றேற்கு அங்கோர் நிழலில்லை நீரில்லையுன்
பாத நிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம் நானெங்குங் காண்கின்றிலேன்
தூது சென்றாய் குருபாண்டவர்க் காயங்கோர் பொய்ச்சுற்றம் பேசிச்சென்று
பேதஞ் செய்தெங்கும் பிணம் படுத்தாய் திருமாலிருஞ் சோலை யெந்தாய்."

அ—து: வெகு தூரம் திரிந்தலைந்த எனக்கு அவ்விடங்களில் ஒதுங்குவதற்கு ஓர் நிழலுமில்லை. குடிக்கத் தண்ணீருமில்லை. ஆராய்ந்து பார்த்தால் உன் திருவடி நிழலொழிய மற்றொரு தங்குமிடத்தையும் காணேன்.

என் கால்களும் வைத்தவிடத்தை விட்டுப் போகவில்லை. உன்னிடத்திலுள்ள மிகுந்த அன்பால் கண்ணீரும் ஓய்வதில்லை. சரீரம் கட்டுக்குலைந்து நடுங்கிக் குரலும் கிளம்புவதில்லை. மயிர்க்கூச்சல் அடங்குவதில்லை. தோள்கள் விழுந்துபோயின. என் நெஞ்சம் மயங்கித் தடுமாறுகிறது. இப்படி உன்னால் வாழும்படி முடிசூடப்பெற்றவனானேன். மற்ற எந்தத் தெய்வமும் இந்த ஸம்ஸாரமாகிற வியாதிக்கு மருந்தையறியாது. எனக்கு மறுபிறவி நேராதபடி என்னைத் திருத்தி உன் கோயில் வாசலில் வாழும்படி அருள்புரிவாய்.

உன்னருளால் ஸம்ஸார ஸமுத்ரத்திலிருந்து கரையேறின என்னைக் குறித்துப் பயப்படாதேயென்று முத்திரையைக் காட்டியருளவேண்டும்.

இன்றைக்கு நாளைக்கென்று சொல்லிக்கொண்டே அழிந்த காலம் எத்தனை யுகங்களோ, கல்பங்களோ? இவ்வளவு காலத்தில பிறவியெனும் யந்திரத்தில அகப்பட்டு சுற்றிக்கொண்டிருந்தேன் அதினின்றும் விடுபட்டு ஞானம் பெற்ற இன்று முதலாய் உன்னை வேறிடத்திற்குப் போக ஸம்மதிப்பேனோ? என் நெஞ்சம் உனனிடத்தில் ஈடுபட்டிருப்பதை நீ யறியாதவனோ?

நான் கர்ப்பத்திலிருக்கும்போதே உனக்குக் கைங்கர்யம் செய்வதில் ஆசை கொண்டிருந்தவன். இப்பொழுது என்னைத் தேடிவந்த உன்னை ஸேவித்துக்கொண்டேன் இனி போகவிடுவதெங்ஙனே?

4. (ஜீவர்களைத் திருத்துவதற்கும திருந்தினவர்களை அடிமை கொள்வதற்கும் பர வியூக விபவ அந்தர்யாமி அர்ச்சா அவதாரங்களான இடங்களில எழுந்தருளி நின்ற எம்பெருமானுடைய கல்யாண குணங்கள் விளங்குவது திருப்பதிகளிலே. அப்படி அவனை அநுபவித்து, அதற்கு விரோதிகளில வெறுப்பையும அவனுடைய கைங்கர்யத்தில் ருசியையும் பெற்று, எல்லா ஆசைகளும நிறைவேறின. இவ்வாழ்வாரைக் கண்டு எம்பெருமான, இவர்க்குச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்து முடிக்கவில்லையேயென்று வருந்தினார். ஆழ்வார் அதைக்கண்டு "ஸ்வாமி! விரோதிகள் யாவும ஒழிந்தன, விரும்புவது யாவும் கிடைத்தன, இனி எனக்காக நீர் செய்ய வேண்டுவது யாதொன்றுமில்லை. வருந்த வேண்டா"மென்கிறார்,)

என் ஆத்மாவுக்கும் என் உடைமையான சரீரத்திற்கும் உன் சக்ரத்தின் திருவிலச்சினையை இடுவித்து, உன்னருளையே பிரயோஜனமாய் விரும்பினேன். அதுவும கிடைத்தது இனி திருவுள்ளக்கருத்து என்ன?

"பறவையேறு பரம்புருடா நீ யென்னைக் கைக்கொண்டபின்
பிறவியெனும கடலும வற்றிப் பெரும்பதமாகின்றதால்
இறவு செய்யும் பாவக்காடு தீக்கொளீ இவேகின்றதால்
அறிவை யென்னு மமுதவாறு தலைப்பற்றி வாய்க்கொண்டதே."

அ—து. பெரிய திருவடிமேல் எழுந்தருளும் பரம புருஷா! ஸர்வரக்ஷகனான நீ வேறு கதியற்ற என்னைக் கைக்கொண்டபிறகு பிறவியென்னும் கடலும் வறறிப் பெரும் பதவியாயிற்று. இவ்வாத்மாவை முடிக்கும் பாவக்காட்டில் நெருப்புப்பிடித்து வெந்தது. ஞானமிருதம் மேன்மேலும் வெள்ளமாய்ப் பெருகுகிறது.

அடியேன் உன் அபிமானத்தில் ஒதுங்கினவனாய்ப் பெற்ற நன்மையை இவ்வுலகத்தில் யார் பெறுவார்? பூதப் பிரேத பிசாசங்களைப்போல் உருத் தெரியாமல் ஒளிந்து வந்து கீழே தள்ளி மேலே அமுக்கும் உலகத்தாரின் பாவமெல்லாம் மூச்சுவிடவும் மாட்டாமல் ஓடிப்போய்ப் புதர்களில் ஒளிந்து கொண்டன.

திருப்பாற்கடலைக் கடைந்து அமிருதத்தைக் கொடுத்ததுபோல் நான் உடல் உருகி வாய் திறந்து ஆராவமுதனை உன்னைக் குடித்து உள்ளே தேக்கிக்கொண்டேன். இனி கொடுமை செய்யும் யமனும் தனது செங்கோல் செல்லுமிடங்களில் நெருங்கமாட்டான்.

பொன்னைப் பரீக்ஷிப்பதற்காக உரைப்பதுபோல் உன்னை என் நாவினில் வைத்து மாற்றழியும்படி உரைத்துக் கொண்டேன். உன்னை என் நெஞ்சில் அமர்த்திக்கொண்டேன். அடியேனையும் உனக்கு ஆளாக்கினேன்.

உன் வீரச் செயல்களில் ஒன்று தப்பாமல் யாவற்றையும் என் நெஞ்சினுள்ளே எழுதிக்கொண்டேன். என் பக்கத்தில் எழுந்தருளி இனி நீ எங்கே போகமுடியும்?

உன் திருவடிகளை என் தலைமேல் வைத்தவனே! குவலயாபீடத்தை அழித்தவனே! மல்லரை மாய்த்தவனேயென்று திருநாமங்களை ஜபித்ததால் தழும்பேறின நாக்கையுடைய நான் உனக்குத் தகுந்தவனாயிருக்கும்படி செய்துகொண்டாயே.

சேஷனிடத்திலும் கருடனிடத்திலும் அன்பை வைக்காமல் என் மனத்துள் வந்து தங்கி என்னை வாழ்வித்தருளினாய். உன்னை இடைவிடாது நினைந்து நின்று நெஞ்சு தளர்ந்து கண்ணீர் பெருக, நீ செய்த நன்றிகளையே நினைத்து நினைத்து இளைப்பாறினேன்.

குளிர்ந்த திருப்பாற்கடலில் பள்ளிகொள்வதை விட்டு ஓடிவந்து என் மனக்கடலில் வாழும் ஆச்சரியமான சக்தியுடையவனே! கல்யாண குண பரிபூர்ணனே! ஒப்பற்ற பாற்கடலும் ஸூர்யமண்டலமும் பரமபதமும் உனக்கு ஏற்ற இருப்பிடமாய் இருந்தாலும், அவற்றைத் தள்ளிவிட்டு நீசனான அடியேனை உனக்குரிய வாஸஸ்தானமாய் ஏற்படுத்திக்கொண்டாயே. இது என்ன ஸௌசீல்யம்!

பெருமலையில் விளங்கும் பரிசுத்தமான கொடிபோல் தேஜோரூபியாய் என்னுள்ளத்தில் விளங்கும் ஜோதிவடிவே! திருப்பாற்கடலையும் ஸ்ரீ வைகுண்டத்தையும் துவாரகையையும் தள்ளி விட்டு என்னிடத்தில் குடி கொண்டருளினையே! இதென்ன கருணை.

"வேயர் தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் மனத்தே
கோயில் கொண்ட கோவலனைக் கொழுங் குளிர் முகில் வண்ணனை
ஆயரேற்றை யமரர் கோவை யந்தணர் தமமுததத்தினைச்
சாயைபோலப் பாடவல்லார் தாமுமணுக்காகளே."

அ - அ; வேயர் குலத்தில் அவதரித்த பெரியாழ்வாருடைய மனதில் திருக்கோயில் கொண் டெழுந்தருளியிருக்கும் கோபாலனும், மேக வண்ணனும், ஆயர் தலைவனும், அமரர் கோமானும், ஸனகாதி முனிவர்க்கு அமுதம் போன்றவனுமான எம்பெருமானை இந்தத் திருமொழியால் பாட வல்லவர், நிழல்போல் எம்பெருமானை எப்பொழுதும் அண்டியிருக்கப் பெறுவார்.

இவ்வாழ்வாருடைய திருப பாசுரங்கள் ஒவ்வொன்றும் ஒப்பின்றி விளங்கினும், நம்போன்ற ஸம்ஸாரிகளுக்கு நாலாம் பததுா, நான்காம் திருமொழியான 'நாவ காரியம்,' 'ஆசைவாய்ச சென்ற' (4, 5), 'காசுங்கரையுடை' (4-6), 'தப்புடையாரை' (4-10), 'வாய்க்குத் தூய்மை' (5-1), 'நெய்க் குடத்தை' (5-2), 'துக்கச்சுழலை' (5-3), 'சென்னியோங்கு' (5-4) என்ற பாசுரங்கள் எப்பொழுதும் அனுஸந்திக்கத் தகுந்தவை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆண்டாள் வைபவம்.

பெரியாழ்வார் திருநந்தவனக் கைங்கரியம் செய்துகொண்டிருக்கும் பொழுது ஒருநாளில் திருத்துழாய்ப் பாத்தி அமைப்பதற்காகக் களைக் கொட்டைக் கொண்டு கொத்தும்பொழுது, முன்பு திரேதாயுகத்தில் ஜனக மஹாராஜன் யாக பூமியை உழுகையில் கலப்பை நுனியிலிருந்து, ஸ்ரீ தேவியின் அம்சமாய் ஸீதை அவதரித்ததுபோல, இவ்வாழ்வார் கொத்தின நிலத்திலிருந்து ஸ்ரீதேவி பூதேவிகளின் அம்சமாய ஓர் குழந்தை, கலியுகத்தில் 97 வருஷங்களுக்கு மேல்செல்லா நின்ற நள௵ ஆடிமீ சுக்ல பக்ஷ சதுர்த்தசி செவ்வாய்க்கிழமை பூரநக்ஷத்ரம் துலாலக்னத்தில் திருவவதாரம் செய்தாள். அதைக் கண்ட ஆழ்வார் அகமகிழ்ந்து உடல் பூரித்து, அவளைத் தன் மகளாய்ப் பாவித்துக் கோதை யென்று திருநாமமிட்டு, தன்னுயிரைப் போல் வளர்த்து வந்தார். தானே அவளுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து, எம்பெருமானுடைய கல்யாண குணங்களை உபதேசித்து வந்தார்.

அந்தப் பெண் பால்யம் முதல் ரங்கநாதனுடைய திருவடிகளிலே வரவரப் பெருகும் பக்தியுடன் மனோவாக்குக் காயங்களால் அவரையே போற்றி, வேறு ஞாபகமின்றி அவரிடத்திலேயே நாடின மனத்துடன், விஷ்ணு சித்தர் வடபெருங் கோயிலுடையானுக்குச் செய்துவரும் திருமாலை கைங்கரியத்தைத் தானும் இயன்ற வரையில் செய்து வந்தாள். அவரையே தனக்கு மணாளனாகக் கோரி, அவருக்குத் தான் எவ்விதத்திலும் தகுந்தவளேயென்று பாவித்துச் சிறந்த ஆடையாபரணங்களால் அலங்கரித்துக் கொண்டு, ஆழ்வார் வீட்டிலில்லாத வேளையில் அவர் கட்டி வைத்திருக்கும் திருமாலையைத் தானெடுத்துச் சூடிக்கொண்டு கண்ணாடியில் தன்னழகைக் கண்டு களித்து, எம்பெருமானுக்கு நான் போக்யமானவளேயென்று அவர்கள் வருவதற்கு முன் மலர் மாலையைக் கழற்றி முன்போலவே நலுங்காமல் பூக்கூடையில் வைத்து வந்தாள். அப்படிச் சூடின மாலையை ஆழ்வார் ஸ்வாமிக்கு சாத்திவர, பெருமானும் அதை வெகு ஆனந்தத்துடன் ஏற்றருளினார். இப்படிப் பலநாள் கழிந்தபின் ஆழ்வார் ஏதோ ஒரு காரியத்தை நினைத்துக் கொண்டு திடீரென்று வீட்டிற்குத் திரும்பிவந்து கோதை செய்ததைக் கண்டுவிட்டார். பகவானுக்குப் பெருத்த அபசாரம் செய்த தன் பெண்ணைக் கோபித்துக்கொண்டு "குழந்தாய்! என்ன காரியம் செய்தாய்? எம்பெருமானுக்கன்றி இது நம்போலியர்க்குத் தகுமோ? நமது சேர்க்கையால் அசுத்தமான இம்மாலை ஸர்வேஸ்வரனுக்கு ஸமர்ப்பிக்கத் தக்கதோ? மஹா அபசாரம் நேர்ந்ததே. இதனால் நமக்கு என்ன தீங்கு

வருமோ? இனி இப்படிச் செய்யாமலிருக்கக்கடவா" யென்று கண்டித்து விட்டு வேறு மாலையைக் கட்டி எம்பெருமானுக்கு ஸமர்ப்பித்தார். அது கோபாலனுக்குத் திருவுளமில்லாமல் எப்பொழுதும்போல் மணம் கமழ வில்லை. அன்றிரவில் ஆழ்வாருடைய கனவில் பகவான் தோன்றி, "ஓய்! இன்றைக்கு நீர் சிறிதும் மணமில்லாத மாலைகளை நமக்குக் கொண்டுவந்தீரே" னென, ஆழ்வார "ஸ்வாமி! வழக்கப்படி கட்டி வைத்திருந்த மாலையைத் தேவரடிமைச சிறு பெண் அறியாமையால் எடுத்து சூட்டிக்கொண்டாள். அவளைக் கண்டித்து வேறு மாலை கட்டிக் கொணர்ந்தேன். இந்த மஹா அபசாரத்தைப பொறுத்தருளவேண்டு" மென்று விண்ணப்பஞ் செய்தார். ஸ்ரீபதி "ஓய்! நீர் உமது ஞானக்கண்ணால் இதைப் பார்த்ததில்லையோ. அவளை யரென்று நினைததீர்? நமக்குச் சூடிக் கொடுக்க வந்த சுடர் கொடியென்று அறியவில்லையே. இது நெடுநாளாய் நடந்து வருகிறது. அவள் சூடிக்கொடுதத மாலையே நமக்குத திருவுளம. இனி எப்பொழுதும் அப்படியே நடக்கட்டு" மென்று உத்திரவிட்டு மறைந்தார்.

ஆழ்வார எழுநது தான் கண்ட கனவை நினைத்துப் பிரமித்து, அதுவரையில தன் குழந்தையென்று எண்ணியிருந்தவளைப் பிராட்டியென்று அறியாமற போனேமேயென்று வருநதி, எம்பெருமானுக் குகந்த திருமகளென்று போற்றினா. அன்று முதல தான் கட்டும மாலையைக் கோதை நாச்சியார் முன வைத்து சூடிக்கொள்ளுமபடி வேண்டி அதை எம்பெருமானுக்குச சாற்றி வந்தா. அக்காரணததால் கோதை நாச்சியாருக்கு, ஸகல லோகங்களுக்கும் தாயாய் ஆண்டுவரும் லக்ஷ்மியின் அவதாரமென்றது பற்றி ஆண்டாளென்றும, கேசவனுக்குரிய மலர்மாலையைத் தான் சூடிப பிறகு அவர்க்குக் கொடுததால சூடிக் கொடுதத நாசசியாரென்றும் பெயா வாயநதது.

மங்கைப்பருவம வநது, ஆண்டாள் கண்ணனிடத்தில் கோபிகள் காதல் கொண்டு அவனுடைய பிரிவைப பொறாமல் அவனையடைய நோன்பு நூற்றுத் தங்களுடைய மனோபாவத்தையும காதலையும் வெளியிட்டது போல், தானும் நோன்புநூற்றுத் தன் உட்கருத்தைத் திருப்பாவை, நாச்சியார் திருமொழி யென்ற திவ்யப பிரபந்தங்களின் மூலமாய் ஸந்நிதியிலே விண்ணப்பஞ் செய்தாள்.

இப்படியிருக்கையில், பெற்றோர் இவளுக்கு விவாஹம் செய்யும் பருவம்வந்ததென்று இவளுக்கேற்ற கணவன் யாரோவென்று கவலைப்பட்டுப் "பெண்ணே! நீ யாருக்கு வாழ்க்கைப்பட விரும்புகிறாய்" யென்றனர். ஆண்டாள், "மானிடவற்கென்று பேச்சுப்படில் வாழ்கில்லேன்" னெனப்பட்டர், "பின்னை யாரைக் கோறியிருக்கிறாய்" யென்றார். கோதை "உபய விபூதி

நாதனுக்கே நானுரிய" வளென, விஷ்ணுசித்தர் திகைத்து அவளுடைய அவதார ரஹஸ்யத்தை ஞாபகப்படுத்திக்கொண்டு "அம்மணி! நூற்றெட்டுத் திருப்பதிகளிலும் விளங்கும் எம்பெருமான்களில் உன் மனம் யாரிடத்தில் ஆழ்ந்து நிற்கிற" தென்றார். நாச்சியார் "அவர்களுடைய வைபவங்களை விரிவாய் ஸாதிதருளவேண்டு" மென, பட்டர்பிரான் அப்படிச் செய்து வருகையில், வடமதுரையில் விளங்கும் கண்ணனுடைய வரலாற்றால் மயிர்க்கூச்சலும், திருவேங்கடத்தானுடைய வைபவத்தால் முகமலாச்சியும், அழகருடைய புகழால் அகமகிழ்ச்சியும், திருவரங்கச் செல்வனுடைய மஹிமையால் தன்னை மறந்த ஆனந்தமும் உண்டாயின. பிறகு எம்பெருமான்கள் எல்லோரும் ஆண்டாளின் ஸ்வயம்வரத்தை நாடி ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு எழுந்தருளி அவளுடைய ஞானக் கண்ணிற்குத் தோன்ற, அவள் ரங்கநாதனிடத்திலேயே மனதைச் செலுத்தி அவனுக்கே தன்னை அர்ப்பணஞ் செய்தாள்.

அதை யறிந்து, நம்பெருமாள் இவளை மணம் புரிவதெப்படி யென்று ஆழ்வார கவலை கொண்டிருக்க, ரங்கநாதன இவருடைய கனவில் தோன்றி "ஆழ்வாரே! உமது திருமகளைப் பெரிய கோவிலுக்கு அழைத்துக் கொண்டு வந்து நம்மிடத்தில் ஒப்புவியு" மென்றருளினா. விஷ்ணுசித்தர் மஹா பாக்யமென்று அப்படியே ஸ்ரீ வில்லிபுத்தூரிலிருந்து திருமணததிறகுப் புறப்பட ஏற்பாடு செய்துகொண் டிருக்கையில், ஸ்ரீரங்கத்திலுள்ள கோவில் உத்தியோகஸ்தர்களுக்கும் பரிஜனங்களுக்கும் பகவான் ஸ்வப்னம் ஸாதித்து "நீங்கள் என் ஸகல விருதுகளையும் மர்யாதைகளையும் நவரதனப் பல்லக்கையும் ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு எடுததுக்கொண்டு சென்று, விஷ்ணு சித்தரின் மகளான ஆண்டாளை ஸர்வோபசாரத்துடன் இங்கே அழைத்துவாருங்க" ளென்று உத்திரவிட்டார். அவர்கள் அப்படியே சென்று பெரிய ஆழ்வாரிடத்தில் நம் பெருமாளின் அருளப்பாட்டை விண்ணப்பஞ் செய்து, எல்லோரும் வெகு ஸம்பிரமததுடன் அந்தத் திருபபதியில் விளங்கும் வடபெருங் கோயிலுடையானுடைய அனுமதிபெற்றுப் பிரயாணமாயினர். அதைக் கேட்ட வல்லப பாண்டியனும் கல்யாண மஹோத்ஸவத்தை நடப்பித்துத் தானும் கடைத்தேற விரும்பி, வில்லிபுத்தூரையும் ஸ்ரீரங்கத்தையும் ஸ்ரீ வைகுண்டத்தைப் போல் அலங்கரிக்கக் கட்டளையிட்டு, சதுரங்க பலத்துடன் ஆழ்வாரைப் பின் தொடர்நதான.

பிறகு ஆண்டாளை மணிச் சிவிகையில் எழுந்தருளப்பண்ணிப் பட்டரும் மன்னவனும் இருபுறத்திலும் நின்று "ஆண்டாள் வந்தாள், சூடிக் கொடுத்த சுடற்கொடி வந்தாள், பட்டர் பிரான் புதல்வி வந்தாள், சுரும்பார் குழற்கோதை வந்தா" ளென்று விருதுகளைக் கூறிக்கொண்டு பெரிய கோவிலை யடைந்து நம்பெருமாளுடைய முன் மண்டபத்தில் கோதை நாச்சி

யாரை நிறுத்திப் பெருமாளை ஸேவிக்கப் பண்ணினார்கள். இரும்பைக் காந்த மிழுப்பதுபோல் ஆண்டாள் ரங்கநாதனுடைய திருமேனியின் சௌந்தரியத்தால் இழுக்கப்பட்டு, திருவரங்க திருச்செல்வனுடைய ஸந்நிதியில் தானே சென்று ஆனந்தக்கடலிலாழ்ந்து தன் கணவனுக்கு நித்ய கைங்கரியம் செய்யக் கருதிப பாம்பணையை மிதித்தேறிப் பரமபுருஷனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தில் மின்னற் கொடிபோல் கலந்து மறைந்தாள்.

அந்தத திவய ஸேவையை அனுபவித்துக் கொண்டிருக்கும் எல்லோரையும பார்த்துத திருவரஙகமுடையான் அர்ச்சக முகமாய் ஆழ்வாரை அருளப பாடிட்டு,

"ஓய்! க்ஷீரஸமுத்ரராஜனைப்போல் நீரும் நமக்கு மாமனாராய்விட்டீர் காணு"மென்று ஸந்நிதி மரியாதைகளைக குறைவறச செய்விதது, வில்லிபுத்தூர் பெருமாளுக்கே கைங்கரியம் செய்துகொண்டிரு மென்று விடை கொடுததனுப்பினர்.

ஆழவாரும் வல்லபதேவனும ஸ்ரீ வில்லிபுத்தூருக்குத் திரும்பிவந்து ஆண்டாளுடைய திவய மங்கள விக்ரஹத்தை அங்கே எழுந்தருளப் பண்ணி வைத்தார்கள். சூடிக்கொடுதத நாசசியார இந்த விபூதியில் எழுந்தருளியிருந்தது பதினைகு வருஷங்களேயாகும்.

# திருப்பாவை.

உபநிஷத்ஸாரமாகிய இதற்குப்பட்டரும் உய்யக் கொண்டாரும் தனியன்களை அருளிச் செய்திருக்கிறார்கள். இதறகுப் பெரிய வாசசான் பிள்ளையின் மூவாயிரபபடி வியாக்யானமும் அரும்பதவிளக்கமும சுதத ஸதவம் தொட்டயாசாரி யாருளிசசெய்த ஸ்வாபதேச வியாக்கியானமும் உண்டு.

தேஹமே ஆதமாவெனற ஸம்ஸாரிகளுக்கும ஆதமாவின் ஸ்வரூபத்தை உள்ளபடி யறிந்த மஹரிஷிகளுக்கும, பாவதத்திற்கும பரமாணுவிற்குமுள்ள பேதமுண்டு. அநத ரிஷிகளுக்கும ஆழவாாகளுக்கும் அவ்வளவு பேதமுண்டு, ஆழ்வார்களுககும பெரியாழ்வாருககும அததனை பேதமுண்டு; பெரியாழ்வாருக்கும் ஆண்டாளுக்கும் அத்தனை பேதமுண்டு, ஸம்ஸாரத்தில் அநாதிமாயையால் உறங்குகிறவர்களை எழுப்பி எம்பெருமான் தானே தன்னைக் காட்டக் கண்டார்கள் ஆழ்வார்கள், இவள் தானே சென்று எம்பெருமானை எழுப்பித் தன் குறையை அறிவித்தாள். ஆகையால் இவளுக்கே ஏற்றம். மேலும், புருஷன் புருஷனைக் கண்டு ஸ்நேஹஞ் செய்வதிலும்

ஸ்திரீ புருஷனைக் கண்டு ஸ்நேஹஞ் செய்வதே விசேஷம். ஆழ்வார்களைக் காட்டிலும் கண்ணனிடத்தில் பரமபக்தியுடைய ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவையின் கருத்து யாதெனில், மார்கழி நீராடுவதென்ற ஒரு காரணத்தைக் கொண்டு நோன்பென்ற சலுகையால் எம்பெருமான் பக்கலிலே சென்று "உனக்கு அடிமையான இந்த ஆத்மா கெடாதபடி இதன் ஸ்வரூபத்திற்குத் தகுந்த கைங்கரியத்தை நியமித்து எக்காலத்திலும் அதே இயற்கையா யிருக்கும்படி அருள வேண்டு"மென்பதே. ஆண்டாள் யௌவனத்தை யடைந்து கண்ணனையே மணஞ் செய்ய விரும்பி அந்தப் பாக்கியத்தைப் பெறத் தாமதித்ததால், கவலை கொண்டு இப்படி இவனுடன் கலந்தனுபவித்தவர் முன்பு திருவாய்ப் பாடியில் பிறந்த கோபிமாரன்றோவென்று, அவர்கள் அவனுடைய லீலைகளைச் சொல்லிச் செய்து தங்களுடைய துக்கத்தைப் போக்கினது போல் தானும் அந்தக் கோபிகள் செய்ததை அனுஸரித்து ஆனந்த மடைகிறாள். இவளுடைய பக்தி விசேஷத்தால் தான் அக்காலத்தில் இருந்த திருவாய்ப் பாடியே வில்லிபுத்தூரென்றும் உண்மையாய் அனுபவித்தவள்.

கண்ணன் கோபி மாரை மயக்கிக் கெடுக்கிறானென்று கோபாலர்கள் அப்பெண்களைக் கொண்டு போய நிலவறைகளில் அடைத்தார்கள். கண்ணனுடைய நியமனத்தால் மழை பெய்யாமல் பசுக்களும் கோபாலர்களும் துன்பமடைந்தார்கள். அப்பொழுது அவர்கள் "நமது பெண்களைக் கொண்டு மழை பெய்யும்படி ஓர் நோன்பு ஆரம்பிக்க வேண்டும். அதற்கு வேண்டிய உபகாரங்களைச் செய்வதற்கு கண்ணனே உரியவனெ"ன்று பெண்பிள்ளைகளை அவனிடத்தில் ஒப்புவித்தார்கள். அவர் "பெண்களே! நீங்களெல்லோரும் இப்பொழுது போய் நித்திரை செய்து, இரவின் பின பாகத்தில் என்னை எழுப்புங்கள். நோன்பிற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வோ" மென்று நப்பின்னைப்பிராட்டியின் திருமாளிகைக்குச்சென்றார். பெண்களும் வீடுகளில் தூக்கம் பிடிக்காமல், முந்தி விழித்துக்கொண்டவர்கள் கண்ணனுடைய குணங்களையும் லீலைகளையும் நினைத்து எழுந்திருக்க மாட்டாதே கிடக்கிறவர்களைத் தனித்தனியே சென்று எழுப்பி, எல்லோரும் கூடிநந்தகோபருடைய திருமாளிகைக்குச் சென்று கண்ணனை எழுப்பித தங்களுடைய கோரிக்கைகளைத் தெரிவிக்கிறார்கள்.

# நாச்சியார் திருமொழி

இதையும் உபநிஷத் ஸாரமென்று சொல்வதுண்டு. இதற்குத் திருக்கண்ணமங்கையாண்டானுடைய தனியன் காணப்படுகிறது. இதிலுள்ள 14 பத்துகளிலும் நாச்சியார் கண்ணனிடத்தில் கொண்ட காதலையும் அவனை அடைய விரும்பி அதனால் தான் பட்டபாடுகளையும் பலமுறையாய்த் தெரிவிக்கிறாள். இது வெளிப்படைக்கு சிருங்கார ரூபமாயிருந்தாலும், ஜீவேசுவர ஸம்பந்த மென்ற திறவுகோலால் உள்ளுறைப் பொருள் (ஸ்வாபதேசம்) பொருந்தின தென்று நமது ஆசாரியர்கள் விஸ்தாரமாய் வியாக்கியானஞ் செய்திருக்கிறார்கள். ஆழ்வார்களே பிராட்டியின் தசையை அடைந்து தங்களுடைய அநுபவத்தை வெளியிட்டிருக்கும்பொழுது சூடிக்கொடுத்த நாச்சியாரைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ ?

1. கண்ணனுக்குத் தன்னிடத்தில் கருணையுண்டாகித் தன்னை வந்தடையும்படி செய்வாயென்று அவனுடைய அருமைப்புதல்வனை மன்மதனை வேண்டுகிறாள்.

2. சிறுமியர் கண்ணனைத் தங்களுடைய மனக்கோயிலில் வந்து குடியிருக்கும்படி வேண்டுதல்.

3. கன்னியரோடு கண்ணன் விளையாடல்.

4. கண்ணன் வந்து கூடுவதின் குறிப்பு.

5. அவன் விரைவில் வந்து தன்னைக் கூடும்படி கூவென்று குயிலை வேண்டுதல்.

6. மதுசூதனன் தன்னை வந்து மணம்புரிந்து அநுக்கிரஹித்ததாகத் தான் கண்ட கனவைத் தோழிகளுடன் சொல்லுதல்.

7. கண்ணனுடைய திருக்கையில் விளங்கும் பாஞ்சஜன்யமென்ற சங்கை அவனோடு சுற்றமாக்குதல்.

8. மேகங்களை அவனிடத்தில் தூது விடுதல்.

9. திருமாலிருஞ்சோலையில் விளங்கும் எம்பெருமானைப் போற்றுதல்.

10. கண்ணனுடைய கடினசித்தத்தையும் தயையில்லாமையையும்எடுத்துச் சொல்லி, கோவை மணாட்டி முல்லைப் பிராட்டியென்று மலர்களையும் பாடும் குயில்களையும் கணமா மயில்களையும் மழையையும் கடலையும் கூவியழைத்து முறையிடல்.

11. திருவரங்கத்துச் செல்வனிடத்தில் தான் வைத்த தீராக் காதலைத் தெரிவித்தல்.

12. அவன் தன்னிடத்தில் கடாக்ஷம் புரியாததால் அவனிருக்கும் ஊரில் தன்னைக் கொண்டுபோய்விடுங்களெனத் தம்மவரை வேண்டுதல்.

13. அவனுடைய பிரிவை ஆற்றுமல் தாபத்தை ஸஹிக்காமல் அவனுடன் ஸம்பந்தப்பட்ட பீதகவாடை, துழாய்மாலை, திருவதரத்திலிருந்து பெருகும் அமுதம், பாததூளி முதலிய பொருள்களைக் கொண்டுவந்து, வேட்கையைத் தீர்க்க வேண்டுதல்.

14. இந்தப் பத்தில் ஒவ்வொன்றிலும் முதலிரண்டடிகளில், இவ்விதமான லக்ஷணங்களையுடைய ஒருவனைக் கண்டீரோவென்று நாச்சியார் கேட்க, மூன்றுவது நாலாவது அடிகளிலும "ஆம்,.அவனைப பிருந்தாவனததில் கண்டோ" மென்று பிறர் உத்தரமளித்ததும் வெகு அழகாய் வர்ணிக்கப்படுகின்றது.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# குலசேகராழ்வார் வைபவம்.

நூற்றெட்டுத் திருப்பதிகளில் பதின்மூன்று தன்னுள் அடங்கியிருக்கப் பெற்ற சோள தேசத்தில் கோழிக் கூடென்ற ராஜதானியில், இவ்வாழ்வார் திருடவிரதனென்ற அரசனுடைய மைந்தராய்க் கலியுகம், பிறந்த 28-ம் வருஷமான பராபவ ஸம்வத்ஸரம் மாசியீ சுக்லபக்ஷ துவாதசி வியாழக்கிழமை புனர்வஸு நக்ஷத்திரத்தில் அவதரித்தருளினூர். தன் நிலைமைக்குரிய வித்தை கலைகளையும் இளவயதிலேயே கற்றுத் தேர்ந்து, நிகரற்ற கீர்த்தி வாய்ந்து குலசேகர னென்ற பெயருடன் இளவரசப் பட்டம் சூட்டப்பெற்றூர். பிறகு சதுரங்க ஸைந்யத்துடன் திக்விஜயஞ் செய்து, சோழ பாண்டிய மன்னர்களை ஜயித்துக் கீழ்ப்படுத்திக் கொல்லிகாவலன் கூடலநாயகன கோழிக்கோன குலசேகரனென்ற விருதுகளைப் பெற்று விளங்கினூர். பிறகு அரசன் ராஜ்யத்தை இவரிடத்தில் ஒப்புவித்துத் தபோவனத்திற்குச் சென்றூன. காலக்கிரமத்தில் இவ்வாழ்வார் ஒரு ராஜகன்யை மணம்புரிந்து நீளாதேவியின் அம்சமான ஒரு பெண்ணையும் திருடவிரதனென்று பெயர் வாய்ந்த மகனையும் பெற்று விதிப்படி இல்லறம் நடத்தி வந்தார். பால்யம் முதல் லோகவிஷயங்களில் பற்றில்லாமல், பரதைவம் யாதென்று விசாரிப்பதிலேயே நாடின புத்தியுடன் பல மதங்களையும் பல நூல்களையும் பரிசோதித்து, முடிவில, செங்கமலக் கண்ணனை திருமாலே பரம்பொருளென்றும் கடைத்தேறும் உபாயமென்றும் நிர்ணயம் செய்துகொண்டார். அப்பொழுது பரவாஸு தேவனுடைய ஆக்ஞையால் சேனைமுதலியார் இவ்வாழ்வாரிடத்திற்கு வந்து பஞ்சஸம்ஸ்காரஞ் செய்வித்து தத்துவப் பொருள் விளங்க உபதேசித்துச் சென்றூர்.

குலசேகரப் பெருமாள் மஹா விஷ்ணுவின் பத்து அவதாரங்களில் சக்கரவர்த்தி திருமகனிடத்தில் ஈடுபட்டுத், திருவரங்கம் திருவேங்கடமென்ற திருப்பதிகளில் விளங்கும் எம்பெருமான்களிடத்திலும் பக்தி பெருகி, வேதரூபமான ஸ்ரீமத் ராமாயணத்தையே எப்பொழுதும் காலக்ஷேபஞ் செய்துகொண்டு, தன் திருவாராதனத்தில் எழுந்தருளின ராம கிருஷ்ணமூர்த்திகளுக்கு ஸகல உத்ஸவங்களையும வெகு சிறப்பாய் நடத்திக் கொண்டு, தன்னை நாடிவரும் ஸ்ரீ வைஷ்ணவர்களையும் பாகவதர்களையும் விசேஷமாய் உபசரித்துப் பணிவிடை செய்துகொண்டிருந்தார்.

ஒரு நாள் ஸ்ரீமத் ராமாயண காலக்ஷேபம் செய்துவருகையில், கரதூஷணுதியர் பெருஞ்சேனையுடன் ஜனஸ்தானத்திலிருந்து வந்து ராமனை எதிர்க்க அவர், இளைய பெருமாளைப் பிராட்டிக்குக் காவலாய் ஆச்சிரமத்தில் வைத்து விட்டுத் தான் ஒண்டியாய்க் கோதண்டபாணியாய்ப் பதினூலாயிரம் வெண்கலத்தேர்களில் கடல் போல் வந்தெதிர்த்த ராக்ஷஸர்களை நோக்கித்

சென்றுரென்று சொல்லக் கேட்டார். ஸ்ரீராம பிரானுடைய அவதார சேஷ்டிதங்களில் ஈடுபட்டுத், தன்னையும் உலகத்தையும் முற்றும் மறந்து, நெடுநாளுக்கு முன் நடந்த செயல்கள் அப்பொழுதே நடப்பதாய்ப் பாவித்து "ஐயோ எம்பெருமானுக்கு இப்படி ஆபத்து நேரும்பொழுது அவரை ஒண்டியாய் இக்கொடிய அரக்கர்களின் கையில் காட்டிக்கொடுத்து விட்டேனே. என் இராச்சியமும் சேனையும் எதற்கென்று படைத்தேன்" னென்று பதறி, உடனே சேனாதிபதிகளைப் போருக்குச் சித்தமாய்ப் படைகளை அணி வகுத்துச் செல்லும்படி கட்டளையிட்டுத் தானும் போர்க்கோலத்துடன் கடுவேகமாய் ஜனஸ்தானத்தை நோக்கிச் சென்றார். எல்லோரும் அதைக் கண்டு திடுக்கிட்டு, இதென்ன விபரீதமென்று திகைத்து நிற்கையில், அதி சாதுர்யமுள்ள அந்தப் பௌராணிகர் அவருடைய மனோபாவத்தைக் கண்டறிந்து ஸமயோசிதமாய் "ஜானகிரமணன் பிறருடைய உதவியின்றித் தான் ஒண்டியாகவே கோதண்டத்தை மண்டலாகாரமாய் வளைத்துப் பாணவர்ஷங்களால் ராக்ஷஸ ஸைந்யத்தை ஒரு நொடியில் யமலோகத் திற்கனுப்பி ஆசிரமத்திற்குத்திரும்பிவருங்கால் வைதேகி அடங்காமகிழ்ச்சி கொண்டு அவருடைய சிரமத்தைத் தணிக்கவிரும்பி இருகத்தழுவினாள்" ளென்ற சுலோகத்தை எடுத்துச் சொன்னார். அதைக் கேட்ட குலசேகரரும் பரமானந்த மடைந்து தன் பிரயாணத்தை நிறுத்தினார். அன்று முதல் அந்தப் பௌராணிகர் ராமனுக்கு விஜயம் நேரு 'மிடங்களை விரித்துக் கூறியும், துயரமும் ஸங்கடமும் நேருமிடங்களைச் சுருக்கியும் சொல்லி வந்தார். ஒரு நாள் அவர் வேறு காரியமாய்ப் போய்த் தன் மகனைக் காலக்ஷேபஞ் சொல்லவனுப்பினார். அரசனுடைய மனோபாவத்தை யறியாத அச்சிறுவன், சீதா பிராட்டியை தசமுகன் எடுத்துப்போனதையும் அவள் பரிதாபமாய்ப் பிரலாபிப்பதையும் விரித்துக் கூறி உபந்யாஸஞ் செய்தார். அதைக் கேட்டவுடன் குலசேகரப் பெருமானின் மனங் கொதித்து உடல் பதைத்து, "அடியேன் இருக்கையில் இந்த நீசன் என் தாயை இப்படித்துணிந்து தொட்டெடுக்கவும் அவள் கதறியழவும் பார்த்துக் கொண்டிருக்கும் என் ஜன்மத்தைச் சுட வேண்டும்; இப்பொழுதே அவன் லங்கைக்குச் செல்லுமுன் தடுத்துப ந்து வர்க்கங்களுடன் போரில் அவ்வரக்கனை யழித்து, இலங்கையைத் திடலாகச் செய்து, என்மாதாவை மீட்டு வருவே" னென்று ஆயுதபாணியாய்ப் படையுடன் லங்கையை நோக்கிச் செல்லப் புறப்பட்டார். எல்லோரும் பெருங்கவலை கொண்டு, இது எப்படி முடியுமோ வென்று அவரைப் பின் தொடர்ந்தார்கள். குலசேகராழ்வார் பெருங் கடலை நீந்திக்கடக்க நிச்சயித்து நீரில் இறங்கிக் கழுத்தளவு தூரம் போனபொழுது தாசரதி, இவருடைய பக்தியையும் உறுதியையும் கண்டு வியந்து, அச்சமயத்தில் இவரை வேறு விதமாய்த் தடுக்க முடியாதென்றறிந்து, ஸீதாஸமேதராய் இளைய பெருமாளுடன் ஆழ்வாருக் கெதிரில் வந்து ஸேவை ஸாதித்து

"எனிப்படிப் பதறுகிறீர்? நாம் அரக்கருடன் போர்புரிந்து அவர்களை வேரறுத்துத் தேவியை மீட்டு வந்து விட்டோம். கவலை வேண்டாம். திரும்பிச் செல்லு" மென்று ஆறுதல் செய்து மறைந்தார்.

இப்படி எம்பெருமானுடைய கல்யாண குணங்களைக் கேட்டுக் கேட்டு அவைகளில் ஆழ்ந்த மனமுடையவராய்ப், புராணங்களில் பூலோக வைகுண்டமென்று கொண்டாடப்படும் உபயகாவிரி நடுவில் விளங்கும் திருவரங்கத்தின் மஹிமையை நினைத்து நினைத்து, அத்திருப்பதிக்குச் செல்வேன், செல்வேனென்று ஒவ்வொரு நாளும் புறப்பட்டுக் கொண்டிருந்தார். ரங்க க்ஷேத்திரத்தில் பிறப்பவர்களே பாக்கிய சாலிகள். அத்தலத்தைக் காணவும் மிதிக்கவும், அங்குள்ள அடியார்களுக்குத் தொண்டு செய்யவும், திருவரங்கத் திருச் செல்வனைக் கண்ணாரக் கண்டு செய்விக்கவும் எனக்குக் கிடைக்குமோ? நானங்கே நாளைப் போகாமலிருப்பேனோ? அரங்கனைக் காணாமல் உயிர் தரிப்பேனோவென்று இவர் பதறுவதைக் கண்ட மந்திரிகள் 'இவர் நம் பெருமாளைச சேவிக்கச் சென்றால் அதை விட்டு அகலா' ரென்று நிச்சயித்து, அந்தப் பயணத்தைத் தடுப்பதற்கு, ஒவ்வொருநாளும் பாகவதர்களையும் ஸ்ரீவைஷ்ணவர்களையும் இவர் புறப்படும் போதெல்லாம் எதிரில் வரச் செய்தார்கள். திருமாலை 60,000 வருஷங்களாய் ஆராதிக்கும்புண்ணியத்தைக் காட்டிலும் ஒரு பாகவதனைப் பூஜிக்கும் புண்ணியமே எவ்வளவோ மேலானதெனறறிந்த ஆழ்வார், ஸ்ரீரங்க யாத்திரையை நிறுத்திப் பாகவத கைங்கரியம் செய்து வந்தார். வரவர அரசனுக்கு வைஷ்ணவர்களிடத்தில் ஓங்கி வளரும் பக்தியையும், அவர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதற்காகத் தன்னையும் ராஜ்யத்தையும் அவர்களுக்கு அர்ப்பணஞ் செய்வதையும் கண்டு, மந்திரிகள், இந்தப் பித்தம் தலைக்கேறி விட்டால் நம்மரசனுக்கும் நாட்டிற்கும் பெருங் கெடுதி நேருமென்று அஞ்சி, ஒருபாயஞ் செய்தார்கள். ஸ்ரீராமநவமி மஹோத்ஸவம் வெகு சிறப்பாய் நடக்கும் பொழுது, ஓர் நவரத்தின மிழைத்த ஹாரத்தையெடுத்து ஒளித்துவிட்டுப் பின்பு பெருமாளுக்கு அலங்காரஞ்செய்யும்பொழுது அதைக் காணோமேயென்று கூக்குரலிட்டனர். கள்வனைத் தேடுவதுபோல் போக்குக் காட்டி, இங்கே இராப் பகலாய்த் தங்கு தடையின்றித் திரிகிறவர்கள் இந்த வைஷ்ணவரே. வேறொருவன் வரமாட்டான், எடுக்கத் துணியவும் மாட்டானென்று பாகவதோத்தமர் மீதில் பழிசாற்றினர். அதைக் கேட்ட குலசேகரப் பெருமாள் உடல் பதறி, ராம ராமவென்று காதை மூடிக் கொண்டு, இமைப் பொழுதும் எம்பெருமானுடைய திருவடிகளை விட்டகலாத மனத்தையுடைய அவனடியார் ஒரு பொழுதும் வேறொன்றை நினைப்பரல்லவே; இது ஸத்தியம். இதை நிலை நிறுத்துவதற்காக கோரமான ப்ரமாணஞ் செய்வேனென்று, கொடிய விஷமுள்ள பாமபுகளைக் குடத்திலடைத்துக்கொண்டு வரச் சொல்லி, இந்தத் தீஞ்செயலை ஸ்ரீவைஷ்ணவர்கள் செய்ய நினைத்தாலும்

இந்தப் பாம்புகள் என்னைக் கடித்துக் கொல்லட்டுமென்று அக்குடத்தில் கைவிட்டார். அவருடைய பக்திக்கும் ஸத்தியத்திற்கும் கட்டுப்பட்ட நாகங்கள்அடங்கிப் பதுங்கிக் கிடந்தன. அதைக் கண்ட மந்திரிகள் கிலிபிடித்து, இப்படியும் ஓர் பக்திமானுண்டோவென்று திகைத்து நின்று, அவருடைய திருவடிகளில் விழுந்து, தாங்கள் செய்த பெரும்பிழையை எடுத்துரைத்துப், பொறுத் தருளும்படி வேண்டினர். ஆழ்வாரும் பொறுத்தேன், இனி இப்படி எம்பெருமானடியார்களிடத்தில் அபசாரப் படாதீர்கள். இந்தம் பாபத்திற்குப் பரிஹாரம் ஒன்றே. அவர்களின் திருவடிகளில் பணிந்து ஊழியம் செய்து உய்யுங்க"ளென்றார்.

அதற்குப் பிறகு தான் இவ்வாழ்க்கையில் கலந்திருந்து அரசுபுரிவதால் எம்பெருமானுடைய கைங்கரியமும் பாகவதர்களுடைய சேர்க்கையும் தனக்குக் கிடைக்காதென்று நிசசயஞ் செய்து, பரம வைராக்கியம் பிறந்து;

"உம்பருலகாண்டு ஒரு குடைக் கீழ் உறுப்பசிதன்,
அம்பொற்கலையல் குல்பெற்றாலு மாதரியேன்,
வானுளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்,
கோனுகி வீற்றிருந்து கொண்டாடும செல்வரியேன" எனறும்,

"கம்பமத யானைக் கழுத்தகததின் மேலிருந்து இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்" னென்றும் ஸமஸாரத்தைத் துறந்து, தம் குமாரனை திருடவிரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து, நாட்டைவிட்டு வெளிப்பட்டார். அங்கங்குள்ள திவ்ய தேசங்களை ஸேவித்துக் கொண்டு பெரிய கோயிலுக்கு வந்து, அங்கு எழுந்தருளி யிருக்கும் அழகிய மணவாளனைத் தனக்குக் கணவனுய் ஆதிமுதல் கோறியிருந்த தன் பெண்ணை அரங்கனுக்கே ஸமர்ப்பிததார். உபயகாவேரி நடுவில் நித்யஸூரிகள் நடமாடப பெறும் பெரிய கோவிலில் பகவத் பாகவதகைங்கரியங்களைப் பரமானநத பூரிதராய் எப்பொழுதும் செய்துகொண்டு சிலகாலங் கழித்தார்.

பிறகு எம்பெருமானுடைய நியமனத்தின்மேல் திருவேங்கடம், திருவயோத்தி, திருச்சித்திரகூடம், (சிதம்பரம்) திருக் கண்ணபுரம், திருமாலிருஞ்சோலை (அழகர் கோவில்) திருவித்துவக்கோடு முதலிய திருப்பதிகளுக்குச் சென்று அங்கங்கே அர்ச்சாரூபமாய் விளங்கா நின்ற எம்பெருமானை ஸேவித்துக்கொண்டு மங்களாசாஸனஞ் செய்து, தன் அனுபவத்தையும் ராம கிருஷ்ணாதி அவதாரங்களில் தன் மனம் ஈடுபட்டதையும், வடமொழி நூலான முகுந்தமாலையாலும், தென்மொழி பிரபந்தமான பெருமாள் திருமொழியாலும் உலகத்தார்க்கு அருளிச்செய்து, சேதனர்களைக் கிருதார்த்தர்களாக்கியருளினார். முடிவில் இந்த லீலா விபூதியில் 67 வருஷங்கள்

எழுந்தருளியிருந்து, ஸ்ரீ சடகோபருடைய அவதார ஸ்தலமான திருக்குருகூர்க்கருகிலுள்ள ப்ரம்மதேசத்தில் ஸ்ரீராஜகோபாலஸ்வாமி ஸந்நிதியில் கைங்கரிய பராயிருந்து இப்பொய்யுடலை விட்டு நித்ய விபூதியில் பரம புருஷனை ஆராதிக்கச் சென்றார்.

பகவானுடைய திருவடிகளே தனக்குக் கிரீடமாயும், அவனுக்கும் அடியார்களுக்கும் பணிவிடை செய்வதே தன் ராஜ்யமாயும் கொண்டு, பெருமாளுடைய ஸுகதுக்கங்களைத் தனதாய்க் கருதி, உலகத்தையும் தன்னையும் மறந்து அனுபவித்தவராகையாலே, இவருக்குப் பெருமாளென்றும், இவர் இயற்றிய பாசுரங்களுக்குப் பெருமாள் திருமொழியென்றும் சிறப்புப் பெயர்வழங்கும்.

# பெருமாள் திருமொழி

இதற்கு உடையவரும் மணக்கால் நம்பியும் தனியன்களை அருளிச் செய்திருக்கிறார்கள். இது ஸ்ரீமத் ராமாயணத்தின் ஸாரமாகும். இருளிரியச்சுடர்மணி, தேட்டறுந்திறல், மெய்யில் வாழ்க்கை என்ற 30ம் ரங்கநாதனைப்பற்றியவை. ஊனேறுசெல்வம் என்ற 10 திருவேங்கடமுடையான் விஷயம். தருதுயரம் என்ற 10 வித்துவக் கோட்டம்மானைப்பற்றினது. மன்னுபுகழ் 10-ம் ஸ்ரீரகுபதியின் தாலாட்டு. வன்றாளினை யென்ற 10-ம் ஸ்ரீராமனை வனத்திற்கனுப்பித் தசரதன் புலம்பல். அங்கணெடுமதிளென்றது தில்லைநகர் திருச்சித்திர கூடத்தில் ஸ்ரீராமனை ஸேவித்து ஸ்ரீமத் ராமாயணம் முழுவதையும் சுருக்கமாய்ப் பாடியதாகும். ஏமலர்ப் பூங்குழலென்ற ஆறுவது 10 இவ்வாழ்வாருக்குக் கண்ணனிடத்திலுள்ள பரம ப்ரேமைக்கு அடியாய்க் கோபியா கண்ணனை வேண்டினதை வர்ணிக்கிறது. ஆலை நீள் கரும்பென்ற ஏழாம்பத்தில் பிறந்தவுடனே தன் மகனைப் பறி கொடுத்துப் பலவருஷங்கள் வரையில் பாராமல் பாலலீலைகளை யசோதையைப்போல் தானும் அனுபவிக்காமல் தாழ்வடைந்த தேவகிப் பிராட்டியின் புலம்பல். பரமபதத்திலும் அனுபவிப்பது எம்பெருமானுடைய கல்யாண குணங்களாகையாலே அவைகளைத் திருவரங்கம் பெரிய கோவிலில் விளங்கும் எம்பெருமானிடத்திலும் பூர்ணமாய் அனுபவிக்கப் பார்க்கிறார்.

இருளிரியச் சுடர்மணியென்ற முதற்பத்தில் இவர் பெரிய ராஜ்யத்தை ஆளுகிறவராகையால் அதைக்கைவிட்டுப் பெரியகோவிலுக்குவந்து தன்னுடைய தீர கைங்கரியம் செய்யமுடியாமல் பிறரால் தடுக்கப்பட்டு, அந்தப் பாக்கியத்தை எப்பொழுது பெறுவேனோ வென்று உருகுகிறார். "என் கண்கள் கருமணியைக் கண்டுகொண்டு என்று களிக்குமோ. மாயோனை மணத்தூணே பற்றி நின்று என்வாயார என்று கொலோ வாழ்த்தும் நாளே.

அங்கு அடியவரோடு எங்கு கொலோ வணுகும் நாளே. அம்மான் தன் அடியிணைக் கீழ்மலர்கள் இடும் நாள் என்றோ. கேசவனை நாவுறவழுத்தி, என்றன் கைகள் கொய்ம்மலர் தூயென்று கொலோ கூப்பும் நாளே. மணி வண்ணனைக்கண்டுகொண்டு என் தலை அவனுடைய திருவடிகளில் வணங்கும் நாளெதோ. கடல்வண்ணனுடைய அமலக்கண்ணையும் திருமுகத்தையும் கண்டுகொண்டு உள்ளமிக என்று கொலோ உருகும் நாளே. மாயவனைக் கண்டு என் கண்கள் நீர்மல்க என்று கொலோ நிற்கும் நாளே; மாலைக்கண்டு இன்பக்கல்வி எய்தி வல்வினையேன் என்று கொலோ வாழும் நாளே. திரு வாழியானைக்கண்டு துள்ளிப்பூதலத்தில் என்று கொலோ புரளும் நாளே. அணியரங்கன் திருமுற்றத்து அடியார் தங்கள் இன்பமிகும் பெருங்கூட்டத் தைக்கண்டு யானும் இசைந்துடனே என்று கொலோ இருக்கும் நாளே.'' இப்படி ஆழ்வார் தமக்குப் பகவத் கைங்கரியமும் பாகவத கைங்கரியமும் கிடைப்பதையே பரம புருஷார்த்தமாய் நினைத்தருளுகிறார்.

இரண்டாம்பத்தில் எம்பெருமான் நமக்கு இந்த மானிட ஜன்மத் தையும் கரசரணாதி அவயவங்களையும் கொடுத்ததற்குப் பயனென்னவென்று விசாரித்து நிச்சயிக்கிறார். முதறபத்தில் பகவானிடத்தில் தனக்குப்பிறந்த ஆநுகூலியத்தையும், இந்தப்பத்தில் அவனடியார்களிடத்தில் பிறந்த ஆநு கூலியத்தையும் வர்ணிக்கிறார். ஆநுகூலியமாவது அவரவர்க்கு வேண்டிய வற்றைச் செய்கையெனப்படும். ஸர்வசக்தனும் ஸர்வக்ஞனும் ஸர்வமும் தானே யென்ற பரிபூர்ணனான எம்பெருமானுக்குச் சேதனன் ஆநுகூலியம் பண்ணுவதற்கிடமில்லை. இப்படி இவன் மனஞ் சோராமலிருப்பதற்காகவே பகவான் இவனுக்குகந்த திரவியத்தையே தன் திருமேனியாகக் கொள்ளு கிறான். இவன் திருமஞ்ஜனம் பண்ணினபோதே அமுது செய்கிறான். அல்லாதபோது பட்டினி கிடக்கிறான. இபபடி யில்லாவிட்டால பரிபூர்ண னிடத்தில் இவன செய்யக்கூடியது ஏதேனுமுண்டோ. இவருக்குப் பகவத் விஷயத்திலும் பாகவத விஷயத்திலும் ஆநுகூலியம் பிறந்தது. இந்த இரண்டாம் பத்தில் பாகவத விஷயத்தைச் சொல்லுகிறார்.

சேதனன் கண்படைத்ததற்கு மெய்யடியார்களுடைய கூட்டங்களைக் காணக்கூடுமாகில் அதே பிரயோஜனமாகும். அவர்களுடைய பாததூளி களிலே நாம் நனையப்பெற்றால் கங்கா ஜலத்திலே ஸ்நாநம் செய்யவேண்டு மென்ற ஆசையால் யாது பயனுமில்லை. ஆறுபோல் வரும் கண்ணீர் கொண்டு திருக்கோயிலின் முற்றத்தில் சேறு செய்யும் தொண்டர்களின் திருவடிகளால் துகையுண்ட அழகிய அந்தச் சேறு என் தலைக்கு ஆபரண மாய் விளங்கும். எம்பிரானுக்கு அடியார்களாய் நாத்தழும்பேற நாரணா வென்றழைத்து உடம்பு தழும்பேறத்தொழுது ஏத்தி இன்படையும் தொண்டர்களின் திருவடிகளை என நெஞ்சம் ஏத்திவாழ்த்தும்.

. எம்பெருமானை இடைவிடாது மனக்கோயிலில் வைத்துப் போற்றுவதால் மெய் சிலிர்க்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களையே நினைத்து நினைத்து என் மனமும் மயிர்க்கூச்சலடையும்.

ஸர்வேசுவரனுடைய திருவடிகளிலே சிலாக்கியமான நாமமலர்களை ஸமர்ப்பிக்கும் பக்தியில்லாத பாபிகள் கடைத்தேறும்படி தேசமெங்கும் திரிந்து, குற்றமற்ற நல்வழியே போகும்படி தாங்கள் நடத்திக்காட்டி, அரங்கனுடைய திருவடிகளிலே பக்தி செய்யும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு என் நெஞ்சம் எப்பிறப்பிலும் அடிமை செய்யவேண்டுமென்று ஆசை

பரம்பொருளான அரங்கனைக் கிட்டவேண்டுமென்ற ஆசைமிகுந்து அவனை யணுகிக் கண்ணீர் ததும்ப நிற்பவருடைய திருவடிகளுக்கு என் மனம் ஒப்பற்ற பக்தி யடையா நின்றது.

கண்ணனைப் பக்தியுடன்போற்றி இருந்தவிடத்திலிராமல் எழுந்து, ஆடிப்பாடி, திரிந்து, அவனுடைய கோயிலில அவனைக் கண்டுகளித்து, பித்தேறித்திரியும் தொண்டர்களுடைய ஐசுவரியத்தைக் கண்டு என்மனமும் பித்தேறிற்று.

பித்தரிடத்தில் நீரும் பித்துப் பிடித்தீரேனென்றால், இரு கண்களினின்றும் ஆனந்த நீர் மழைத் தாரைபோல் இடைவிடாதே சொரிய, சரீரம் மயிர்க்கூச்செறிய, அவனை நினைத்து ஏங்கி இளைத்து, அசைவற்று நின்று, தலைவணங்கி, 'ஆடிப்பாடி, 'என் அப்பா, என் நாதா, அரங்கா' வென்னும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அடியாராகி, அவர்களுடைய விஷயத்தில் பித்தேறித் திரிகிறவா பித்தரல்லா. அவனுடைய அடியாரிடத்தில பக்தி பண்ணாதாரெல்லாரும பித்தரே.

மூன்றாந் திருமொழியான மெய்யில் வாழ்க்கையில், எம்பெருமானிடத்தில் பக்தி செய்யாமலும் அவனடியாரிடத்தில் தொண்டு புரியாமலுமிருக்கும் பாமரருடன் எனக்குச் சேர்க்கைவேண்டா மென்று பிரார்த்திக்கிறார்.

1. பொய்யான இவ்வுலக ஸுகத்தை மெய்யென்று கொள்ளும் இவ்வுலகத்தாரோடு நான் சேருவதில்லை. அழகிய மணவாளனிடத்தில் பித்தேறி நின்றேன்.

2—3. மங்கையரிடத்தில் வைத்த சிந்தையை விலக்கமுடியாத உலகத்தாருடன் நான் கூடுவதில்லை. திருமாலின் திருநாமங்களைச் சொல்லிக் கூவியழைத்து, அவனிடத்தில் பித்தேறி நின்றேன்.

4. சோற்றையும் துணியையும் விரும்பிக் கண்டவர்களின் காலில் விழும் இவ்வுலகத்தோடு நான் கூடுவதில்லை. கண்ணனிடத்தில் பித்துப் பிடித்து நின்றேன்.

* 5. குற்றமற்ற ஸன்மார்க்க மிருக்க, அல்பமான பயன்களை விரும்பி, அதிலேயே இழியுமவர்களுடன் நான் கூடுவதில்லை.

6. என்னைப் போல் அடிமைசெய்ய இணங்காதவருடன் நான் மாட்டேன். ஸ்வர்க்கலோக ஸுகங்களையும் ஒரு பொருளாக நினைக்க மாட்டேன்.

7. எவ்விதமான பொருள்கள் கிடைக்குமென் றிருந்தாலும் பாகவத ரல்லாதாருடன் கூடும் மனதை ஸர்வேசுவரன் எனக்கு விலக்கினன்.

8. அநித்தியமான பலன்களை விரும்பும் அவர்களெல்லாம் நித்திய கைங்கரியத்தை விரும்பும் எனக்குப் பித்தராய்த் தோன்றுகிறார்கள். அவர்களுடன் கூடாத நானும் எல்லோராலும் பித்தனென்று பெயர் பெற்றேன். இவ்விஷயத்தை வளர்த்திப் பேசுவதால் என்ன பயன். கோபாலனென்று அழைக்கிறேன். அவனிடத்திலே மையல் கொண்டேன்.

நான்காம் திருமொழியில், இவருக்குப்பகவானுடைய ஞானமும்மற்ற விஷயங்களில் வெறுப்பும் அவனுடைய கல்யாண குணங்களை யநுபவிக்க வேண்டு மென்ற ருசியும், அவை எங்கே பூர்ணமாய அநுபவிக்கமுடியுமோ அவ்விடத்தில் அநுபவிக்கவேண்டு மென்ற ஆசையும் அடியார்களுடைய கூட்டத்தில் இவை கைகூடுமென்ற முடிவும் பிறந்தன. இப்படியும் பகவானுடைய அநுபவமும் ஸல்லாபமும் கிடைக்கவில்லை. ஆகையால் இதற்கு அவனுடைய எல்லையற்ற கருணையைக் குற்றஞ் சொல்வதற்கில்லை. இந்தச் சரீரம் இருக்கும்வரையில் அவ்வநுபவம் கிட்டாது. அது போனபிறகு அநுபவிக்கலா மென்ற முடிவையும் நினைக்கப் பொறாமல், பெரிய பெருமாள் தாமே ஸம்ஸார ஸம்பந்தத்தை யறுத்து அடிமை கொண்டு சேதனர்களைக் கடைத் தேற்றுவதற்குத் திருமலையில் திருவேங்கட முடையானும் வந்திருப்பதையும் அவனுடைய திருவடிகளில் விழுந்து பக்திக்கு விரோதிகளில் தனக்கு இருக்கும் வெறுப்பையும் கைங்கரியத்தில் ருசியையும் வெளியிடுகிறார்.

1. எம்பெருமானுடைய விஷயத்தில் கைங்கரியம் பண்ணுவதைத் தவிர, கேவலம் தேஹக் கொழுப்பை வளர்க்கும் அநித்யமான செல்வத்துடன் கூடின இப் பிறவி எனக்கு வேண்டாம். திருமலையில் திருக்கோனேரியில் வாழும் நாரையாய்ப் பிறப்பது சிலாக்கியம்.

2. இவ்வுலகத்துப் போகங்களின் மாத்திரமல்ல, ஸ்வர்க்கத்தில் தேவர்கள் அனுபவிக்கும் போகங்களையும் அதிகாரத்தையும் செல்வத்தையும் இவ்வுலகத்தில் கிடைக்கும் ஸகல மஹிமையையும் வேண்டேன். திருமலையின் சுனைகளில் ஓர் மீனாகப் பிறக்கக்கடவேன்.

3. இப்படி மனுஷ்ய ஜன்மம் வேண்டாவிட்டாலும் வேங்கடவனுடைய பொன் வட்டிலைப் பிடித்துக்கொண்டு அவருடைய திருத்தம்பலத்தை ஏந்துவதற்குக் கர்பக் கிருஹத்திலே அவருடன் புகுந்து அருகில் நிற்கும் பாக்யத்தைப் பெறக்கடவேன்.

4. இதுவும் ஸரியல்ல. மனுஷ்ய சரீரம் அரசன் வரையில் பொதுவாகையாலே அதுவும் வேண்டாம். திருமலையில் இருக்கும் ஏதாவது ஓர் செண்பக மரமாய்ப் பிறக்கும் பாக்கியத்தை யடையக் கடவேன்.

5. செண்பகமானால் பரிமளத்திற்காக உள்ளே கொண்டு புகுவார்களென்ற ஒரு ப்ரயோஜனத்தை விரும்பினதாகும். அப்படி ஒன்றுமில்லாத வெறும் தூணாயாவது நிற்கும் தவத்தைச் செய்யக்கடவேன். மதம் பிடித்த யானையின் மீதிருந்து ராஜாதி ராஜனென்ற பெருமை விளங்க ஸகல போகங்களையும் புஜிக்கத்தக்க செல்வத்தையும் இந்த ராஜ்யாதிகாரத்தையும் விரும்புகிறவனல்ல.

6. ஒரு நாளுண்டாய ஒருநாள் அழிந்துபோகும் தூணாயிருப்பது நன்றல்ல. எந்நாளும் அவனுடன் கூடவிருக்கும் பாக்கியத்தைப் பெற்ற பொன்மலையா யிருக்கும் தன்மையை அடையக்கடவேன். இந்திர லோகத்தில் தேவமாதரின் ஆடல் பாடல்களும் ஸரஸ ஸல்லாபங்களும் எனக்கு வேண்டாம்.

7. அப்படியானால் ஏறக் கூடியவர் அனுபவித்து ஏறமுடியாதவர் இகழ்வார். அப்படி யில்லாமல் எல்லோருக்கும் அனுபவிப்பதற்கு எளிதான கானாறாய்ப் பாயக்கடவேன். வெண்குடை நீழலிருந்து இப் பூமண்டலத்தை ஒருவனுய் ஆளும் அதிகாரமும் எனக்கு வேண்டாம்.

8. இதுவும் ஸரியல்ல. தாஹமெடுத்தவர்க்கு மாத்திரம் கானாறு வேண்டும். அப்படியின்றி திருமலைக்குப் போவதற்கு இன்றியமையாதபடி ஸ்ரீவைஷ்ணவர்களின் பாததூளிபடும் பாக்கியத்தைப் பெற்ற வழியாகக் கிடக்கும் தன்மையை அடைவேனாக.

9. இதுவும் ஸரியல்ல. அவ்வழியால் வருகிறவர்கள் எல்லோரும் திருக்கோயிலில் புகுவார்களென்று நிச்சயமுண்டோ. ஆகையால் அடியாரும் தேவர்களும் அப்ஸரஸ்களும் கட்டிப புகும்பொழுது மிதித்துக் கொண்டு போக வேண்டிய கோயில் வாசற்படியாய்க் கிடந்து, தேவரீர் எழுந்தருளும்

போதும் திரும்பும்போதும் பவளம் போன்ற திருஅதரத்தைக் கண்டு களிக்கும் பாக்கியத்தைப் பெறக் கடவேன்.

10. இப்படி உலகத்தார் சொல்வதுண்டு. எதுவும் கிடைக்கும் வரையில் வேண்டாமென்று தள்ளிப் பேசுவதும் கிடைத்துவிட்டால் மேல் விழுந்து அநுபவிப்பதும் உலக வழக்கமன்றோ. நீரும் அப்படியே என வேண்டாம். இந்தப் பிரம்மாண்டத்திலடங்கிய உலகங்கள் அனைத்தையும் ஓர் குடை நிழலின் கீழ் அரசு செலுத்தி அவைகளிலுள்ள ஸகல போக போக்கியங்களையும் ஒரே காலத்தில் அநுபவிக்கப் பெற்றாலும், என்னபயன்? திருவேங்கடமுடையானுடைய திருமலைமேல் ஏதாவது ஓர் பதார்த்தமாய்ப் பிறக்கக் கிடைப்பதாலுண்டாகும் ஆனந்தத்திற்கு ஈடில்லை.

ஐந்தாம்திருமொழி—: தரு துயரமென்றதில் இவ்வாழ்வாருக்குப் பகவத் விஷயத்தில் ஊற்றமும் அதன் விரோதிகளிடத்தில் வெறுப்பும் பாகவத கைங்கரியம் வரையில பரிபக்வமும் கிடைத்திருந்தும், அது அப்பொழுதே தனக்குப்பலனைக் கொடுக்கக் காணுததால் "இது நான் எனது என்ற வாஸனையை இன்னும் விடாததால் வந்த" தென்று முடிவு செய்து, 'ஸர்வ சக்தனும் ஸர்வக்ஞனுமான அவனே எனக்குருசியைப் பிறப்பித்தவன்; இடர்களை நீக்குகிறவன்; பலத்தைக் கொடுக்கிறவ' னென்று துணிவடைந்தார். 'எனக்கு நானுமில்லை, பிறருமில்லை. பலததை அடையவிருப்பம் மேலிட்டு இப்படித் துடிக்கிறேனே யல்லாது அதற்கு வேண்டிய உபாயங்களைக் கைப்பற்றும் தன்மையுமில்லை. வேறு கதியற்றவன். நீயே எனக்கு யாவு' மென்ற பரம சரணாகதி நிலைமையை விண்ணப்பஞ் செய்கிறார்.

1. 'வித்துவக் கோட்டிலெழுந் தருளியிருக்கும் ஸர்வேசுவரனே! என் துயரத்தை நீயே பிறப்பித்தாய், நீயே போக்கக் கடவாய், உன் திருவடிகளே தஞ்சம், வேறு உபாய மறியேன்; என்னை யீன்ற அன்னை கடுங் கோபங் கொண்டு தள்ளிவிட்டாலும் அவளுடைய பூர்வப்ரேமையை நினைத்து அழும் குழந்தை அவளுடைய காலைக் கட்டுவதுபோல் உன்னை விட்டு எங்கே போவேன.

2. தன் கணவன் பிறர் பார்த்து நிந்திக்கத்தக்க காரியங்களைத் தனக்குச் செய்தாலும், அவனைத் தவிற வேறு யாரையும் மனதால் பதிவிரதை நினைப்பாளோ. அப்படியே நீ என்னை அடிமை கொள்ளா விட்டாலும் உன் திருவடிகளையே போற்றுவேன்.

3. நீ என்னிடத்தில் அருள் புரியாவிட்டாலும் உன்னையே தஞ்சமாகப் பற்றுவேனல்லாது வேறொருவரைக் கண்ணெடுத்துப் பார்ப்பேனோ. அரசன் குடிகளை ரக்ஷிக்காமல் எப்படிப்பட்ட கொடிய துன்பங்களைச் செய்

தானும் அவனுடைய கட்டளையைப் பின்சென்று வாழும் பிரஜைகளைப்போல் நானுமல்லவோ.

4. கத்தியால் அறுத்து சூட்டுக் காய்ச்சிச்சுடும் வைத்தியனிடத்தில் நோயாளி கோபங் கொள்வானோ, வெறுப்பானோ? நீ மாயையால் ஒரு நாளும் நீங்காத துக்கத்தை விளைவித்தாலும் நான் உனக்கடிமை செய்வதற்காக உன் அருளையே வேண்டுவேன்.

5. நாலு திக்கிலும் போய்ப் பார்த்துக் கரை காணமல் மீண்டும் கடலிலே வரும் கப்பலின் பாய்மரத்தில் ஏறியிருக்கும் பறவையின் தன்மை எனதென்றறி.

6. சூரியன் தன் கிரணங்களால் தாங்க முடியாத உபத்திரவத்தைச் செய்தாலும் தாமரை மலர்வதற்கு அதையே எதிர் பார்த்துக் கொண்டிருப்பதுபோல என் குரூரமான துக்கத்தை நீ போக்கா விட்டாலும் உன் அனந்தகல்யாண குணங்களிலேயே என் மனம் ஈடுபடுகிறது.

7. பயிர்களை மேகம் மறந்து வருத்தும் காலத்திலும் அவைகளையே எதிர்பார்த்த வண்ணமாய் இருக்குமல்லாது, வேறு எதையாவது அடைவதைக் கேட்டதுண்டோ. அப்படியே நானும் உன் திருவடிகளை விட்டு அகலுவதில்லை.

8. நதிகளெல்லாம் திரண்டு பார்த்த விடமெல்லாம் பரந்து ஓடிக் கடலில் விழுமே யல்லாது வேறிடத்தில் சிறகுமோ. அப்படியே எனக்கும் உன் குணங்களைத் தவிர வேறு புகலிடமில்லையென்றறி.

9. உன்னையே வேண்டி ஓயாற்ற ஐசுவரியத்தை ஒருவன் விரும்பாமல் அதைத் துரும்பாய் நினைத்தால், அது தானே மேல் விழுந்து அவனைத் தழுவும். அப்படியே உன் மாயையால் என்னை நீ உபேக்ஷை செய்தாலும் அடியேன உன்னையே விரும்பி யிருப்பேன.

ஆறும் திருமொழி:—(ஏர் மலர்.) இது வரையில் எம்பெருமான் உகந்தருளின தேசத்தைப் பாடி அனுபவித்தார். அந்த ஞாபகத்தால் அவதாரங்களை அனுபவிக்க ஆசையுண்டாய், இப்பாசுரத்தில ஆழ்வார் பிராட்டியாருடைய தன்மையை அடைந்து, கோகுலத்தில முன்னிருந்த கோபியர் கண்ணனைக் கூடுவது பிரிவது ஊடுவது முதலியவைகளை அனுபவித்து வர்ணிக்கிறார்.

நம்மாழ்வாருக்கு 'மின்னிடைமடவாரெ'ன்ற பாசுரமெப்படியோ, திருமங்கையாழ்வாருக்கு 'சாதில்கடிப்' பென்றபாசுரம் எப்படியோ அப்படி இவ்வாழ்வாருக்கு இந்தத் திருமொழியாகும். நம்மாழ்வார் பகவானிடத்தில் வைத்த ஊற்றம் யாவும் அதில் தோன்றிற்று. திருமங்கையாழ்வார் தனதுவாக்கின் அருமை பெருமை இனிமை முதலிய யாவும் தோன்றும்படி 'காதில் கடிப்பை'யருளிச் செய்தார். இத்திருமொழியில் இவர் தன் ராஜ

குல மெல்லாம் தோன்றியிருக்கும்படி பாடுகிறார். ஐந்து லக்ஷம் கோபியர்களுக்குக் கண்ணனிடத்திலுள்ள ஆசையெல்லாம் இவர் ஒருவர்க்கே உளதால் அந்த ஆயர்மாதரின் பேச்சாலே பேசுகிறார்.

ஏழாந்திருமொழி— (ஆலை நீள்கரும்பு) பிராட்டியையும் கோபிமாரையும் போல் எல்லா சேதனர்களுக்கும் பகவானுடைய குணானுபவம் ஸ்வாதீனமாயிருக்க, அதை இதுவரையில் இழந்தோமேயென்ற துக்கம் இவ்வாழ்வாருக்கு மேலிட்டது. கண்ணன் தனக்குக் குழந்தையாய்ப் பிறந்தும், அவனை எடுத்து வளர்த்து அவனுடைய பாலலீலைகளை அனுபவிக்கப் பெறாமல் கம்ஸனைக் கொன்ற பிறகு தங்களுடைய முகத்திலே விழித்த கோபாலனைக் கண்டவுடன் தேவகி பிராட்டி அந்தக் குறைகளைச் சொல்லி வருந்துவதை அடியாகக் கொண்டு இவ்வாழ்வார் துக்கிக்கிறார்.

எட்டாந் திருமொழி:— (மன்னுபுகழ்) மேற்சொன்ன தேவகிப்பிராட்டியைப் போல் அல்லாமல், சக்கரவர்த்தி திருமகனுடைய திருத்தாயாரான ஸ்ரீகௌஸல்யார் ராமசந்திரனைப் பெற்று வளர்த்துக் கொண்டிச் சீராட்டித் தாலாட்டும் பாக்கியத்தைப் பெற்றதைத் தான் பெற்றதாக நினைத்து இப்பத்தால் அனுபவிக்கிறார். இதில் ராமஜனனம் (1), தாடகாவதம் விசுவாமித்திரயாக ரக்ஷணம் (2), ஸீதாவிவாஹம் (3&4), கைகேயியின் சொல்லால் வனவாஸம் செய்தது (566), ஸுக்ரீவனுக்கருள் செய்தது, வாலிவதம் (7), ஸேது பந்தம் (8), ராவணவதம் (9), ராஜ்யாபிஷேகம் (10) என்ற ஸ்ரீமத்ராமாயண ஸாரமான இந்த திருத்தாலாட்டு திருக்கண்ணபுரத்தில் விளங்கும் காகுஸ்தனைப் பாடினதாகும்.

ஒன்பதாந் திருமொழி— (வன்றுளினினை). சக்கரவர்த்தி திருமகன் பிறந்தது முதல் யௌவனம் வரையில் செய்த பாலலீலைகளை யெல்லாம் அனுபவித்த சக்கரவர்த்தி, அதற்குப் பிறகு அதை இழந்ததை அவருடைய பாசுரத்தாலே சொல்லித் தானும் வருந்துகிறார் (1) சூரியவம்சத்தை விளங்கச் செய்வாயென்று நம்பியிருந்த உன்னைக் கைகேயியின் சொல்லைக் கேட்டு வனத்திற் கனுப்பி உனக்கு வெகு அழகாய்ப் பட்டாபிஷேகஞ் செய்வித்தேன். (2) யாவற்றையும் துறந்து ஸந்தோஷமாய் வனத்திற்கு நீ எப்படி நடந்து போனாயோ (3) மெல்லணை மேல் பள்ளிகொள்ளப் பயின்ற நீ கல்லணைமேல் கண்துயிலக் கற்றனையோ (4) என் மனமுருக்கும் மகனே! நீ போக என்நெஞ்சம் இருபிளவாய்ப் போகாதே நிற்பதேன், (5) மெல்லடிகள் இரத்தம் பெருக வெயில் உறைப்ப பசி வருத்த, நீ வனம் போவதை அரும்பாவியான நான் பார்த்திருந்தும் தடுக்க முடியாமல் தவிக்கிறேன் (6) உன் வடிவழகையும் இனிய மொழியையும் இழந்து என்னைத் தழுவி உச்சிமுகரும் பாக்கியம் அற்று, இன்னும் இந்தப் பாழும் உயிர் போகாமலிருக்கிறதே. (7) இன்று நான் செல்லவேண்டிய வனத்திற்கு என் மகன்

செல்வதும், அவனிருக்க வேண்டிய சிங்காதனத்தில் நானிருப்பதும் அழகோ ? வசிஷ்டரே ! ஸுமந்திரரே ! சொல்லீர். (8) பாவி, கைகேயி ! குலத்திற்கு மூத்த புத்திரனை வனத்திற்குத் துரத்திவிட்டு, என்னுயிரை யும் கொள்ளைகொண்டு, உன் மகனையும் நிரப்பழிக்கு ஆளாக்கி, இம்மையிலும் மறுமையிலும் என்ன லாபத்தை அடைந்தாய் (9) என் மகனே ! என்னையும் என்னுயிரையும் உன்னுடன் கொண்டுபோய்விட்டாய். ஆயினும், இனி எப்பிறப்பிலும் உன்னையே மகனாகப் பெறக்கடவேன். (10) நீ மாநகரைத் துறந்து கானகம் புகுந்தபிறகு நானும் வானகமே போகின்றேன்.

பத்தாந் திருமொழி— (அங்கணெடுமதிள்) இது தில்லை நகர் திருச் சித்திர கூடத்தில் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானைத் தொல்லிராமனாய்ப் பாடினது.

இங்கே சக்கிரவர்த்தி திருமகன் திருவயோத்தியில் அவதரித்ததும் (1) தாடகையை அழித்ததும், விசுவாமித்ர ரிஷியின யாகத்தை ரக்ஷித்ததும் (2), பரமசிவனுடைய வில்லை முறித்தது ஸீதையை மணம் புரிந்ததும் (3) அயோத்தியில் வாழ்ந்து கைகேயியின் சொல்லால வனஞ் சென்றதும், குக னைச் சந்தித்ததும், பரதனுக்குப் பாதுகை ஈந்ததும், சித்திரகூடஞ் சென்ற தும் (4), விராதனைக் கொன்று அகஸ்தியரிடத்தில வில்லைப் பெற்று, சூர்ப்பநகையின் மூக்கை யறுத்துக், கரதூஷணாதிகளை யழித்து, மாரீச னுடைய உயிரைப் போக்கினதும (5), ஜடாயுவை வைகுந்த மேற்றிச், சுக் கிரீவனுடன் தோழமைபூண்டு, வாலியைக் கொன்று, மாருதியை யனுப்பி இலங்கையைச் சுடுவித்ததும் (6), கடலிலணை கட்டி, அரக்கருடன் கடும் போர்புரிந்து, விபீஷணனுக்கு அரசளித்துத், திருமகளை மீட்டதும் (7). அயோத்திக்கேகி அபிஷேகம் பெற்று அரசாண்டு, அகத்தியரால் பழைய கதைகளைக் கேட்டு, லோகாபவாதத்திற்காக ஸீதையை வனத்திற் கனுப்பி, அவளுக்கு அங்கே பிறந்த புதல்வரால தன் சரித்திரத்தைக் கேட்டதும் (8), தவஞ்செய்த சம்பூகனைக் கொன்று, அந்தணனுடைய மகனை உயிர் மீட்டு, அகத்தியா ஈந்த ஆபரணத்தைப் பெற்றுச், சத்துருக்கனால லவண சுரனை யழித்து, துர்வாஸமுனியின கட்டளையால இலக்குமணனைத் தன க்கு முன்போக அனுப்பினதும் (9), அயோத்தியிலுள்ள சராசரங்களை வைகுந்த மேற்றி, தான அவதரித்த காரியத்தை முடித்துத், தேவர் எதிர் கொண்டு வர மூவர் போற்ற தன்னடிச சோதிக்கு எழுந்தருளினது (10) மான ஸ்ரீமத ராமாயண ஸம்க்ஷேபம் பிரதிதினமும் பாராயணம் செய்யத் தகுந்ததே.

இந்த நாலாயிரத்தில் குலசேகராழ்வாரின் பாசுரங்கள் மிக்க இனி மையும் மனமுருக்கும தன்மையும் பொருந்தினவை யாகையால் அடியாரால் அடிக்கடி அனுஸந்தானம பண்ணப் பெறும.

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்.

# தொண்டரடிப் பொடியாழ்வார் வைபவம்

சோழநாட்டுத் திருப்பதிகள் 40—ல் ஒன்றான புள்ளம் பூதங் குடிக் கருகிலுள்ள திருமண்டங்குடியில் இவ்வாழ்வார் வைஜயந்தி யென்ற வன மாலையின் அம்சமாய் கலியுகம் 289 ஆவதான பிரபவஸு மார்கழிமீ கிருஷ்ண பக்ஷம் சதுர்த்தசி செவ்வாய்க் கிழமை கேட்டை நக்ஷத்திரத்தில் வேதவிசாரதரென்ற முன் குடுமி சோழிய பிராம்மணருக்குப் புத்திரராய் அவதரித்தருளினர். திருநாராயணனுடைய அருளால் பிறந்ததே காரண மாய் இவருக்கு விப்ரநாராயண ரென்று திருநாமம் சாததப்பட்டது.

தகுந்த காலததில் உபநயனம் செய்யப்பட்டு வேதசாஸ்திரங்களை முறைப்படி கற்று மிகவும் விரக்தராய்ப் பண்டித பாமரர்களால் ஆதரிக்கப் பட்டு விளங்குங்காலையில், திருவரங்கச் செல்வனிடத்தில் மனம் நாடி அங்கே சென்று அவருக்கு நித்ய கைங்கரியம் செய்யவேண்டு மென்ற ஆசை கொண்டு, பெற்றோரிடத்தில் வெகு சிரமப்பட்டு அனுமதிபெற்று, பெரிய கோயிலுக்கு வந்தார். ரங்கநாதனை ஸேவித்து, அவனுடைய வடிவழகில் ஈடு பட்டு, இவனுக்குகந்த கைங்கரியம் எதைச்செய்வோ மென்று ஆலோசித்து நிற்க, கண்ணனுக்கு மாலை சூட்டின மாலாகாரனைப் போலும், திருமாலுக்குத் தாமரை கொடுத்த கஜேந்திரனைபபோலும், நறுமலர்மாலையும் பாமாலையும் சாத்தின பெரியாழ்வாரைப் போலும், தானும் மாலாகைங்கரியம் நம்பெருமா ளுக்குச் செய்யவேண்டு மென்று அரங்கனுடைய நியமனததால் புத்தியில் தோன்றிற்று.

அப்படியே ஒரு திருநநதவனத்தைச் செழிப்பாக அமைத்து, திருத் துழாயையும் பலவகைப் புஷ்பங்களையும் வளர்த்து, விண்ணுலகத்தோரும் கண்டு திகைக்கும்படியாய் அதைச செழிக்கச்செய்து நாள்தோறும், "தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து, தோன்றிய தோள் தொண்டரடிப் பொடி" யென்று கீர்த்திவாய்ந்தபடி பாமாலையுடன் பூமாலையையும் தென்திசை இலங்கை நோக்கிப் பள்ளிகொண்டுள்ள பெரிய பெருமாளுக்கு ஸமர்ப்பித்து வந்தார். அநத நந்தவனத்திலேயே ஓர் குடி சையில் பிரம்மசாரியாய் ஆசார நியமத்துடன் காலங்கழித்து, எப்பொழு தும் அவனுடைய நாம ஸங்கீர்த்தனம் செய்து கொண்டிருந்தார்.

ஒருநாள் திருவரங்கத்திற்கு வடக்கிலுள்ள திருக்காம்பனூரென்ற உத்தமர்கோயிலைச் சேர்ந்த ஓர் தாஸி பரிவாரத்துடன் உறையூருக்குப்

பேசப், அங்கே அரசு செலுத்திவரும் சோழனது வைபவில் ஆடிப்பாடி, அரிய பரிசுகளைப் பெற்றுத் திரும்பிவருங்கால் இந்த நந்தவனத்தருகில் இளைப்பாறுவதற்காகத் தங்கினள். அந்தத் தோட்டத்தின் செழிப்பையும் அழகையும் கண்ணுற்று, எல்லோரும் உள்ளே சென்று, சுற்றிப் பார்த்துக் கொண்டு வருகையில், திருமாலை கைங்கரியஞ் செய்யும் தொண்டரடிப் பொடியைக் கண்டார்கள். தேவதேவி யென்ற அந்த தாஸியின் தமக்கை அவளைப் பார்த்து "இந்த மஹானுடைய சீலத்தையும் ஒழுக்கத்தையும் வைராக்கியத்தையும் கவனித்தாயா? இப்படிப் பகவத கைங்கரியததில் ஈடுபட்டுத் தன்னையும் உலகத்தையும் மறந்திருக்கும புண்ய புருஷர்கள் மிகவும் அரிது. இவருடைய மனவுறுதியை இப்பிரபஞ்சம் ஒன்று சேர்ந்தாலும் கலக்க முடியா" தென்றாள்.

அழகிலும சாதுரியத்திலும் ஆடல் பாடல்களிலும் லோகாநுபவத்திலும் ஒப்பறறவ ளென்று கர்வங்கொண்ட தேவதேவி, "இன்றை முதல் ஆறு மாதங்களுக்குள் இவனை என் வசப்படுத்தி எப்படி வேண்டுமானாலும் ஆட்டிவைப்பே" னென்று அவளுடன் பந்தயமிட்டுத், தோற்றவர் அடிமை வேலை ஆறுமாதம் செய்யவேண்டுமென்று ஏற்படுத்திக் கொண்டார்கள். பிறகு தேவதேவி எல்லோரையும் அனுப்பிவிட்டு, காவிச்சேலை தரித்து ஆழ்வாரிடததில் வந்து அடிபணிநது, "ஸ்வாமி! அடியேன் பூர்வ ஜன்ம பாபததால் இக்குலத்தில் பிறந்துவிட்டேன். அதற்குரிய பாபங்களைச் செய்யும்படி என் தாய் முதலியவர் வருத்துகிறார்கள். அவர்களிடத்திலிருந்து தப்பி ஓடிவந்துவிட்டேன். தேவரீரைப்போல் அடியேனும் எம் பெருமானுக்கு என்னாலியன்ற ஊழியம் செய்வதையே வேண்டித், தேவரீருடைய திருவடிகளையே தஞ்சமென நாடனேன். என்னைக் காத்தருள வேண்டு"மென்று வணக்கததுடன் கண்ணுங் கண்ணீருமாய்க் கதறியழுதாள். கபடமே யறியாத ஆழ்வார் அதை நம்பி, அவளுக்கு அத்தோட்டத்தில் இடங் கொடுத்துத், தான் பிக்ஷை யெடுத்துண்ட அன்ன சேஷத்தை அவளுக்களித்து, நந்தவன கைங்கரியத்தில் அவளை ஏவினார்.

இப்படிச் சில மாதங்கள் கழிநதபிறகு, ஒரு நாள், பெருங் காற்றும் மழையும் இருளும் இடியும் மினனலும் கலந்து, திக்குத் திசை தெரியாமல் அடிக்கும்பொழுது, நனைந்து குளிரால் நடுங்கி வாடும் அப்பெண்ணை ஆழ்வார் கண்ணுற்று, இயற்கையான கருணைமேலிட்டுக், குடிசையில் வரத் தங்கச் செய்து, உலர்ந்த வஸ்திரத்தைக் கொடுத்தார். அந்தச் சமயத்தை எதிர்பார்த்திருந்த அவ்வேசி பார்வையாலும் பேச்சாலும் வெகு சாதுரியமாய் அவரை மயக்கித் தன் வசப்படுத்தி, அவருடைய ஸ்வரூபத்தையே அழித்து, நந்தவனம் கைங்கரியம் ஆசாரம் ஒழுக்கம் நித்யகர்மம் கோயில் ஸந்நிதி யாவற்றையும் மறக்கச்செய்து, தான் கெடுவிட்ட காலத்திற்குள்

அந்த ஏழைப் பார்ப்பனைத் தன் மனம்போனபடியெல்லாம் ஆட்டிவைத்துத், திடீரென்று அவரை விட்டுப் பிரிந்து தன்னகத்திற்குச் சென்றாள். ஒரு கணமேனும் அவளை விட்டுப் பிரிந்தால் உயிர் தரிக்கப் பொறாத இவர் அவளுக்காகத் தேடியலைந்து முடிவில் அவளுடைய வீட்டைக் கண்டு பிடித்துச் சென்று, அங்குள்ளவர்களால் பல விதமாய் அவமதிக்கப்பட்டும், அதை லக்ஷியஞ்செய்யாமல் அவளுடைய வீட்டுவாசலிலேயே உறங்கிக் கிடந்தார்.

அப்பொழுது ரங்கநாதன் தன் பூஜாபாத்திரங்களில் ஒரு தங்கவட்டிலை எடுத்துக்கொண்டு, தேவதேவியின் வீட்டிற்குச் சென்று, பாதிராத்ரியில் கதவை யிடித்தார். 'யாரெ'ன்று அவள் கேட்க, "நான் அழகிய மணவாளதாஸன் விப்ரநாராயணன் என்னை உன்னிடத்திற்கு அனுப்பினு" னென்றார். தேவதேவி வியப்படைந்து கதவைத்திறந்து, "நீர் வந்த காரியமென்ன ?" வென்று வினவத், திருவரங்க முடையான் தான் கொண்டுவந்த தங்கவட்டிலை அவளிடத்திற் கொடுத்து, "இதை உனக்கு அனுப்பி யிருக்கிறா"ரென்று சொன்னவுடன் அந்த தாஸி முகமலர்ந்து ஆத்திரத்துடன் "அவரை தாராளமாய் வரச்சொல்லு" மென்றாள். நம்பெருமாள் ஆழ்வாரிடத்திற்கு வந்து "தேவதேவி உம்மை அழைக்கிறா"ளென, அவ்வந்தணர் ஸஞ்ஜீவியைப் போன்ற அந்தச் சொற்கள் காதில விழுந்தவுடன் உள்ளங் குளிர்ந்து, அகமகிழ்ந்து, உடல் பூரிதது ஓடோடியும் வந்து, உள்ளே புகுந்து, நெடுநாளாய்ப் பிரிந்த துயரத்தை ஸுகானுபவத்தில் மறந்தார்.

மறுநாட்காலையில் பெருமாள் ஸந்நிதியில் கைங்கரியம் செய்பவர்கள் பாத்திரங்களைக் கணக்கிடுகையில் பெரிய தங்கவட்டிலைக் காணாமல் தேடித் தேடி அலுத்து அதிகாரிகளுக்கறிவித்தார்கள். அவர் களவைக்கண்டு பிடிப்பதற்காகப் பரிசாரகர் அர்ச்சகர் வேலையாட்கள் முதலியவர்களைப் பல விதமாய்த் தண்டித்தும் ஒன்றும் வெளியாகவில்லை. அப்பொழுது தேவதேவியின் வீட்டு வெள்ளாட்டி ஒருத்தி அவ்வழியாய்ச் சென்று, அங்கே தன் ஆசை நாயகன் கட்டி யடிக்கப்படுவதைக் கண்டு, அதிகாரிகளிடத்தில் "குற்றமற்ற இவரைப் பலவிதமாய் வருத்துவதால் பயனென்ன ? நீங்கள் தேடும் பொற்கலம் என் யஜமானியான தேவதேவியின் படுக்கையில் தலையணையின் கீழிருப்பதைக் கண்டேன்" என்றாள். உடனே சேவகர்கள் அந்தத் தாஸி வீட்டைப் பரிசோதித்து, வட்டிலைக் கண்டெடுத்து, அவளையும் அங்குள்ள மற்றவரையும் கைது செய்து, அரசனுக் கெதிரே கொண்டு போய் நிறுத்தினார்கள். அவன் அந்த விலைமாதை நோக்கி "எம்பெருமானுடைய கைங்கரியத்திற்காக வைக்கப்பட்டிருக்கும் பாத்திரத்தை ஏன் திருடினாய்?" என்றதட்டினான். அவள் தலைவணங்கி "மஹாராஜ ! நான் அதைத் திருடவில்லை. நேற்றிரவில் யாரோ முன்பின் பாராத ஒருவன்

அழகிய மணவாளதாஸனென்று பெயரிட்டுக் கொண்டு இந்தத் தங்க வட்டிலைத் தன் யஜமானனுன விப்ரநாராயணன் எனக்கு அனுப்பினதாய்க் கொடுத்தான். இதைத் தவிற எனக்கு வேறொன்றும் தெரியா"தென்ருள். வேந்தன் ஆழ்வாரைக் கொண்டுவரச் செய்து விசாரிக்கஅவர், "ஐயோ! நான் ஒரு பாவத்தையு மறியேனே! பிச்சைக்காரனுயப் பித்துப்பிடித்து அலையும் எனக்கு வேலைக்காரனு முண்டோ" வென அதைக் கேட்ட அரசன் ஒன்றுந் தோன்றாமல மயங்கித, திருட்டு ஸாமானை வாங்கினதற்காக தேவ தேவிக்கு அபராதம விதித்து, பொனனைத திருடின பார்பபானை எவ்விதமாய்த் தண்டிபப தென்று விசாரிததறியும வரையில ஆழ்வாரைச் சிறையி விட்டான்.

விப்ர நாராயணர் சிறைச்சாலையி லிருந்து பலவிதமான கஷ்டங்களை யனுபவித்துத, தான் ஆதியில் பரம விரக்தனுய் எமபெருமானுக்குக் கைங்கரியம் செய்வதைத் தவிற வேறொன்றையும அறியாதவனு யிருந்ததையும், பின்பு இந்திரியங்களுக்கு வசப்பட்டு அநதப பெரும்பாக்கியத்தை யிழந்து, மேன்குலம் ஒழுக்கம் சீலம் ஆசாரம யாவறறையும் போக்கடித்துக் கொண்டு, பாவிகளுக்கும வஞ்சகாகளுக்கும் தலைவனுய், முடிவில் எம்பெருமானுக்கே துரோஹஞ் செய்த குற்றஞ் சாட்டப்பட்டுச், சிறையி லிருபபதையும நினைதது நினைந்து, உலகவாழ்க்கையிலும் விஷய ஸுகங்களிலும் பொன்னிலும் மண்ணிலும பூவையிலும் வெறுபபடைந்து, மட்டில்லாத பசசாத் தாபமடைநது எமபெருமானைக் குறிததுக் கதறினர்.

கருணு நிதியான திருவரங்கச் செல்வன் அவருடைய கர்மநிலையைக் கவனித்து அவ்வனுபவம் முடிந்ததைக் கண்டு "இனி இவன் விஷய வலையில அகப்படான், என் கைங்கரியததிலிருந்து இவனுடைய மனோவாக்குக் காயங்கள் அகலுவதில்லை. இந்த ஒரு தோஷம், இவனிடத்திலிருந்து வரவர வளர்ந்து முடிவில் இவனைக் கெடுததுவிடாமல் இப்பொழுதே அதை வெளிப்படுத்திப, புண்ணைக் கீறியாற்றுவது போல், யௌவனம் பலம் அழகு புத்தி செல்வம் முதலியவை அநித்திய மென்றும், ஒவ்வொன்றுமே ஜீவனை அதோகதியைத் தள்ளுவதற்குப் போதுமென்றும், இவன் நன் குணர்ந்தா"னென்று முடிவுசெய்து, அரசனுடைய கனவில் தோன்றி "விப்ர நாராயணன் என் தங்கவட்டிலைத் திருடினவனல்ல; நானே அந்தண வேடம் பூண்டு அதைத் தேவதேவியிடத்தில கொண்டு போய்க்கொடுத்தேன். இவனுடைய தீய வினைகள் அனுபவித்துத் தீருவதற்காகவே இவன் மேல் அபாண்டமாய்க் குற்றஞ் சாட்டு விததேன். இந்த அனுபவத் தால் இவன் அறிந்து கொள்ள வேண்டிய ஞானத்தை ஸம்பாதித்தான். ஆகையால் இனி அவனைச் சிறைச்சாலையி லிருந்து விடுவிக்கக் கடவா" யென்று திருவாய் மலர்ந்தருளினர். உடனே அவ்வரசன் விழித்துக்

கொண்டு எம்பெருமானுடைய கட்டளைப்படி செய்து விப்ர நாராயணரை உபசரித்து அனுப்பிவிட்டான்.

தான் செய்த பாபங்கள் தொலைவதற்கும் எம்பெருமானுடைய கிருபைக்கு ஆளாவதற்கும் செய்யவேண்டிய பிராயச்சித்தம் என்னவென்று ஸ்ரீவைஷ்ணவர்களை விசாரிக்க, அவர்கள் பாகவதர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தமும் பாத தூளியுமே ஸமஸ்தபாபங்களுக்கும் பரிஹார மென்றார்கள். ஆழ்வார் அப்படியே அவைகளை ஸ்வீகரித்துப் பரிசுத்தரானார். பிறகு எம்பெருமான் அவருக்குத் தன் ஸ்வரூபத்தையும் மஹிமையையும் அனந்த கல்யாண குணங்களையும் காட்டிப் பரம ஞானத்தை யருளினார். அதினால் ஆழ்வார் ஒப்பற்ற மேன்மை அடைந்து, எம்பெருமானுக்கு அடிமை பூண்டு ஆட்செய்யும் அடியார்களின் பாததூளி என்தலைமே லென்று, தனக்குத் தொண்டரடிப் பொடி யென்ற திருநாமம் சாற்றப் பெற்றார். தன் அனுபவத்தை உலகத்தார் அறிந்து உய்யும்படி திருமாலை யென்ற நூலை இயற்றி திருப்பள்ளி யெழுச்சியால் அரங்கனுக்குகந்த கைங்கரியத்தையும் செய்தார். இதுவன்றி முன்போல் திருநந்தவன கைங்கரியத்தைப் பரம உபாயமாய்க் கைப்பற்றி தானுள்ளவரையில் நடத்தி 105 ஸம்வத்ஸரங்கள் ஸ்ரீரங்கத்திலேயே வாழ்ந்திருந்து முடிவில் பரமபதத்திற்குச் சென்று தன் அம்ச காரணமான வனமாலையில் கலந்தார்.

இவருடன் ஸம்பந்தம் பெற்ற தேவதேவியும் இவருடைய நிலையைக் கவனித்துத் தானும் கடைத்தேற ஆசைகொண்டு, தன் பொருளனைத்தையும் பெருமாளுக்கே ஸமர்ப்பித்துத் திருக்கோயிலில் தன்னாலியன்ற கைங்கரியத்தைக் குறைவற நடத்திக் கொண்டு முடிவில நற்கதியடைந்தாள்.

## திருமாலை.

இது தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச்செய்த முதலாவது பிரபந்தம். இதில் பாசுரங்கள் 45. இதற்குத் திருவரங்கப் பெருமாளரையர் அருளிச் செய்த தனியனும் பெரிய வாச்சான்பிள்ளையின் வியாக்யானமும் அதற்கு இரண்டு அரும்பத விளக்கமும் பதவுரையுமுண்டு.

நித்யஸூரிகளுடன் ஸமமாய் தமக்குண்டாயிருக்கும் பாக்யத்தை அறியாமல் வெகுகாலம் உலக வாழ்க்கையிலேயே உழன்ற இவ்வாழ்வாரைப் பெரிய பெருமாள் தன் திருநாம பிரபாவத்தைக்காட்டி யருளினார். அதைத் தாம் அனுபவித்து, மற்றவர்களும் அனுபவிக்க வேண்டுமென்ற ஆசையுடன் பெரிய பெருமாளையும் உகப்பித்து இந்த நூலைத்தலைக்கட்டுகிறார்.

ஸம்ஸாரிகளிடத்தில் அளவற்ற கருணைபுரியும் எம்பெருமான் மற்ற உபாயங்களை அனுஷ்டிப்பதற்கு அவர்களுக்குத் திறமையில்லை யென்பதைக்கண்டு பக்தி செய்வது கஷ்டமென்றும் ப்ரபத்திக்குவேண்டிய மஹா விச்வாஸம் சிலருக்குக் கிடைப்பது அரிதென்றும் இவைகளில் ப்ரவேசிக்க முடியாதவர்களுக்கு ஸர்வ ஸாதாரணமான பகவந் நாம ஸங்கீர்த்தனமே பரம ஸுலபமான உபாயமென்றும் உபதேசித்தார். அது ஜீவன்களுடைய பாபத்தைப் போக்கி, புண்யத்தைப் பெருக்கிக், கர்ம பக்தி ஞானயோகங்களிலே சேர்ப்பிக்கும், ப்ரபத்தியிலே கொண்டு போய்விடும். விரோதிகளைப் போக்கி ஈசனுடைய திருவடிகளை அடைவதற்குத் தானே உபாயமாகும். திருநாமத்தின் வைபவம் இத்தன்மையானது. இவ்வாழ்வார் இப்படிப்பட்ட திருநாமத்திலே இழிந்தவராகையாலே இப்ப்ரபந்தத்தில் அதின் வைபவத்தைக் கொண்டாடுகிறார்.

இங்கே, சொல்லுகிறவர் ஆழ்வார், கேட்பவர் பெரிய பெருமாள். அஜ்ஞானத்தில் ஆழ்ந்து உண்மையை யறியாமல் அதைப்பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டியவரல்ல. எல்லாமறிந்தவருக்கு இதைக் கேட்டாவதென்னவென்றால், ஆழ்வாருடைய வாயால் திருநாம வைபவத்தைச் சொல்லிக் கேட்பதாலுண்டான ப்ரீதியே காரணம்.

பகவத் விஷயத்தை உபதேசிக்கும் ச்ருதிகளையும் அவைகளின் தாத்பர்யத்தை விவரித்த ரிஷிகளையும் இதர ஆழ்வார்களையும் காட்டிலும் இவருக்கு விசேஷமுண்டு. வேதவாக்யங்கள், ஜகத்திற்கு உத்பத்தி ஸ்திதி லயமென்றவைகளுக்குக் காரணமான ஒரு வஸ்து உண்டென்று சொல்லி, அதைத் த்யானஞ் செய்யவேண்டு மென்று உபதேசித்து அந்தப்பரம் பொருளை நாராயணனென்று தலைக்கட்டினர். ரிஷிகளோ இதிஹாஸ புராணங்களால் திருவவதாரங்களைப் போற்றினார்கள். வால்மீகி பகவான் ராமாவதாரத்திலும், பராசர பகவான் கிருஷ்ணாவதாரத்திலும், சௌனக பகவான் அர்ச்சாவதாரத்திலும் ஆழ்ந்து கொண்டாடினர்கள். ஆழ்வார்களிலே முதலாழ்வார் பரத்வத்திலும் திருமலையிலும் ஈடுபட்டார். நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் கண்ணனுடைய வடிவழகில் மயங்கினார்கள். எம்பெருமான் உகந்தருளின திருப்பதிகளில் திருமங்கை மன்னன் அடிமை பூண்டார். ஆனால் இவரோ அர்ச்சாவதாரங்களுக்கு மேலான பெரிய பெருமாளையல்லாது வேறு அறியாதிருப்பவர். எப்படியென்றால், காவேரியின் ப்ரவாஹம் ஏகரூபமாய்ப் பெருகினாலும், அந்தந்த விடங்களில் தீர்த்தவிசேஷங்கள் ஏற்பட்டிருப்பதுபோல் மற்றத் திருப்பதிகளில் விளங்கும் அர்ச்சாவதாரங்களைக் காட்டிலும் திருவரங்கச் செல்வனிடத்தில் போக்யதை (அனுபவிக்கப்படுந்தன்மை) யென்ற குண விசேஷமே பெரிய கோயிலுக்கு ஏற்றத்தைக் கொடுத்தது.

மற்ற பிரபந்தங்களைக் காட்டிலும் இந்தத் திருமாலை மேன்மை வாய்ந்தது. 'நீராய் நிலனாய்' என்று தொடங்கி 'சிவனாய் அயனாய்' என்று சேதனா சேதனங்களைச் சொல்லும் பதங்களால் ஈசுவரனைச் சொல்லும் வாக்கியத்திற்கு அவைகளில் ஊடுருவி நிற்பவனென்று விவேகம் செய்வதாலும், 'முனியே நான் முகனே முக்கண்ணப்பா' வென்று தோன்றும் மும்மூர்த்திகளின் ஸமத்தன்மையை அவதாரகிரமத்தால் வந்ததென்று ஸமாதானஞ் செய்வதாலும், பதங்கள் வெகு கடினமாயிருப்பதால் அர்த்தத்தைக் கண்டுபிடிப்பது கஷ்டமாயிருப்பதாலும், ஏற்படும் குறைகள் இந்தத் திருமாலையிலில்லை. கடலைப்போல் ஆழம் தெரியாமலிருந்தும் நீர்த்தெளிவால தரை தோன்றுவதுபோல், பதங்களின் தெளிவால் அறியவேண்டிய பரம்பொருள் உள்ளத்தில் தோற்றும்படியிருக்கும். மேலும், பிரணவத்தைப் போல் மிகவும் சுருக்கமாய் அர்த்தத்தை யறிவது அஸாத்யமாயிராமல், பாரதத்தைப்போல் பெருத்து தாத்பரியத்தைக் கண்டுபிடிப்பது கஷ்டமாயிராமல், ஒரு ஜீவனுக்கு அறியவேண்டிய விஷயங்களை ஸூத்ரப்பிரயோக கிரந்தங்களைப போல் கைக்கிசைந்தபடி செய்து கொடுத்து, ஸகல அர்த்தங்களும் இந்தப் பிரபந்தத்திற்குள்ளே காட்டப்பட்டிருக்கின்றன. இதே இந்தத் திருமாலைக்கு ஏற்றம் சொல்வதற்குக் காரணமாகும்

முதலாவது பாசுரத்தில், "ஸகல லோகங்களையும் பிரளய காலத்தில் தன் வயிற்றில் வைத்து ரக்ஷித்துப்பின்பு வெளிப்படுத்தின ஜகத்காரண வஸ்துவே! உம்முடைய திருநாமத்தை ஆசாரியரால் உபதேசிக்கப்பட்ட பெருமையால் இந்திரியங்களை விஷயங்களில் செல்லாமல் அடக்கி, பாபங்களை வாஸனைகளுடன் போக்கி, யமனையும் யமதூதர்களையும் அலக்ஷியஞ் செய்து தலையை மிதிக்கிறோ"மென்று திருநாமத்தின் மஹிமைசொல்லப்படுவது போல் இரண்டாவது, பதின்மூன்றாவது பாசுரங்களிலும் இந்த அர்த்தம் விஸ்தரிக்கப்படுகிறது.

2, 3. தான் பிறவிக்கடலில் ஆழ்ந்தாமல் தப்பவேண்டுமென்று பிரார்த்திக்கிறார்.

4, 5, 6, 11, 12, 14. ஸம்ஸாரிகள் மாயையின் வலையில் சிக்கித் தேஹத்தையே ஆத்மாவாய் எண்ணி விஷய ஸுகங்களை நித்யமென்று நம்பி எம்பெருமானுடைய கருணையையும் வாத்ஸல்யத்தையும் அறியாமல வீணாய்க் காலங்கழித்து நமனுக்கு இரையாகிறார்களேயென்று பரிதபிக்கிறார்.

7. வேத விரோதமான பௌத்த ஜைன மதங்கள் பொய்யென்று கோரமான பிரமாணம் செய்கிறார்.

9, 10, 44. பரவாஸுதேவனைத் தவிர வேறொரு தெய்வமும் நமக்குத் தஞ்சமில்லையென்று உபதேசிக்கிறார்.

**15, 16.** திருவரங்கம் பெரிய கோவிலென்ற திருப்பதியின் மஹிமை வர்ணிக்கப்படுகிறது.

**17, 37.** தான் ஆதியில் பாமரனாய்த் திரிந்ததையும் இந்திரிய வசங்களுக்கு ஆளானதையும் ரங்கநாதனுடைய கருணைக்குப் பாத்திரமாகாமல் தன்னையும் பிறரையும் கெடுத்துக்கொண்டதையும் நினைத்து நினைத்து உருகித் தன்னை இகழ்ந்து பேசி எம்பெருமானுடைய கிருபைக்கு நான் எப்படி ஆளாவேனென்று வருந்துகிறார்.

**38, 43.** அவனுடைய திருவுள்ளத்திற்கு உகந்தவர்களாய் எக்காலத்திலும் எத்தேசத்திலும் எந்நிலைமையிலும் தொண்டுபுரியும் பக்தர்களின் மஹிமை வர்ணிக்கப்படுகிறது.

திருமாலையில் ஆழ்வாரின் மனோபாவமும் அனுபவமும் நன்றாய் வெளிப்படுகிறது. மற்ற ஆழ்வார்களைப்போல அல்லாமல் இவரும் திருமங்கை மன்னனும் ஆதியில் உலக வாழ்க்கையில் ஈடுபட்டுக் காமக்ரோதங்களுக்கு ஆளாய்ப் படாதபாடெல்லாம் பட்டு, பிறகு எம்பெருமானுடைய அகாரணமான கருணையால் தானே வந்து தடுத்தாட்கொள்ளப் பெற்றவர்கள். ஆகையால் தங்களுடைய முந்திய நிலைமையையும் தாங்கள் பிறகு பெற்ற பாக்கியத்தையும் நினைந்து நினைத்து வெகு அழுத்தமாயும் உருக்கமாயும் சொல்லுவதுடன், தங்களைப்போல் அக்ஞானத்தில் கட்டுண்டு கிடக்கும் மற்றவர்களும் வீணாய்க் கெடுவார்களே, தாங்கள் அடைந்தனுபவிக்கும் ஆனந்தத்தையும் செய்யும் கைங்கரியத்தையும் அவர்களும் கூடியனுபவிக்கவேண்டுமென்ற ஆசையால ஸம்ஸாரிகளைக் கண்டித்து வற்புறுத்தும் வதும ஹிதத்தை அவர்களுக் குபதேசஞ்செய்வதுமே கடமையாய்க் கொண்டவர்கள். வெயிலில தபித்தவனுக்கு நிழலின் அருமை தெரிவதுபோல், பரம பாமரனாயிருந்த இவர்களுக்கு ஸர்வேசுவரனுடைய கருணையும வாத்ஸல்யமும் ஸௌலப்யமும் அதிகமாய்த் தெரியும். அந்த அனுபவத்தை எந்நாளும் மறக்காதவர்கள். இவ்வாழ்வாருடைய சொற்கள் சில சில விடங்களில் கடினமாயும் அழுத்தமாயும் இருக்கும. இவருக்கு ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திலுள்ள ஊற்றமே இதற்குக் காரணமாகும்.

இப்படியே பல சமயங்களில் பல காலம உழன்று திரிந்து பிறகு வைஷ்ணவத்தில் ஆழ்ந்த திருமழிசைப் பிரானுடைய பாசுரங்களிலும் புறச் சமய கண்டனம் அதிகமாயும கடுமையாயுமிருக்கும். ஒரு பெரிய ஆபத்திலிருந்து தப்பினவர்களுக்கு அதனிடத்தில் உள்ள பயமும், பிறர் அதில் விழக்கூடாதென்ற கவலையும் அதிகமாயிருப்பது இயல்பே; அதின் தீமையை அவர்கள் சுடச் சுட எடுத்துக் கூறிப் பிறரை எச்சரிப்பதும் ஆச்சரியமல்ல.

திருமாலையில் உள்ள பாசுரங்கள் யாவும் வெகு பிரஸித்தி பெற்றவைகளே 'திருமாலையை அறியாதவன் பெருமாளையறியான்' என்ற பழமொழிப்படி இந்தப் பிரபந்தம் வெகு சுருக்கமாயும் வெகு விரிவாயும் இல்லாமல், 45 பாசுரங்களில் அடங்கினதாயிருப்பதால் எல்லோரும் எளிதில் பாடம்பண்ணிப் பாராயணம் செய்யத்தகுந்தது. மேலும் எந்த ஔஷதமும் ஒரு மண்டலம் (45 நாள்கள்) வரையில் சிரத்தையுடன் முறைப்படி உட்கொண்டால் அதின் குணம் தெரியுமென்று சொல்வதுண்டு. எந்த மந்திரமும் ஒரு மண்டலம் வரையில் ஜபிக்கப்பட்டாலொழிய அந்தத் தேவதையின் அருள் கிடைக்காதென்று சொல்லக் கேட்டிருக்கிறோம். அப்படியே இந்த 45 பாசுரங்களடங்கிய இந்த நூலும் ஸம்ஸாரமென்ற ஸர்ப்பத்தால் தீண்டப்பட்ட ஜீவனுக்கு மரணத்தை ஒழித்து நித்தியமான ஆயுளையும் ஆனந்தத்தையும் கொடுக்கும் பரம ஔஷதமாகும்.

ஆதியில் எம்பெருமானுக்கு நந்தவன கைங்கரியம் செய்து மணமுள்ள மலர்களால் மாலை கட்டி ஸமர்ப்பித்து வந்த இவ்வாழ்வார், தன் அனுபவம் யாவற்றையும் அழகிய புஷ்பங்களாய் அமைத்துச் சொன்மாலையாகக் கட்டித் திருவரங்கச் செல்வனுடைய திருவடிகளில் ஸமர்ப்பித்த இந்தத் திருமாலையும், நித்ய ஸூரிகள் முதல ஸம்ஸாரிகள் ஈறாக அனைவர்க்கும் தலைக்கணிகலமாம் என்பதில் ஐயமில்லை.

ஆயினும் 'காவலிற புலனை வைத்து' (1) 'பச்சைமா மலைபோல் மேனி' (2) 'வேதநூல் பிராயம் நூறு' (3) 'கொண்டு பூண்டமுடிமுண்ணுத் தொழும்பா சோறு'க்குமாறே' (5) 'மற்றுமோர் தெய்வமுண்டோ மதியிலா மானிடங்காள். உற்றமோ தன்றி நீங்களொருவ னென்றுணரமாட்டீர்.

> அற்றமே லொன்றறியீர் அவனையல்லால் தெய்வமில்லை. (9)
> கருவிலே திருவிலாதீர்! காலத்தைக் கழிக்கின்றீரே.

(கர்ப்பத்திலுங்கூட எம்பெருமானுடைய கடாக்ஷம்பெறக் கிடைக்காதவர்களே! அவனை ஆராதித்துத் தொண்டுசெய்து வாழுகைக்குக் கண்ட காலத்தை வீணுக்குகிறீர்களே"

(11) நரகமே ஸ்வர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி (12). அறிவிலாமனிசரெல்லாம் அரங்கமென்றழைப்பராகில், பொறியிலாழ் நரகமெல்லாம் புல்லெழுந்தொழியுமன்றே (பிறவியெனும் கடலும் வற்றிப் பெரும் பதமாகின்றதா லென்றபடி நரகமெல்லாம் புல்லு முளைத்துப்போம்). (13)

'திருவரங்கமென்னுமிண்டா பாய்ந்து உண்ணும் சோற்றை விலக்கி நாய்க்கிடுமீரே', (அவைகளுக்கு நற்குணமும் நன்றியறிவு முண்டு. இவ

னுக்கோ தனக்கு யாவற்றையும் அருளின பகவானிடத்தில் நினைப்பாவது நன்றியாவது இல்லையல்லவா.) (14)

''மெய்யற்கே மெய்யனாகும், பொய்யற்கே பொய்யனாகும்' (15)
சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோடிசைந்தகாலம்,
மாதரார் கயற்கணென்னும் வலையுட்பட்டழுந்துவேனை (16)
'ஏழையேனேழையேனே' (23), 'என் செய்வான் தோன்றி

னேனே' (26), ''அரங்கனார் காட் செய்யாதே, அளியத்தேன் அயர்கின்றேனே' (27), 'எம்பிரார்க் காட் செய்யாதே, என் செய்வான் தோன்றினேனே' (28).

'ஊரிலேன் காணியில்லை உறவு மற்றொருவரில்லை
பாரில நின்பாதமூலம் பற்றினேன் பரமமூர்த்தி!
காரொளி வண்ணனே கண்ணனே கதறுகின்றேன்
ஆருளர்களைகணம்மா அரங்கமாநகரிலானே' (29),

'அவத்தமே பிறவிதந்தாய்'—(31), 'மூர்க்கனேன் மூர்க்கனேனே' (32), 'பொய்யனேன் வந்து நின்றேன், பொய்யனேன் பொய்யனேனே' (33), ''பாவியேன் உன்னை யல்லால பாவியேன் பாவியேனே' (35), 'போனகஞ் செய்த சேஷந்தருவரேல் புனிதமன்றே (தொண்டர்கள அமுது செய்து மிகுந்த பிரஸாதத்தைக் கிருபை செய்து கொடுப்பார்களாகில் அப்போதே அது பரம பாவனமன்றோ)' (40), 'இழிகுலத்தவர்களேனும் எம்மடியார்களாகில் தொழுமினீர் கொடுமின் கொண்மினென்று நின்னொடுமொக்க, வழிபடவருளினாய் (நீசகுலத்தில் பிறந்தவர்களானாலும் எம்பெருமானுடைய தொண்டர்களாகில நீங்கள் அவர்களைத் தொழுங்கள். உங்களுக்குத் தெரிந்த விசேஷார்த்தங்களை அவர்களுக்குபதேசியுங்கள். அப்படியே அவர்களிடத்திலிருந்து கேட்டுக கடைத்தேறுங்கள், என்று அருளிச்செய்தாய். உனக்கு சமமாய் அவர்களை ஆராதித்து நல்வழிபோம் படி கிருபை செய்தாய்) (42),

'அமர ஓர் அங்கமாறும் வேதமோர்நான்குமோதி
தமர்களில் தலைவராய ஜாதியந்தணர்களேனும்
நுமர்களைப் பழிப்பராகில் முடிப்பதோர் அளவிலாங்கே.

அவர்கள் தாம் புலையர் போலும் (நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் கரைகடந்து மேன் குலத்தில் பிறந்தவரானாலும் ஸ்ரீ வைஷ்ணவர்களின் பிறப்பையும் தொழிலையும் நிலைமையையும் எடுத்துச் சொல்லி நிந்திப்பாராகில், அந்த க்ஷணத்திலேயே அவர்கள் சண்டாளராவார்கள் 43), என்ற இவை எல்லோர்க்கும் முக்கியமாய் ஞாபகத்திற்கு வரும்.

# திருப்பள்ளியெழுச்சி.

இது தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச்செய்த இரண்டாவது பிரபந்தம். இதில் 10 பாசுரங்களுள. இதற்குத் திருமாலையாண்டானுடைய தனியனும், நஞ்சீயரும், பெரியவாச்சான் பிள்ளையும் அருளிச்செய்த வியாக்கியானங்களும் இவைகளுக்கு அரும்பதவிளக்கமும் பதவுரையுமுண்டு.

இவ்வாழ்வார் ஆதியில் லௌகிக ஸுகங்களில் ஆழ்ந்து தேஹமே ஆத்மாவென்றெண்ணித் தம்மோடு சேர்ந்தவரையும் தன்னைப்போல் கெடுத்துப் பரம அவிவேகியாய்த்திரியும்பொழுது, பெரியபெருமாள் அகாரணமாய் அருள்புரிந்து தன் வடிவழகைக் காட்டி இதர விஷயங்களிலிருந்து அவரைத் திருப்பித் தன்னிடத்திலேயே ஈடுபடும்படி செய்தார். அவருடைய கைங்கரியத்தையே உபாயமாயும் பலமாயும் எண்ணின இவ்வாழ்வார் பெருமானின் திருவடிகளிலே ஒரு நாள் சென்றபொழுது, தன்னைக் குளிர நோக்கிக் கையை நீட்டி அணைத்து க்ஷேமம் விசாரித்துத் தான் சூட்டும் நன்மாலைகளைப் பெற்றுக் கொள்ளாமல் பள்ளிகொண்டிருந்தார். அதற்குக் காரணமென்னவென்று இவர் விசாரிக்க, தான் அவருக்கு அத்தியந்தம் பிரியராகையாலே தன்னிடத்தில் அனுதரவு செய்ததாகச் சொல்ல இடமில்லை. உண்டது ஜீர்ணமாகாததாலோ வென்றால், சுத்த ஸத்வ மயமானவருக்கு ராஜஸ தாமஸ ஸம்பந்தமேது? இவ்வாழ்வார் தனக்குப் பிறவி வேண்டேனென்று சொல்லும் ஞான விசேஷத்தையுடையவரென்பதையும், அடியார்களுக்கு கைங்கரியஞ் செய்வதையே தனக்கு நிஜஸ்வரூபமென்று கொண்டதையும், இச்சுவைதவிர அச்சுவை பெறினும் வேண்டேனென்ற பிரகிருதி புருஷ ஸம்பந்தத்தை உண்மையாயறிந்ததையும், இந்திரியங்களை ஜயித்ததையும், வேறு உபாயங்களில் மனதைச் செலுத்தாததையும், அரங்கனே உபாயமென்றறிந்ததையும் ஆலோசித்து, இவரை இப்படிச் செய்தோமேயென்ற அடங்காப் பிரீதியாலும், இவரை இம்மாதிரி திருத்தினதன் மஹிமையை நினைத்து நினைத்து மற்ற ஜீவன்களையும் இவரைப்போலே நம்மிடத்தில் ஆசைகொள்ளும்படி செய்யும் உபாயமேதோ வென்று அதே நினைவாய்ப் பள்ளிகொண்டருளினரென்று நிச்சயித்தார்.

விஷய ஸுகங்களுக்கடிமையாய் இவ்வாழ்வார் திரிந்த நாளில் பெரிய பெருமாள் தூக்கம் பிடிக்காமல் கவலை கொண்டிருந்து பிறகு இவரைத் திருத்தினபிறகு கவலை நீங்கி மார்பிலே கை வைத்துத் தூங்கினர்; அவருடைய கைங்கரியத்தையே வேண்டி 'எம்பிரார்க்காட் செய்யாதே என் செய்வான் தோன்றினேனே' யென்ற இவர் 'உம்பர் கோமானே! உறங்காதெழுந்திராயே' யென்ற நாச்சியாரைப்போல் 'அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே' யென்று திருப்பள்ளியுணர்த்தி 'உனக்கே நாமாட் செய்வோம்'

என்ற நாச்சியாரைப்போல் 'தொண்டரடிப்பொடி யென்னுமடியனை அளிய னென்றருளி,————————————யுன்னடியார்க் காட்படுத்தா'யென்று பாகவதர்கள் வரைக்கும் பணிவிடையைக் கொண்டருளவேண்டுமென்று பிரார்த்திக்கிறார். 'மாரிமலை முழைஞ்சில்' என்ற பாசுரத்தில் நாச்சியாருக்கு பகவத் கைங்கரியமே நோக்கமென்று விளங்குகிறது. நம்மாழ்வார் 'நெடு மார்க்கடிமை'யில் அதே புருஷார்த்தத்தின் எல்லையென்று நிச்சயித்துப், பிறகு 'கொண்ட பெண்டி'ரிலே உலகத்தாருக்கு ஹிதோபதேசஞ்செய்து, 'கிடந்தநாள் கிடந்தா'யென்ற பாசுரததில் கண்ணனையுணர்த்தி எழுப்பி அடிமை செய்யக்கோறினர். இப்படியே விசுவாமித்திரனும் ராமபிரானைத் தன் யாகரக்ஷணைதத்திற்காக அழைத்துக் கொண்டுபோகும்போது, பெருமான் நித்ரை செய்யும் அழகைக் கண்டநுபவித்துக் கௌஸல்யா ஸுப்ரஜா வென்றதால் திருப்பள்ளி யுணர்ததினர். அப்படியே இவ்வாழ்வாரும் திரு வரங்கனுக்கு அடிமை செய்ய ஆசைப்படுகிறார்.

திருமாலையைக் காட்டிலும் இந்தப் பிரபந்தத்திற்கு விசேஷ மென் னவென்றால், அநாதியான மாயையின் வலையில் கட்டுண்டு மயங்கிக் கிடந்த இவ்வாழ்வாரைப் பெரிய பெருமாள் உணர்த்தி யெழுப்பினதைத் திருமாலை யில் சொல்லப படுகிறது, இவரிடத்தில் பெருமாள் ஆசைகொண்டு கவலை யறறுத் தூங்கும் அவரை இவர் திருப்பள்ளியுணர்த்துவதை இங்கே சொல் லப் படுகிறது. 'புன்கவிதையேனும் எம்பிராக்கு இனியவாறே' யென்று அதில் வாசா கைங்கரியததையே இவா இனிதாகக் கொண்டருளும்படி பிரார்த்திக்கிறார். இங்கே 'துளபமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிபபொடி யென்னும அடியேனை அளிய னென்றருளி' யென்று தேஹததால் செய்யும் கைங்கரியத்தை இனிதாகக் கொண்டருளவேண்டு மென்கிறார். இதில், திருமாலையில 'எமபிரார்க்கினியவாறே' யென்று பெரிய பெருமாளுக்கினிதான பணிவிடையைச் செய்தார. பள்ளியெழுச்சியில் 'அடி யார்க் காட்படுததா' யெனறு பாகவதகைங்கரியத்தை வேண்டுகிறார். பெரிய பெருமாளுடைய முயறசியைச்சொல்லிற்று திருமாலை, அந்த முயற்சி பலித்த படியைச் சொல்லிற்று இபபிரபந்தம். 'எளியதோராருளுமென்றே என் திறத்து' யென்று தமமைப் பொருளாகச் செய்துகொள்ளும்படி திருமாலை யில் வேண்டுகிறார். அவர்க்கு 'நாளோலக்கமருள' வென்று கைங்கரியத்தை வர வர அதிகமாய்த் தனக்குக் கட்டளையிடும்படி திருப்பள்ளி யெழுச்சியில் வேண்டுகிறார்.

இநதப் பிரபந்தத்தில் விடியற்காலத்தின் சிறப்பும் எம்பெருமா னுடைய அமாநுஷ்யமான லீலைகளும் வெகு அழகாய் வர்ணிக்கப்பட்டிருக் கின்றன. திருப்பாவையைப்போல் பிரகிருதி பதார்த்தவர்ணனை இதில் கிடையாதது.

**தொண்டரடிப் பொடியாழ்வார் திருவடிகளே சரணம்.**

# திருப்பாணாழ்வார் வைபவம்.

காவிரி நதிபாயப்பெற்றுப் புண்ணியபூமியான சோழநாட்டின் ராஜதானிகளிலொன்றாய் விளங்கின உறையூரில், கலியுகத்தில், 342க்குமேல் செல்லாநின்ற துர்மதி வருஷத்தில் கார்த்திகைமீ கிருஷ்ண பக்ஷ த்விதியை புதன்கிழமை ரோஹிணி நக்ஷத்திரத்தில், இவ்வாழ்வார் பகவானுடைய ஸ்ரீவத்ஸமென்ற திருமறுவின் அம்சமாய் செந்நெல்வயலில் அயோநிஜராய் அவதரித்தார். அப்பொழுது அங்கே தன் மனைவியுடன் போய்க்கொண்டிருந்த ஓர் பஞ்சமன் கண்டு, தன் பூர்வஜன்ம புண்ய விசேஷத்தால் இவரிடத்தில் அளவற்ற அன்புகொண்டு, இவரை மஹாநிதியைப்போல் எடுத்துப் போய்ப் பசுவின் பாலை ஊட்டித் தன் கண்ணொளியைப் போல் வளர்த்து வந்தான்.

எம்பெருமானுடைய நியமனத்தால் ஜீவர்களைக் கடையேற்றுவதற்கு இவ்வுலகில் தோன்றினவராதலால், பிறந்தது முதல் உலகவாழ்க்கையைத் துறந்து மதுஸூதனனிடத்தில் மனோவாக்குக் காயங்களால் தொண்டு செய்துகொண்டிருந்து தான் புகுந்த குலத்திற்குத் தகுந்த யாழ்வாசிப்பதிலும் பாடுவதிலும் அபூர்வமான தேர்ச்சிபெற்று, நாரத மஹர்ஷியைப் போல், பகவானுடைய கல்யாணகுணங்களை ஞான வைராக்ய பக்தியைப் புகட்டும் இனிய சொற்களால் மதுரமான கானத்துடன் ஸர்வேச்வரனை அர்ச்சனை செய்துவந்தார். அந்தக் காரணத்தால் இவருக்குத் திருப்பாணாழ்வாரென்றே பெயர்வாய்ந்தது. சேனை முதலியார் பரமபதத்திலிருந்து வந்து இவருக்கு ரஹஸ்யமாய்ப் பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்தருளினார்.

மஹா பாகவதரான இவ்வாழ்வார் பெரிய கோயிலில் கண் வளர்ந்தருளும் திருவரங்கமுடையானுக்கு உகந்த தொண்டுசெய்ய விரும்பித், தான் நீச குலத்தில் வளர்ந்தவராகையால், அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தை மிதிக்கப் பயந்து, தென் திருக்காவிரியின் தென்கரையில் திருமுகத்துறைக்கு எதிரில் நின்றுகொண்டு யாழை வாசித்து அதற்கு அனுகுணமாக நம்பெருமாளைப் பாடல்களால் துதித்துக்கொண்டிருந்தார். பலர் அவைகளைக் கேட்க வந்து இவருடைய பக்தியையும் வைராக்கியத்தையும் இனிய கானத்தையும் மெச்சிப் போவதுண்டு. இப்படிப் பல வருஷங்கள் சென்றன. இவருடைய ஐம்பதாவது வயதில், எம்பெருமான் ஏகாந்தத்தில் நாச்சியாருடன் வீற்றிருக்கையில், பிராட்டி "ஸ்வாமி! வெகுகாலமாய்

நம்மை ஒரேடியைதாய்க் கானரஸத்தால் பூஜிததுவரும் நம் பாணனிடத்தில் கிருபை செய்யலாகாதோ? அவன் தன்னை இகழ்ந்து ஜாதிமுறைமையை நினைத்து எட்ட நிற்பது அழகோ வென்றாள். அதற்கு வாஸுதேவன் "நாம் அவனுக்கு அருள்செய்து அவனுடைய மஹிமையை உலகத்தாருக்கு வெளிப்படுத்துமகாலம் நெருங்கிவிட்ட" தென்றார்.

ஒருநாள் ரங்கநாதனுக்குப் பிரதிதினமும திருமஞ்சனக் கைங்கரியம் செய்யும் லோகஸாரங்கரென்ற ஜீயர், வழக்கப்படி பொற்குடத்தை எடுத்துக்கொண்டு காவிரித்துறைக்குப் போனபோது, ஸமீபத்தில நின்றுகொண்டு துதிபாடும் ஆழ்வாரைப் பார்த்து, அவருடைய அகநிலையைச் சற்றேனும் உணராது, வெளிப்படையான வேஷத்தை மாத்திரம் குறித்து "எட்டிப் போகச் செல்" லெனறு பலமுறை சொன்னார். ஆனால் தன்னையும் இவ்வுலகத்தையும் மறந்திருந்த ஆழ்வாருடைய செவியில் அந்தச் சொற்கள் விழவில்லை. அப்பொழுது அங்கிருந்த பார்ப்பனர் ஓடிவந்து, மேன்குலததாரென்ற இறுமாப்பால் அவரைக் கல்லாலடித்தார்கள். அதினால் காயப்பட்டு ரக்தம் பெருகிறறு. தியானஸமாதி திடீரென்று கலைந்து, ஆழ்வார் விழித்துக்கொண்டு "ஐயோ! என்ன அபசாரம செய்தேன! பரம பாகவதர்கள் நடமாடும இவ்விடத்தில் அடிவைக்கத் துணிந்தேனே" யென்று அந்த அந்தணர்களை வணங்கி மனனிபபுக் கேட்டுக்கொண்டு தூரவிலகினார். அப்பொழுதும அவருக்கு உடலிலாவது உள்ளததிலாவது கொஞ்சமேனும் வருத்தம் காணப்படவில்லை. ஆனால் பக்தர்களே தனக்கு ஆத்மாவாய்க் கொண்ட திருவரங்கச் செல்வன், ஆழ்வாருக்கு நேர்ந்த தீங்கை நினைத்துக் கடுங்கோபங்கொண்டு, திருநெற்றியிலிருந்து இரத்தம் பெருகச் செய்தார். அதைக் கண்டு அர்ச்சகாகளும கோவில் அதிகாரிகளும் அரசனும் இதென்ன விபரீதமோவென்று காரணங்காணுமல் நடுங்கிக்கொண்டிருந்தார்கள். அன்றிரவில் மாதவன் லோகஸாரங்கருடைய கனவில் தோனறி, "ஓய்! பிராமணனென்ற காவத்தால் ஞானக்கண்ணை இழந்து, நமக்கு அதயநதம் நண்பனுன பாணப பெருமானை அவமதித்து அடித்து ஊரத்திக் காயமபண்ணத் துணிந்தீரல்லவா" வென, அம்முனிவர் "ஐயோ! நான் கெட்டேன். அறியாமையால செயத அபராதத்தைப் பொறுத்தருளவேண்டு" மென்று திருவடிகளில் விழுந்தார். கோவிந்தன் "ஓய்! என் பக்தனுக்குச் செய்த தீங்கு எனக்கே செய்ததல்லவா? என் நெற்றியிலிருந்து பெருகும் ரக்தம உம்மாலலலவா? நீர் இதற்குப் பிராயச்சித்தமாய், நாளைக் காலையில் அங்கே சென்று, பாணரை அடிபணிந்து அபராதத்தைப் பொறுத்தருளவேண்டி, அவரை உமது தோள்களில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு என் ஸந்நிதியில சேர்க்கக்கடவீ" ரென்றார். அம்முனிவர் விழித்துக்கொண்டு, தான் கண்ட கனவை நினைத்து நினைத்து ஆச்சரி

மடைந்து, ரங்கநாதனுடைய நியமனத்தை யாவருக்கும் தெரிவித்து அவர்களும் பின் தொடரத், திருக்காவிரிக்குச் சென்று திருமுகத்துறையில் தீர்த்தமாடிப் பாணர் வழக்கமாக நிற்குமிடத்திற்குச் சென்று அவருடைய திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, "அடியேன் அறிவின்மையால் செய்த மஹா அபசாரத்தைத் தேவரீர் பொறுத்தருளவேண்டும். இல்லாவிட்டால் என் ஸ்வரூபத்திற்கே நாசம் வரும். தேவரீருக்கு செய்த உபத்திரவம் யாவும் ஸ்ரீரங்கநாதனுக்குச் செய்ததென்றே அறிந்தேன். எம்பெருமானுடைய ரூபமான தேவரீர் என் அஞ்சலியை ஏற்றுக்கொண்டு எனக்கு ஸ்வரூப பிக்ஷை கொடுக்கவேண்டு"மென்று பிரார்த்தித்தார். அதைக் கேட்டுப் பாணர் திடுக்கிட்டு உடல் நடுங்கி "நித்ய ஸூரிகளே சிறுமாமனிதராய் ஸஞ்சரிக்கும் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் வஸிப்பதற்கும் திருவரங்கனுக்குக் கைங்கரியம் செய்வதற்கும் எல்லையில்லாத பாக்யம் வாய்ந்த தேவரீர், நான்கு ஜாதிகளினும் கடையனான என்னைப் பார்த்து இப்படிச் சொல்லத் தகுமோ? என்னை வேருடன் அழிக்கவேண்டுமென்று நினைவோ"வென, முனிவர் "அடியேன் இதுவரையில் அபசாரப்பட்டபடி இனிமேலும் படாதிருக்க அருள்புரியவேண்டும். நேற்று ராத்ரி கனவில் திருவரங்கமுடையான் என்னை அழைத்து 'நமது பாணனை என் ஸந்நிதிக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவா' வென்று கட்டளையிட்டார். பிறகு தேவரீருடைய நியமனப்படி செய்கிறேன்" னென்றார். அதற்கு ஆழ்வார் "ஐயோ! பரம சண்டாளனான அடியேன் உபய காவிரியை மாலையாகப் பெற்ற திருவரங்கத் திருப்பதியை மிதிக்கத் துணிவேனோ" வென்று அங்கிருந்து எட்டிச் சென்றார். அதைக் கண்டு அவ்வந்தணர் "ஸ்வாமி! அப்படித் திருவுள்ள மிருந்தால், பெரிய பெருமாள் பெரிய திருவடியின் திருத்தோளில் எழுந்தருளுவதுபோல், தேவரீர் அடியேனுடைய தோளில் ஏறியருளவேண்டும். இது என் கோறிக்கை மாத்திரமல்ல. நான் செய்த அபசாரத்திற்கு இதே பிராயச்சித்தம். மேலும் இது ரங்கநாதனுடைய நியமனம். நானும் தேவரீரும் எவரும் இதை மீறிப்போமோ"வென்று வேண்டினார். அப்பொழுது திருப்பாணாழ்வார் எம்பெருமானுடைய ஆணைக்குக் கட்டுப்பட்டு, அவன் ஸ்வதந்திரனென்பதையும் தான் பரதந்திரனென்பதையும், அவன் சேஷியென்பதையும், தான் சேஷனென்பதையும், அவனுடைய உடைமையே தானென்பதையும் நினைத்துக் கைகூப்பி, மனதால் வணங்கித், தன் யாவையும் அவனுக்கு அர்ப்பணஞ் செய்துவிட்டு "உன் திருவுள்ளம் நடக்கட்டு"மென்று பரதந்திரராய் நின்றுவிட்டார். பிறகு லோகஸாரங்க மஹாமுனிவர் பாணப் பெருமானைத் தன் தோளிலேற்றிக்கொண்டு, பிறவிப் பெருங்கடலைத் தாண்டி பரமபதத்திற்குப் போகிறவனை ஆதிவாஹிகர்கள் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போவதுபோல், ரங்கநாதனது ஸந்நிதியில் கொண்டுபோய்ச் சேர்த்தார்.

பிறந்தது முதல் எம்பெருமானுடைய திவ்ய மங்களவிக்ரஹத்தைக் கண்ணாரக் கண்டு களிக்கவேண்டுமென்று இரவும் பகலும் அவா கொண்ட பாணபெருமாளுக்குப் பரமபத நாதன் தன பூர்ண ஸ்வரூபத்தையும் ஸேவை ஸாதித்தார். பாணப்பெருமாள அந்தப் பள்ளிகொண்ட திருக் கோலத்தை ஸேவித்து, அவனுடைய ஸாவயவங்களும் இடக்கத் திருவடி களையே போற்றி.

"பாரமாய பழவினை பற்றறுத்து—என்னைத்தன்
வாரமாக்கி வைததான், வைத்ததன்றி யென்னுள் புகுந்தான்.
கோரமா தவஞ்செய்தனன் கொலறியேனரங்கத் தம்மான்—திரு
வாரமார் பதன்றோ அடியேனை யாட்கொண்டதே!"

என்ற பாசுரத்தை அருளிச் செய்து, அரங்கத்தம்மானென்றதால் அவன் சேஷியென்றதையும், கமலமென்றதால் போக்யனென்றதையும், பாதமென்ற தால் அவனே உபாயமென்றதையும வெளியிட்டார். அருள் கொடுத்திட்டு அடியாரை ஆட்கொள்ளும் அழகிய மணவாளனுடைய திருமேனியைப் பா தாதிகேசாந்தமாய்த தான் கண்டனுபவித்து, அதனாலுண்டான பிரீதி பொ ங்கித் ததும்பி, அமலனாதிப் பிரானென்ற திவ்ய பிரபந்த ரூபமாய் வெளிப் பட்டது. அந்தப் பததுப் பாசுரங்களும உலகததிலுள்ளோரை உஜ்ஜீவிக்கச் செயயும் பரம ஸாதனமாகும். அபபாசுரங்களை அருளிச் செய்துகொண்டே வரும்பொழுது

"கொண்டல் வண்ணனை, கோவலனாய் வெண்ணெ
யுண்டவாயன் என்னுள்ளங் கவாநதானை,
அண்டர் கோனணியரங்கன், என்ன முதினைக்
கண்ட கண்கள மற்றொன்றினைக் காணாவே"

என்ற பாசுரத்தைப் பாடினவுடன், எம்பெருமான் அதைக்கேட்டு ஆழ் வாரை விட்டு அதுவரையில் பிரிந்திருந்த துயரம் தாங்காமல், அவரை அந் தத் திருமேனியோடே தன் திருவடிகளில யாவரும் காணும்படி சேர்த் துக் கொண்டார்.

## அமலனாதிபிரான்.

இந்தப் பிரபந்தம் ஒன்றே இவ்வாழ்வாரால் இயற்றப்பட்டது இதற்குப் பெரிய நம்பிகள் வடமொழியிலும் திருமலை நம்பிகள் தென் மொழியிலும் தனியன்களை அருளிச் செய்திருக்கிறார்கள். இதில் பாசுரங் கள் 10; இதற்குப் பெரிய வாச்சான் பிள்ளை அருளிச் செய்த வியாக்கியான

மும் அதற்கு அரும்பதமும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் வியாக்கியானமும் உண்டு.

பெரிய வாச்சான் பிள்ளை இதற்கு எழுதியிருக்கும் முகவுரையில் அடியிற்கண்ட அரிய விஷயங்கள் அடங்கியிருக்கின்றன:—

பிரணவத்தைப போல் மிகவும் சுருக்கமாயும்; வேதார்த்தத்தை விளக்க வந்த மஹாபாரதததைப் போல் வெகு விரிவாயும் அல்லாமல், பத்து பாசுரங்களாய்க் கற்பதற்கு எளிதாயிருக்கும் இப்பிரபந்தம், ராமாயண பாரத புராணங்களைக் காட்டிலும மேன்மையுள்ளது. அவை பகவானு டைய கதையையும் இதர விஷயங்களையும் சொல்லுகின்றன. 'திருவாய் மொழியும் பாலோடமுதென்ன வாயிரம்' என்றிருந்தும், அன்யாப தேசம் ஸ்வாபதேசம், ஸாமானுதி காண்ய நிர்ணயகம், திரிமூர்த்திகளும் ஸம்மென்ற வாதத்தைக் கண்டித்தல் முதலிய அரும்பொருள்களை யுடைத்தா யிருக்கும். திருநெடுந் தாண்டகமும் விரிவில்லாமல் 30 பாட்டாய் இருந்தபோதிலும், அதற்கும் அவ்வருமைகளுண்டு. திருமாலுக்கு அவை யில்லாவிட்டாலும், தம்முடைய லாபா லாப ரூபமான பிரியாப் பிரியங்களை உபதேசிக்கும் திருப் பல்லாண்டுக்கு இந்தக் குற்றங்களில்லாவிட்டாலும், மூன்றுவித அதிகாரிக ளின் குணகுணங்களை எடுதுதுச் சொல்லும். ஆகையால் இந்தப் பிரபந்தம் மிகவும் சுருக்கமாயும் அறியக்கூடாததாயுமிராமல், இதில் இல்லாதது வேறொன்றுமில்லையென்று சொல்லும்படி. ஆயிரததி லொன்றாய்க் கடலில். குளப்படியைப் போல் புறம்பிலில்லாதவை யெல்லாம் இதிலே யிருக்கும்.

பர வியூக விபவங்களின் மகிமைகளை எடுத்துரைக்காமல் அர்ச்சாவ தாரமாய்ப் பெரிய கோயிலில் திருககண் வளர்ந்தருளும் கருமணியைக் கண்டு கொண்டு நின்று வாயார வாழ்த்துகிற பிரபந்தமாகையாலே மற்றவைகளைக் காட்டிலும் இது மேலானது. இபபடியே மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் இவருக்கு மேன்மையுண்டு. பல்லாண்டு போற்றி யென்று அவர்கள் பாவிக்க வேண்டியிருந்தது. இவருக்கோ அது வேண்டாமல் இயற்கையாகவே அமைந்தது. இவர் தன்னை நான்கு வர்ணத்திற்கும் புறம்பாக நினைத்திருப் பர். பெரிய பெருமாளுமபப்டியே நினைத்திருந்தார். நித்ய ஸூரிகளும் நாலுவர்ணத்திலும் உள்ளாரல்லரே. ஆழ்வார்கள் இருகரையரென்றுசொன் னபடி, தொண்டரடிப்பொடிகள் பரோபதேசமும் இதர மத கண்டனமும் செய்தவர்; இவரோ அது எம்பெருமானை அனுபவிப்பதற்கு விரோதியென்று கருதிப் பெரிய பெருமாளையே அடி முதல் தலை வரையில் கண்டனுபவிக் கிறார். இவருக்கு அரங்கனிடத்திலுள்ள அன்பு எல்லையற்றது. அதுவும் தன்னால் வந்ததன்று. அவனுடைய அருளே. காலத்தாலும் தேசத் தாலும் மாறாதது. "மின்னனுவிலேன்காண்" என்று உள்ளும்புறமும் வயிரு

வினது. பெருமாளை வனம் போகவிட்டு அப்பிரிவைபாற்றுமல் முடிந்தசக்கிர வர்த்தியின் நிலை ஸ்நேஹமெனப்படும் அவனுடைய முறை யறிந்து அவனுடைமையாய், ஸர்வ தேச ஸர்வ கால ஸர்வாவஸ்தையிலும் கைங்கரியம் செய்த இளைய பெருமாளின் நிலையே பக்தியெனப்படும். இப்படி ராமாவதாரமல்லாது அறியாத சிறிய திருவடியைப் போல் இவரும் பெரிய பெருமாளையல்லாது பர வியூக விபவங்களை யறியார்.

ஸ்ரீவைகுண்டம் திருப்பாற் கடல் திருவவதாரங்கள் உகந்தருளின திருப்பதிகளெல்லாம் பெரிய பெருமாளேயானது போல், அவ்விடங்களிலுண்டான ஸௌந்தரிய குணசேஷ்டிதங்களும பெரிய பெருமாளிடத்தில் காணப்படும். அவருடைய அழகும ஐசுவரியமும் பரமபதத்தில் மொட்டாய் மூடியிருக்கும்; அவதாரத்தில் இலை விடும்; இங்கே வந்த பின்பு தழைக்கும். தன்னை உகந்தார் அனுபவிப்பது ஆச்சரியமலல, தன்னிடத்தில் வெறுப்புள்ளவரும் கண்டனுபவிக்கும்படியான சீர்மை பொருந்தியிருப்பதே விசேஷம். இந்த பிரபந்தத்தில் அர்த்த பஞ்சகம் உபதேசிக்கப்படுகிறது. எல்லோரும் ஆசிரயிக்கத் தகுந்தவனென்றதால் மேன்மையும், சீர்மையும் உபாயபாவமும், வீரியம் முதலியவைகளால் விரோதிகளை நீக்குவதும், ஸௌந்தரியத்தையும் சொல்லுகையாலே போக்யதையும் வெளியிடப் படுகின்றன. மஹாராஜா! இவனைஅழைத்துவாவென்று விபீஷணழவானிடத்தில் விரோத புத்தி வைத்த ஸுக்ரீவனையே ராமன் ஏவினது போல், சண்டாளனென்று வெறுத்து ஒதுங்கின லோகஸாரங்க மஹா முனியைக் கொண்டே இவ்வாழ்வாரை எழுந்தருளப் பண்ணுவித்தார். வழியில் தன் ஞானக் கண்ணால் திருவரங்கச் செல்வனைக் கண்டனுபவிதது ஒன்பது பாசுரங்களைப் பாடி, திருப்பிரம்பு பலகணி வாசலுக் குள்ளே நின்று பத்தாவது பாசுரததை அருளிச் செய்தார்.

முதல் பாசுரததில பெரிய பெருமாளுடைய திருவடிகளின் அழகு தம்மை அடிமை கொண்டதென்கிருர்.

2. திருவடிகளில் தொடர்ந்த திருவுள்ளம் திருப்பரிவட்டத்தின் மேல் சென்றதை வர்ணிக்கிருர்.

3. திருப்பீதாம்பரத்தின் அழகு திருநாபீ கமலத்திலே விளைபடியால் அதைக் கண்டனுபவிக்கிருர்.

4. திருநாபீ கமலத்துடன் சேர்ந்த திருவதரத்தை வர்ணிக்கிருர்.

5. தனக்குப் பற்றுன பெரிய பிராட்டியார் வஸிக்கு மிடமான திருமார்பு தன்னை ஆட் கொண்டதைச் சொல்லுகிருர்.

6. ஸர்வலோகத்தையும் அமுது செய்தருளின திருக்கழுத்தின் அழகு தன்னை உய்யக் கொண்டதைச் சொல்லுகிறார்.

7. பகவானுடைய திருவதாரத்திலே இவ்வாழ்வார் அகப்பட்டு, நீந்தப் புகுந்தவன் தெப்பத்தை இழந்ததுபோல், தன் மனதைப் பறிகொடுத்ததை வர்ணிக்கிறார்.

8. கரியவாகி விசாலமாய் சலித்து செவ்வரிபடர்ந்து காதளவும் நீண்ட பெரிய கண்கள் கல் நெஞ்சனான தன்னைப பேதமைசெய்ததைச் சொல்லுகிறார்.

9. திருமேனியின் நிறம் எல்லாவற்றையும் கூடக்கொண்டுவந்து என்னெஞ்சைக் கொள்ளைகொண்டதேயென்கிறார்.

10. இது வரையில் ஞானக் கண்ணால் பார்த்தனுபவித்தது. லோகஸாரங்க முனிகளின் தோளில் எழுந்தருளி எம்பெருமானுடைய ஸந்நிதியில் புகுந்து அவருடைய அழகை பஞ்சபூதங்களால் அமைத்த கண்களைக் கொண்டு கண்டனுபவித்தது, நீருண்ட மேகம்போலிருக்கும் நிறத்தை யுடையவனாய், இடைக் குலத்தில் வந்து அவதரித்து வெண்ணெயுண்ட வாயை யுடையவனாய், உலக வாழ்க்கையை வெறுத்தறுத்த என் உள்ளத்தைக் கவர்ந்தவனாய், ஸகல பிரபஞ்சத்திற்கு ஈசுவரனாய், ஸம்ஸாரத்திற்கு ஆபரணமான திருவரங்கம் பெரிய கோயிலில் வந்து கண் வளர்ந்தருளுமவனாய், எனக்கு அமுதம் போலே பரம போக்கியனான நம் பெருமானைக் கண்ட கண்கள் வேறொன்றைக் காணாவேயென்று இந்தப் பிரபந்தத்தைத் தலைக்கட்டித் திருவரங்க முடையானுடைய திருவடிகளில் கலந்தார்.

பெரிய பெருமாளிடத்தில் திரிவிக்கிரமாவதாரமும் ராமாவதாரமும் (2-ம் பாசுரம்), திருவேங்கடமுடையான் தன்மையும் (3-ம் பா), தசரதனுடைய மகனென்றபடியும் (4-ம பா), ஸாவவியாபக சக்தியும் (5-ம் பா), ஆபத ஸஹனான ஸர்வேசுவரனுடைய தன்மையையும் (6-ம் பா), ஸ்ரீ வைகுண்டநாதனுடைய திருக்கோலமும் (7-ம் பா), நரஸிம்ஹாவதார மஹிமையும் (8-ம் பா), மஹாப்பிரளயத்தில் ஆலிலைமேல் பள்ளி கொண்டதும் (9-ம் பா), கிருஷ்ணாவதாரத்தின் பெருமையும் (10-ம் பா) பொருந்தியிருக்கின்றனவென்று வர்ணிக்கப்படுகிறது.

திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்.



# திருமங்கையாழ்வார் வைபவம்

இவர் விஷ்ணுவின் சாரங்கமென்ற வில்லினுடைய அம்சமாய்ப் பிறந்தவர். சோழமண்டலத்தில் திருமங்கை யென்ற நாட்டில் திருவாலி திருநகரியென்ற திருப்பதிகளுக்கு ஸமீபத்திலுள்ள திருக்குறையலூர் இவருடைய ஜன்மபூமி. நான்காவது வருணத்தில் கள்ளக்குடியில் சோழராஜனுடைய சேனைத்தலைவர்களில் ஒருவனான நீலனென்றவனே இவருடைய தந்தை. கலியுகம் 398 வதான நள௵ கார்த்திகை௴ பௌர்ணமி கிருத்திகா நக்ஷத்திரம் கூடின வியாழக்கிழமையில் அவதரித்தார்.

இவர் கிருத யுகத்தில் கர்த்தமனென்ற பிராம்மணனும் இரண்டாவது யுகதில் உபரிசரவஸுவென்ற அரசனும், மூன்றாவது யுகத்தில் சங்கபாலனென்ற பூவைசியனும் நான்காவது யுகத்தில இவ்வாழ்வாராயும் அந்தந்த வாணங்களில் பிறந்து ஜனங்களை பாதுகாத்து ஹிதோபதேசஞ் செய்து கரையேறினாரென்று சொல்வதுண்டு.

இவர் இளவயதிலேயே தன் நிலைமைக்கேற்ற கலைகளைப் பயின்று பல யுத்தங்களில் நிகரற்ற கீர்த்திபெறறதால் பரகாலனென்று பெயரிடப்பட்டு வாகை மாலை சூடப்பெற்றார். பிறகு அந்நாட்டிற்கே குறுநிலமன்னனாய் நியமிக்கப்பட்டு லௌகிக ஸுகங்களில் ஆழ்ந்து காலங்கழித்து வந்தார். அந்நாட்டில் திருவெள்ளக் குளமென்ற ஊரில் ஒருநாள் பல தெய்வகன்னியர் ஓர் தாமரை யோடையில் ஜலக்கிரீடை செய்து திரும்பிச் செல்லுங்கால் அவர்களில் ஒருத்தியான திருமாமகள் மானிட வடிவமெடுத்துப்பின் தங்கி நின்று குமுதமலர்களைக் கொய்துகொண்டிருந்தாள். 'அவளை ஓர் வைத்தியன் கண்டு 'நீ யாரெ'னறு வினவ, தன் வரலாற்றைத் தெரிவித்து, அவனால் மகளாய் வளர்க்கப்பட்டு வந்தாள். குமுதவல்லி யென்ற அக் குழந்தைக்கு விவாகப்பருவம் வந்தவளவில் அவள் எந்த வரனையும் நிராகரித்துத் தன் மனதுக்கேற்ற கணவன் கிடைக்குமளவும் மணம்புரியேனென்றிருந்தாள். அவளுடைய அழகையும் கல்வித்திறமையையும் புத்திக்கூர்மையையும் பலரால் கேள்வியுற்ற ஆழ்வார் அவளை நேரில்கண்டு தான் கேட்டதற்கு ஆயிரம் மடங்கு அதிகமாயிருக்க, வியப்படைந்து அளவற்ற தனங்களைக் கொடுத்து அவளுடைய தந்தையை மகிழ்வித்து அப்பெண்ணைத் தனக்குக் கன்யாதானம் செய்யும்படி வேண்டினார். அப்பொழுது குமுதவல்லி தடுத்து, "ஸ்ரீ வைஷ்ணவரல்லாத எவரையும் நான் கண்ணெடுத்தும் பாரேன். அது ஒன்றே இவருக்கு குறை"யென்றாள்.

அதைக் கேட்ட திருவாலிநாடர் உடனே திருநறையூர்க் நச் சென்று அங்கே விளங்கும் எம்பெருமானுடைய அனுக்கிரஹத்தால் ஞ்ச ஸம்ஸ்காரம் பெற்று மீண்டும் வந்து குமுதவல்லியை வேண்ட, அவள் 'நீர்' இன்னுமொரு கைங்கரியம் செய்யக் கடவீர். ஒரு வருஷம் வரையில் ஒவ்வொருநாளும் 1008 ஸ்ரீ வைஷ்ணவர்களை அமுது செய்வித்து அவர்களு டைய பிரஸாதத்தை யுட்கொண்டாலொழிய உம்மை நான் மணம் புரியே" னென்றாள். பரகாலர் அப்படியே செய்வதாய் சபதமிட, அதன்பின் அவ் விருவர்க்கும் திருமணம் நடந்தேறிற்று.

பிறகு அவர் தன் செல்வம் யாவற்றையும் ஸ்ரீவைஷ்ணவ கைங்கர்யத் தில் செலவிட்டு அரசனுக் கனுப்பவேண்டிய பகுதியையும் அனுப்பாதிருக்க, சில விரோதிகள் அதை மன்னவனுக்குத் தெரிவித்தார்கள். அவன் கேட்ட னுப்பினபொழுது பலதடவை கெடுவிட்டுத் தூதர்களை அலைக்கழித்து வந்தார். பிறகு அவன் இவரைப் பிடித்துவரச் சொல்லி சேனைகளையனுப்ப இவர் தன் வலிமையால் அப்படையைத் துரத்தியடித்தார். அதைக் கண்டு அரசன் இவரை நயத்தால் வசப்படுத்திக்கொண்டு தன் மந்திரியை இவரி டத்தில் இருத்திவிட்டுப் போனான். அவனும் ஒருநாள் தந்திரமாய் இவரை ஒரு தேவாலயத்தில் செல்லச் செய்து காவலிட்டு விட்டான். அங்கு பட்டினியாய் மூன்று நாள் கிடக்கும் பரகாலருடைய கனவில் திருக்கச்சி நாதனான பேரருளாளன் தோன்றி "நமது ஸந்நிதிக்கு வா. உனக்கு வேண் டிய திரவியத்தைக் கொடுப்போ" மென்றார். பரகாலர் அக் கனவை மந்தி ரிக்குத் தெரிவித்து அவனுடன் காஞ்சி நகரத்திற்குச் சென்று, பகவானு டைய நியமனத்தால் வேகவதி நதிக்கரையில் ஓரிடத்திலிருந்து அபாரமான தனத்தை வெட்டி யெடுத்துக் கடமையைச் செலுத்தி மிகுந்ததைத் ததீயா ராதனத்துக்கு உபயோகித்து வந்தார்.

நாளிடையில் கையிலுள்ள பொருள்யாவும் செலவான பொழுது எப்படியாவது ஸ்ரீ வைஷ்ணவ கைங்கரியத்திற்கு திரவியம் சேர்க்க இச்ச யித்து, பகவானுக்கு கைங்கரியம் செய்வதில் எவ்விதமான உபாயத்தையும் அனுஷ்டிக்கலா மென்று நம்பி தன்னுடைய வெகு ஸாமர்த்தியமுள்ள வேலைக்காரர்களான நீர்மேல் நடப்பான், நிழலில் ஒதுங்குவான், தாளூதி, தோராவழக்கன் என்ற நால்வரையும் பலவிடங்களிலும் நிறுத்திதான் ஒரு பக்கத்தில் மறைந்திருந்து அங்கே வரும் பிரயாணிகளுக்குள் துஷ்டராயும் லோபிகளாயு மிருப்பவரை வழிமறித்துக் கொள்ளையடிக்கத் தொடங்கினார்.

இப்படி யிருக்கையில் ஸ்ரீபதி இவ்வாழ்வாரை அனுக்கிரஹஞ் செய்ய விரும்பி அதற்கேற்றபடி அவருடைய கர்மபரிபாகமும் ஒத்திருக்கும் காலத்தைக் கண்டு பிராட்டி ஸமேதனாய் பிராமணவேஷம் பூண்டு அள

வற்ற திரவியத்தோடும் ஆடையாபரணங்களோடும், பரிவாரங்களோடும் அவ்வழியே வந்தார். பரகாலன் அதைக் கண்டு ஸந்தோஷமடைந்து அந்தக் கூட்டத்தை மறித்து, அவர்களுடைய பொருள்கள் அனைத்தையும் அபஹரித்து விட்டு பிராட்டியின் திருவடிகளிலிருந்து அருகாழிகளையும் விட மனமில்லாமல், தண்டம் ஸமர்ப்பிப்பதுபோல் பாதங்களில் முடிபடும்படி விழுந்து பல்லால் அவைகளைக் கவ்வி நீக்கி யெடுத்தார். அதைக்கண்ட பெருமாள் "நீர் நமது கலியனோ?" வென்றார்.

பிறகு இவர் அந்தப் பொருள்களை மூட்டையாகக் கட்டி எடுக்கப் போக சற்றும் அது அசையவில்லை. அதனால் கோபங்கொண்டு கண்ணனைப் பார்த்து "ஓய்! நீர் ஏதோ மந்திரவாதம் பண்ணி என்னை மயக்கப் பார்க்கிறீரோ? அதை எனக்கு இப்பொழுதே உபதேசித்தா லொழிய உம்மை என் உடைவாளுக்கு இரையாக்குவே"னென்று கத்தியை உருவினார். அதற்குப் பயந்தவரைப்போல பெருமாள் அபிநயித்து "அருகில் வாரும். உபதேசிக்கிறே"னென்று அழைத்து ஸகல வேதங்களின் உட்பொருளும் அஷ்டாக்ஷர மந்திரத்தில் அடங்கி யிருக்கின்றன வென்று பரிபூர்ண கிருபையுடன் அதை அவருடைய செவியில் உபதேசித்துத் தனது திருக்கையால் அவருடைய தலையில் பூர்ணானுக் கிரகஞ் செய்தார். அதினால் அக்ஞானம் நீங்கித தன ஸ்வரூபத்தையும் தன்னை ஆட்கொள்ள வந்த பீதகவாடைப் பிரானார் பிரம குருவானதையும் ஞானக் கண்ணால் கண்டறிந்தார். அப்பொழுது மாதவன், பிராட்டி ஸமேதனாய் பெரிய திருவடியின் மேல் எழுந்தருளி நித்ய ஸூரிகள் புடைசூழ அவருக்குத் திவ்ய ஸேவையை ஸாதித்தருளினார். பாலனான துருவஸ்வாமியின் கன்னத்தில் கேசவன் பாஞ்சஜன்யத்தை வைத்துக் கடாக்ஷித்தவுடன் ஸகல ஞானத்தையும் பூர்ணமாயுணர்ந்து எம்பெருமானைத் துதித்தது போல, இயற்கையாகவே தென்மொழியில் நிகரற்ற கவியான பரகாலர் தான் பெற்ற பேற்றையும் அனர்தானுபவத்தையும் எண்ணிறந்த கவிகளால் ஆசு, மதுரம், சித்ரம், விஸ்தாரம் என்ற வகையாய்ப் பாடினார். நம்மாழ்வார் நான்கு வேதங்களின் உட்பொருளை நான்கு பிரபந்தங்களாக அருளிச் செய்தார். இவ்வாழ்வார் அவவேதாங்கங்களான சிக்ஷை, வியாகரணம், கல்பம், நிருக்தம், ஜோதிஷம், சந்தஸென்ற வைகளின் உட்பொருளை, பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்ற பிரபந்தங்களின் மூலமாய் உலகத்தாருக்கு உபதேசித்தார், நாற்கவிப் பெருமாளென்றும் அருள்மாரி யென்றும் பிரஸித்தி பெற்றார். இப்படி யிருக்கையில், ஒருநாள் பெரிய பெருமாள் இவரை அருளப் பாடிட்டு "நீர் பரிவாரத்துடன் நமது திருப்பதிகளை ஸேவித்து அங்கங்கே நம்மை மங்களா சாஸனம் பண்ணிவாரு"மென்று அரு

ச் செய்தார். அந்த ஆணையைத் தலைமேற்கொண்டு பரகாலன் இமய லைச் சாரலிலிருந்து குமரிக்கரை வரையிலுள்ள திவ்ய க்ஷேத்திரங்களைத் ரிசித்து, அங்கங்கே அர்ச்சாரூபமாய் விளங்கும் எம்பெருமானை மதுர ான பாசுரங்களால் போற்றினர். இவரால் பாடல் பெற்ற திவ்ய ஸ்தலங் ள் 86. பெரியாழ்வாரைத் தவிர இவர் ஒருவரே திருக்கோட்டியூரைப் ாடினவர். நாலாயிரத்தில் இவருடைய பாசுரங்களே அதிகம். இவரு டைய பிரபந்தங்களும் அதிகம். இப்படி யாத்திரை செய்து கொண்டு ருகையில் திருநின்றவூரில் எழுந்தருளி யிருக்கும் பத்தராவிப் பெருமாள் ழ்வாருக்கு முகங்கொடாமலிருக்கக் கண்டு பரகாலன் அவரைப் பாடாமல் சென்று திருக்கடன் மல்லையென்ற மஹாபலி புரத்திற்கு வந்தார். அங்கே ந்நிதியில் எம்பெருமானை ஸேவித்து நிற்கையில் திருநின்றவூர்பிரான், ாச்சியாரால் வற்புறுத்தப்பட்டு ஆழ்வாருடைய வாயால் பாடல் பெறும லிருக்கலாமோ"வென்று திருக்கடன் மல்லையில் வந்து ஸேவை ஸாதித்தார். ழ்வார் அந்தப் பெருமானை அங்கே கண்ணாரக் கண்டு களித்து, அவ்வூர்ப் திகத்தில்,

"பூண்டவத்தம் பிறர்க்கடைந்து தொண்டுபட்டுப்
பொய்ந்நூலை மெய்ந்நூலென் றென்று மோதி
மாண்டு—அவத்தம் போதாதே வமமினெந்தை
யென்வணங்கப் படுவானை—கணங்களேத்தும்
நீண்டவத்தைக் கருமுகிலை யெம்மான் றன்னை
நின்றவூர் நித்திலத்தை—தொத்தார் சோலைக்
காண்டவத்தைக் கனலெரிவாய்ப் பெய்வித்தானைக்
கண்டது நான்கடன் மல்லைத் தலசயனத்தே"

யென்று பாடினர்.

பிறகு சீர்காழிக்குச் சென்று அங்கே தமது விருதுகளைப் பரிவாரங் கள் கூறுவதைக் கேட்டு அங்கிருந்த சைவஸமயாசாரியரான திருஞான ஸம்பந்தமூர்த்திகளின் சிஷ்யர்கள் தடுத்தார்கள். அப்பொழுது இவ்விரு பக்த சிரோமணிகளுக்கும் ஸம்பாஷணை நேர்ந்தது. ஸம்பந்தர் "உமது கவித்திறத்தை நான் அறியும்படி ஒரு குறள்பாடு"மென, ஆழ்வார் காழிச் சீராம விண்ணகரமென்ற திருப்பதியில் விளங்கும் தாடாளப் பெருமானை,

"ஒரு குறளாயிரு நிலமூவடி மண்வேண்டி
யுலகனைத்து மீரடியாலொடுக்கி யொன்றுந்
தருகவெனுமாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன்றாளனை வீர்தக்க சீர்த்தி

யருமறையின பிரானுங்கும் வேள்விகைந்து
மங்கங்களவையாறு மிசைகளேழுந்
தெருவின் மலிவிழாவளமுஞ் சிறக்குங் காழிச்
சீராம விண்ணகரே சேர்மினீரே"

யென்று பாடினூர். அதைக் கேட்ட ஸம்பந்தர் இவரை மெச்சித்தான் வெகு அருமையுடன் வைத்துக் கொண்டிருந்த வேலாயுதத்தை ஆழ்வாருக்குக் கொடுத்து உபசரித்து வழியனுப்பினூர். இதை யாழ்வார் அந்த ஸ்தலத் தின் பாசுரத்தின் முடிவில காட்டி யிருக்கிறூர்.

திருநறையூர் பெருமானிடத்தில் இவருக்குள்ள அளவற்ற அன்பிற் கடையாளமாய் அங்கே 100 பாசுரங்கள் அருளிச்செய்தார். இப்படி யாத்திரை செய்து வருகையில திருவரங்கம பெரியகோவிலுக் கெழுந்தருளி திருவரங் கச்செலவணைபபல முகமாய்ப்பாடி ஈடுபட்டு நிற்கையில நம்பெருமாள் "ஆழ் வாரே நமக்கு விமானம மண்டபம் கோபுரம் பிராகார முதலிய திருப்பணி களை உமது கையால் செய்விக்கத் திருவுள்ளம்பற்றியிருக்கிறேூ"மென்றூர். அவவாஞையைத் தலைமேற கொண்டு ஆழ்வார மஹாபாக்யமென்று தன் மந்திரிகள் நால்வரையும் அழைத்துக் கொண்டு நாகப்பட்டணத்தில் ஓர் பௌத்தராலயத்தில் தங்கவிக்ரஹம் ஒனறு வெகு விசித்ரமாய் அமைக்கப் பட்டு நவரத்னங்களிழைத்து விளங்குவதாய்க் கேளவியுறறு அங்கே சென்று பார்க்கையில், அவவாலயத்திற்கு வாயிலுமில்லை, வழியுமில்லை. பௌத்தர்கள் மாத்திரம போகவர நிலைவறையால் வழிவைத்திருந்தது. யாராவது மேலேறி ஸ்தூபியைப பிளந்து உள்ளே செல்லமுயன்றால் அங்கே ஓர் கொடிய யந்திரம் எபபொழுதும் சுற்றிக்கொண்டு ஸ்தூபியை தொட்டவர்களை உடனே உள்ளே இழுத்துத் துண்டித்து விடும். அங்குள்ள வர்களால் இவவிவரங்களை யறிந்து அதின் ரஹஸ்யத்தை வெளியிடக் கூடிய சிறபாசாரி சிங்களத்திவீபத்தில இருக்கிறூர்களென்றும், அவனை யொருவரும கலைக்காதபடி பௌத்தர்கள் ஆதரித்து வருகிறூர்களென்றும் கேள்வியுறறு அங்கே போய் புத்திசாதுரியத்தால அவனை மயக்கி அந்தச் சூத்திரத்தை யறிந்துகொண்டார். பிறகு நாகபட்டணத்திற்கு வந்து ராத்திரியில் அந்த சூத்திரத்தைக் கண்டுபிடித்து நாசஞ்செய்து அந்த விக்கிரஹத்தை அசுத்தமாக்கி வெளியில் எடுத்துக்கொண்டு ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார். அதைப பொன்னுக்கிப் பெரிய பெருமாளுக்கு விஸ் தாரமாய்த் திருப்பணி செய்து வருகையில் தொண்டரடிப்பொடிகளுடைய திருநந்தவனத்தைத் தப்புவித்து திருமதிளைக் கட்டுவித்தார்.

திருக்குருகூரில் திருப்புளியின கீழ் விக்ரஹமாய் விளங்கும் நம்மாழ் வாரை அடிபணிந்து "சேமங்குருகையோ செய்ய திருப்பாற்கடலோ நாமந்

ராங்குசனோ நாரணனோ—தாமம, துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கும், உளவோ பெருமானுனக்கு" என்றபடி "தேவரீருக்குப் பிரியமான இடம் திருப்பாற்கடலென்றும, திருநாமம் நாராயணனென்றும், தரிபபது திருத்துழா யென்றும், திருததோள்கள் நானகென்றும சாஸ்திரமானுல் இப்பொழுது அதற்கு நேர் எதிரிடையாயிருபபதேனே? இவ்விரண்டில் எதை நான் நியாணிப்ப"தென்று கேட்க, ஸ்ரீ பராங்குசர் அவ்விடததிலேயே வைகுண்டநாதனைய் ஸேவை ஸாதிததார். இபபடித் திருப்பதிகளைத் தரிசிதது அங்கங்கே எம்பெருமானைப்பாடி பெரிய திருமொழியை முடித்தார்.

பிறகு செய்த ஐந்து பிரபநதங்களில் திருநெடுந்தாண்டகததை ரங்கநாதனுடைய ஸந்நிதியில் தேவகானத்துடன் பாட நம்பெருமாள் அதற்கு மனமுகந்து வேண்டிய வரத்தைக்கேளென்றார். ஆழ்வார் "ஸ்வாமி! முன்பு நம்மாழ்வார உமதருளால் வேதங்களின் உட்பொருளைத் தென்மொழியால் பாடின திருவாய் மொழியை மார்கழி மாதத்தில் தேவரீர் அத்யயனோத்ஸவததில் வடமொழி வேதங்களுடன் பாராயணம் செய்யக் கண்டருளவேண்டு"மென்று பிரார்த்திததார. அரங்கன் அவவரமளிக்கப், பரகாலன் நம்மாழ்வாரைத் திருநகரிலிருநது பெரிய கோவிலுக்கு எழுந்தருளப்பண்ணி அத்யயன திருவிழாவை வெகு விமரிசையாய் நடபபித்து அது முடிந்தவுடன் சடகோபரை மீண்டும் குருகூருக்கு எழுந்தருளப பண்ணுவித்தார். இபபடி வெகு நாள வரையில் நடந்தது. பிறகு மஹமதியருடைய கலகத்தால் அது நின்று போக ஸ்ரீமன நாதமுனிகள அதை இப்பொழுது நடக்கும் வண்ணம் மறுபடியும ஏறபாடு செய்தார.

வேறொருநாள் ஸநநிதியில ஸேவிததுக் கொண்டிருக்கையில பெருமாள "ஏன் காணும்! கவலையுறறிருக்கிறீ"ரென, ஆழவார "தேவரீருடைய தசாவதாரததை ஒருங்கே ஸேவிககப பெறறிலேனே" யெனறார். உடனே பெரிய பெருமாள் ஒன்பது அவதாரக் காக்ஷியைக் கொடுக்கப்பரகாலன் "இனி தேவரீா கலியின் முடிவிலெடுக்கும் கலகியின அவதார ஸேவை எனக்குக் கிடைக்குமோ" வெனறார். அரங்கச செல்வனும "நான் அவதரிககும்பொழுது நீர் நமமிடம விக்கிரஹமாயிருந்து ஸேவிக்கலா" மென்றார். அதை யனுசரிததே ஆழவார் தசாவதாரக் கோவிலைக்கட்டி பிரதிஷ்டைசெய்து தம்மையும் அர்சசாரூபமாய் அங்கே எழுநதருளப்பண்ணினர். அதற்கு வடக்கில் சில நிலங்களை வாங்கி அதறகு பாடியவாளன் துறை யென்று பெயரிட்டு அங்கே ஸம்ஸ்கார மடைந்தவர்களுக்குப் பரமபதம் கிடைக்கும்படி பெருமாளிடத்தில் வரம்பெறறார். இப்பொழுதும் அதற்குத் திருமங்கைமன்னன் படித்துறையென்று நாமம் விளங்குகிறது.

பிறகு ஆழ்வார் திவ்ய தேச யாத்திரை செய்து மஹேந்திரகிரிக் கருகில் பத்ராசிரமமென்ற திருக்குறுங்குடியில் எழுந்தருளியிருக்கும் நம்பி

யின் ஸந்நிதியில் சில காலம் யோக நிஷ்டையில் வீற்றிருந்து தமது நூற்றைந்தாவது வயதில் ஸமாதியால திருமேனி நீத்து, எம்பெருமானுடைய திருவடிகளில கலந்தார். கலியின் கொடுமையைக் கடிந்ததால் கலிகன்றியென்றும், திருமங்கை மன்னனென்றும், ஆலிநாடனென்றும், நாலு கவிப் பெருமாளென்றும், பரகாலன், கலியன், நீலன், அருண்மாரி, கொற்றவேலோன், என்றும் பெயருண்டு. இவருடைய சிஷ்யர்களில் யதிராஜன், நீர்மேல் நடப்பான், நிழல் மிதிப்பான, தாளூதுவான், பின்தொடர்ந்துவான், உயரத் தொத்துவான் முதலியவர் பிரசித்தி பெற்றவர். இவருடைய திருவாராதனம் சிந்தைதனக்கினியா. திருக்குறுங்குடியில் இவா நின்ற நம்பி, இருந்தநம்பி, கிடந்த நமபி, திருப்பாற்கடல் நம்பி, திருமலை நம்பி யென்ற ஐந்து நம்பிகளையும் ஸேவித்து, அழகிய நம்பியின் அருளால் நித்யவிபூதியை யடைந்தபடியால், அங்கே கழனிக்காட்டில் இவருடைய ஸந்நிதி ஒன்று ஏற்பட்டு நித்யோத்ஸவம் கொண்டாடப்பட்டு வருகிறது.

## திருவெழுக்கூற்றிருக்கை.

எம்பெருமானுக்குத் திருமதிள்போலே ஆறு பிரபந்தங்களைச் செய்தருளின ஆழ்வார், அதில் விசித்ரமான தன் கவன சக்தியைக் காட்டுகிறார். பலவித பந்தங்களென்று சொல்லப்படும ஸாஹித்ய முறைகளில் இது ரதபந்த மெனப்படும். இதன் இலக்கணத்தை வீரசோழியத்தில் காண்க. இதை திவ்ய பிரபந்த கோசங்களில காட்டியிருக்கும் படத்தில் விரிவாய்க் காணலாம். இது ஆசிரியப்பாவில் இயற்றப்பட்ட 46 அடிகளுள்ளது. இதற்கு எம்பெருமானார் தனியனை அருளிச் செய்திருக்கிறார். அதில் இவ்வாழ்வாரின் நாமங்கள் பலவும் அடங்கியிருக்கின்றன. இதற்குப் பெரிய வாச்சான பிள்ளையின் வியாக்யானமும் ஒரு அரும்பத விளக்கமும் காணப்படுகிறது.

ஸம்ஸாரத்தின் பிரபாவத்தை ஆழ்ந்து நோக்கி மிகவும் மனந்தளர்ந்த இவ்வாழ்வார் இதற்குப் பரிஹாரமாய் எம்பெருமானுடைய குணங்களை நெஞ்சாலே நினைத்தும் வாயாலே பேசியும் திருவடிகளிலே விழுந்தும் தன்னை ரக்ஷித்துக் கொண்டார். அதைக்கண்டு எம்பெருமான் "நீர் இப்படிக்கிடந்து வருந்தும் நிலைமையில் உமக்கு நான் செய்ய வேண்டியதென்ன' வென்றார். உம்மைத் தடையற அனுபவிப்பதற்கு இடையூறாயிருக்கும் ஸம்ஸாரத்தை வாஸனையோடே போக்கித்தர வேண்டு"மென்று ஆழ்வார் விண்ணப்பஞ் செய்தார். எம்பெருமான் "அது நம்மால் செய்யவாவதன்றோ" வென்று பதிலுரைக்க, ஆழ்வார் "உன்னையொழிந்த ஸகல பதார்த்தங்களின் உத்பத்தி ரக்ஷணம் இவற்றிற்கு நீயே உரியவன். யாவராலும் சரணமடையத் தகுந்தவன், எவ்வித ஆபத்துகளையும் போக்கவல்லவன்,

ஆகையால் என் ஸம்ஸார துக்கத்தை நீயே தீர்க்க வேண்டுமேயல்லாது ஏன்னாலாகா"தென்று திருவடிகளில் விழுந்து தம் நிலைமையைத் தெரிவித துக் கொள்ளுகிறார்.

...ல் பகவானுடைய பிரபஞ்ச ஸிருஷ்டி, பிரம்மாவின் பிறப்பு, தசாவதாரங்கள், முதலிய மஹிமைகளை விரிவாய்வர்ணித்து "இப்படிப்பட்ட நீயே திருக்குடந்தை யென்னும் திருப்பதியில் ஆராவமுதவடிவாய் எழுந் தருளியிருக்கிறாய். எனக்கு நேரும் இடையூறுகளை என்னைவிட்டுப் பிரியும் படி உன் இரு திருவடிகளைச் சரணமடைந்தேன். என் ஸம்ஸார பந்தத் தைப் போக்கியருளுவாய்" என்கிறார்.

## சிறிய திருமடல்.

இதுவும் பெரியதிருமடலும் இவ்வாழ்வாரால் இயற்றப்பட்ட பிரபந்தங்களில் பார்வைக்கு சிற்றின்ப ரூபமாயிருந்தாலும், உண்மையாய் ஆழ்ந்த வேதாந்த ரஹஸ்யங்கள் அடங்கினவை. நம்மாழ்வாரால அரு ளிச் செய்யப்பட்ட திருவிருத்தத்தைப போனறவை. தன்னை நாயகியாயும் பகவானை நாயகனாயும் நினைத்து, ஜீவேசுவர ஸம்பந்தத்தையும், ஜீவன் ஈசு வரனை விட்டுப் பிரிந்து படும் துக்கத்தையும், மறுபடியும் அவனுடைய திரு வடிகளைச் சேர்வதையும உபதேசிக்கும் பரம ரஹஸ்ய கிரந்தம். இதை நேராய் அர்த்தஞ் செய்துகொள்ள வேண்டிய முறையைத் திருவிருத்தத் தில் காண்க. இதற்குப் பிள்ளை திருநறையூரறையர்தனியனை அருளிச செய்திருக்கிறார்.

இதுவரையில் ஆழ்வார அநுபவித்தது ஞானநுபவமாகையாலே அதையே வெளிப்படையாயும் அநுபவிக்க ஆசையுண்டாகி, அது கிடை க்காமையாலே திருக்குடந்தையிலே எழுநதருளியிருக்கும் எம்பெருமானைச சரணம் புகுந்தார். திருவெழுகூற்றிருக்கையில், அப்படியும் தன் எண்ணம் நிறைவேறவில்லை. ஆகையால அவனை அடையவேண்டுமெனற ஆசை மிகுந்து கிருஷ்ணாவதாரத்தில் குடக்கூததிலே அகப்பட்டு அவன் கிடைக்காமல், மடலெடுக்கத் துணிநத ஒரு கோபியின் தன்மையைத்தா னடைந்து அந்த நிலைமையை வர்ணிக்கிறா. இதில் இவ்வாழ்வார் தர்மார் த்த காம மோக்ஷமென்றவைகளில் காமத்தையே மேலாகக் கொண்டாடு கிறார். அது பகவானிடத்தில் ஜீவன் வைக்க வேண்டிய அனன்யமான பக்தியென்றே பொருள் கொள்ளத்தகும்.

"இந்தப் பூமியிலுள்ளவர்கள் தேடும் புருஷார்த்தங்களில்காமமென் றதை அடைகிறவர்கள் அதன் அம்சமான தர்மார்த்தங்களையும் அடைவார் கள். வேறு மேன்மையான புருஷார்த்தம் உண்டென்று சொல்லுவோர்

கேவலம் மூடர்களே. என் அநுபவத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். ஸூர்ய மண்டலத்தைப் பிளந்துகொண்டுபோய்ப் பரமபதத்தில் புகுந்து அவ்விடத்தில் அமிருதம் போன்ற பரம புருஷனையடைந்து திரும்பவும் வராமற் போவதென்ற ஒருபொருளுண்டோ. அப்படியிருக்க, அழகான முயலைவிட்டு விகாரமான காக்கையைத் தூக்கிக்கொண்டுபோவது போலாகும். நான் ஒரு நாள் பந்தடித்துக்கொண்டிருந்தபொழுது ஒப்பற்ற அழகும் மேன்மையும்வாய்ந்த ஓர் யௌவனபுருஷன் எல்லோருடையமனதையும் கவர்ந்துகொண்டு இரண்டு குடங்களைமேலெடுத்து வீதியில்கூத்தாடுவதைப் பார்த்து, என் தாயும் மற்றுமுள்ளோரும 'நீயும் பார்க்கவா'வென்று என்னை யழைத்தார்கள். நான் செய்த மஹா பாபத்தால் போனேன். என் நிறத்தையும் கைவளைகளையும் இழந்து காணுதவளானேன், பிறர் சொல்லையும் கேளேன், மதிகெட்டு வாடித்திகைத்து நின்றேன். என தாய் எவ்வளவோ சிகிச்சை செய்தும் பயன்படாமல் புத்தி சிதறி நின்றாள். அப்பொழுது சிலருடைய வார்த்தையைக் கேட்டு கட்டுவிச்சியைத் தருவித்துப் பார்க்கச் சொன்னாள். அவள் ஆவேசமடைந்து, முறத்தில சில நெல்லுகளை இறைத்து வெயர்வை விட்டு, மயிர்க் கூச்சலெடுத்துத் தன் கையை நுகர்ந்து, தனக்குள்ளே இவ்வாறு சொல்லிக் கொண்டாள். "இவளை வருத்தினவன் ஆயிரம் திருநாமங்களையுடையவன்," என்று பிறகு வெளிப்படையாய் "நீங்கள் சிறிதும் பயப்பட வேண்டியதில்லை. அவனுடைய லக்ஷணங்களை உங்களுக்கு எடுத்துச் சொல்லுகிறேன். (இங்கே பகவானுடைய அனந்த கல்யாண குணங்களும் அவதார மஹிமைகளும் வர்ணிக்கப் படுகின்றன.) இவனே உங்கள் பெண்ணுக்குத் தீராத நோயை விளைவித்தானென"ன்றாள். அதற்குக் காரணம் வேறல்லவென்று என் தாய் அறிந்து, "அந்த ஸர்வேசுவரன் என் பெண்ணுக்குத் திருத்துழாயைக் கொடாமலிருப்பானோ, இவள் அவனுக்கு அடிமையன்றோ" வென்று சொல்லிக் கவலை தீர்ந்தாள். நான் அவனுடைய திருமேனியைப் பார்த்த வண்ணமே, உருமாறி பிதற்றிக் கொண்டு திரிந்தேன். எந்தப் பதார்த்தமும் என்னை வாட்டுகிறது. என்மனதை அவனிடத்தில் தூது விட்டேன். அது திரும்பி வராமல அங்கேயே மாண்டது. எனக்குத் துணை யாருமில்லை. ஊரார் உறங்கினும எனக்கு உறக்கமில்லை. என்னைப் போன்ற பெண்கள் பலர் நாயகனைத் தேடிப் போனார்கள். யாராவது அவர்களை நிந்தித்தார்களோ. நான் அவனுடைய திருமேனியை ஸேவிக்க அவன் விளங்கும் திருப்பதிகளுக்கும் போய், அவனுடைய திருநாமங்களைச் சொல்லிக் கூப்பிட்டு அதற்குமேல் ஊரார் பழித்தாலும் நான் பெரிய வீதியில் நீண்ட அழகிய பனை மடலைக் கொண்டு ஊராமல் தவறேன்" என்று இப்படி நாயகியின் துணிவுடன் இந்தச் சிறிய திருமடல் முடிவடைகிறது.

## பெரிய திருமடல்

இது இயற்பாவில் 10-வது பிரபந்தம். இதற்குப் பிள்ளை திருநறை யூரரையர் தனியனை யருளிச் செய்திருக்கிறார். இதற்குப் பெரிய வாச்சான் பிள்ளை வியாக்கியானமும் அரும்பத விளக்கமும் உண்டு. எம்பெருமானோடு கலந்து பிரிந்த ஒரு பிராட்டி; தன் ஆற்றாமையாலே மடலூர்ந்தாகிலும் அவனைக் காணவேண்டு மென்னும் நிலைமை தனக்குப் பிறந்து இவ்வாழ்வார் பேசுகிறார். இதிலும் சிற்றின்ப ரூபமாய் ஜீவேசுவர ஸம்பந்தமும் கைங் கரிய ரூபமான மோக்ஷப் பிராப்தியும் உபதேசிக்கப்படுகிறது. காமமென்ற புருஷார்த்தத்தைச் சிறப்பாக வர்ணித்து மற்றவைகளை வெகு சாதுர்ய மாய்த் தாழ்த்துகிறது.

மோக்ஷ மென்பது இந்த தேஹம் மாண்டபிறகு புருஷார்த்தத்தைக் கொடுக்கு மென்று சொல்லப்படும். அது இந்த தேஹத்தில் நமக்குப் பயன் படாது. இச்சரீரத்திலேயே அந்த ஆனந்தத்தை யனுபவித்தோரா யாரு மில்லை. வெறும் வார்த்தையே, வேறொரு சரீரத்தில் வேறொரு தேசத் தில அனுபவிப்பதாய்ச் சொல்வதைக் கண்டவா யார். அதுவும் ஒரு அனு பவமோ. இந்த ஞாபகம் நாச மடைந்த பிறகு வரும் ஸுகதுக்கங்களால நமக்கென்ன. ஒருவன் தவஞ் செய்து அதின்பயனை வேறொருவன் அடைவது போலன்றோ.

சிலாக்கியமாய் அறுதியான புருஷார்த்தத்தை விரும்பினவன், கீழே விழுந்த பழங்களையும் பழய சருகுகளையும் ஆஹாரமாய்க் கொண்டு, மெய் வருந்தி, இலைகளால் மூடப்பட்ட குடிசையில் தங்கி, வெயிலிலும கானலிலும், இடியிலும் மழையிலும், மலையிலும் குகையிலும் கெட்டலைந்து, இந்தத் தேஹத்தை வாட்டி வதக்கி ஒடுக்கி விட்டுப், பிறகு நித்தியமான புருஷார்த்த த்தை யடைந்தார்களென்று சொல்வதைத் தவிற, அவர் இங்கே போனார், இங்கே யிருக்கிறாரென்று பார்த்துச் சொன்னவர்களுண்டோ? அல்லது அவராவது திரும்பி வந்து தங்களுடைய நிலைமையை நமக்கு அறிவித்த துண்டோ? அவர்கள் இங்கே படும் கஷ்டங்களே நமக்குப் பிரத்யக்ஷம். அப்படி இந்தத் தேஹம் போன பிறகு ஒரு அனுபவமுண் டென்றால் ஸூரியனுடைய மண்டலத்தின் நடுவில் ஒரு சிறு துவாரத்தின் வழியாய்ச் சென்று பரமபதத்தை யடைகிறாரென்று சொல்லுமவர்களில் இக்காலத்தில் இன்னார் அடைந்தாரென்றாவது சொல்லுங்கள். இக் கேள்விக்கு ஸரியான உத்தரம் சொல்லாமல் சும்மா வேதத்தில் சொல்லியிருக்கிறதென்பதையே திருப்பித் திருப்பிக் குருட்டுத்தனமாய்ப் பிறருக்கு உபதேசிப்பதைத் தவிற வேறென்ன கண்டீர். ஆகையால் நான் ஆதியில் சொன்ன மார்க்கத்தை யனுஷ்டித்தவர்கள் இந்திரனுடைய நகரில் மனதால் நினைக்கும் ஸகல

போகங்களையும் குறைவற அனுபவித்துக்கொண்டு, அங்குள்ளோர் போற்ற, ஆனந்தமாய்க் காலங் கழிப்பர். வருந்தி வருந்திச் செய்யும் தர்மத்தினுடைய பயன் இதன்றோ. மேலும் செல்வமும் இப்படிப்பட்டதே. ஆகையால் காமமென்ற புருஷார்த்தத்தை நாம் கைப்பிடித்து நிற்கிறோம். என்னைப் போல் மடலூர்வதையே தர்மமாகக் கொண்டவர் பலர். அந்தச் செய்கையை நிந்திப்பது தமிழ நூலிலல்லாது ஸம்ஸ்கிருத பாஷையில் காண்பதில்லை. இதை ஆதரிக்காதவர்கள் இவவுலகத்தில ஸுகமென்பதையே அறியாதவர்கள், கேவலம மிருகங்கள். ஜனகராஜ புத்ரியான ஸீதை தன் கணவனைப் பலவநதஞ் செய்து பின் தொடரவிலலையோ. வேகவதி யென்றவள் தன் நாயகன தன் தமையனால் அப்புறப்படுத்தப்பட்டபொழுது, தான் பெண்ணென்பதை மறநது, தானே போய் யுத்தகளத்தில் அவனை மணந்து, திரும்பிச் சென்று அவனுடைய சரீரத்தை ஆலிங்கனஞ் செய்துகொள்ளவில்லையா. நாகராஜனுடைய பெண் அர்ஜுனனை வலுவில் வந்தடைந்து மணந்து, தன் நகரத்திற்குக திரும்பிபபோய் மேன்மையுடன் வாழவில்லையோ. பாணாஸுரனுடைய பெண்ணான உஷை அனிருத்தனை வலுவிலெடுத்துவநது மணம்புரிநது, தன் வீட்டிலேயே வைத்துக் கொள்ளவில்லையோ. பார்வதி பரமசிவனைத் தேடிப் போய் அவர்க்காகத் தவஞ்செய்து வலுவில் மணம புரியவிலலையோ. ஆகையால் எனக்கு மாத்திரம் இது பாவமாகுமோ. என்னை வருத்தும் வியாதி அவனைவிட்டுப் பிரிந்திருப்பதே மனதால நினைப்பதறகரிய வீரச்செயல்களைச் செய்த அநதப் புருஷோத்தமனைக் கண்டு என் நிலைமையைத் தெரிவித்தால், என் ஸ்வாமியானவன் தன் கிருபையையும திருமேனியையும் கொடாமலிருப்பானோ? அப்படிச் செய்யாவிட்டால் நான இவவுலகில் ஓரிடம பாக்கியிலலாமற் சென்று, என் நிலைமையையும் அவன் செய்யும கொடுமையையும வாய்திறந்து வெட்கததை விட்டு எடுத்துச சொல்லுகிறேன் அவனுடைய திவ்ய சரிதங்களை நினைத்து முடியுமோ. அழகிய பனை மடலைக் கொண்டு முற்கோலி, நான் லோகமெல்லாம் அறியும்படி மடலூரக்கடவே"னென்ற துணிவுடன் இப்பிரபந்தம் முடிவு பெறும். இவ்விரு திருமடல்களிலுள்ள பாசுரங்களைக் கணக்கிடுவதில் சில அபிப்பிராய பேதங்களுண்டு. இவ்விரண்டையும் ஒவ்வொன்றாய் சிலர் எண்ணுகிறார்கள். சிலர் சிறிய திருமடலை 77½ பாட்டாகவும் பெரிய திருமடலை 148½ பாட்டாகவும் கணக்கிடுகிறார்கள். வேதாந்த தேசிகர் அருளிச் செய்த பிரபந்த ஸாரத்தில் சிறிய திருமடல் பாட்டு முப்பத்தெட்டிரண்டு மென்றும், பெரிய திருமடலைப்பாட்டெழுபத் தெட்டென்றும் பிரித்திருக்கிறார்.

## திருக்குறுந்தாண்டகம்

இது திவ்யப் பிரபந்தத்தில் இரண்டாவது ஆயிரமான திருமொழியில் சேர்ந்தது. இதற்குப் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்யானமும்,

அப்பு அரும்பதமும், ராமானுஜாசாரியரின் உரையுமுண்டு. இதற்குத் திருமொழியின் தனியன்களையே அனுஸந்திப்பது வழக்கம்.

"நிதியினைப் பவளத்தூணை நெறிமையால் நினையவல்லா
கதியினைக் கஞ்சன் மாளக்கண்டு முன்னண்ட மாளும்
மதியினைமாலை வாழ்த்தி வணங்கி யென்மனத்து வந்த
விதியினைக் கண்டுகொண்ட தொண்டனேன் விடுகிலேனே"

அ—து. நாம் நினைத்தபடி யெல்லாம் உபயோகிக்குமபடியான நிதியைப் போன்றவனும், பார்க்கப் பார்க்கத் திகட்டாத அழகுடையவனும், யாவையும் தாங்குகிறவனும், அவனைப் பக்தியுடன் நினைக்க வல்லவர்க்குப் பரகதியாய், கம்ஸனைக் கொன்று ஸாதுக்களை ரக்ஷித்தவனுய்த் தன்னை யண்டினவரிடத்தில் அளவற்ற அன்புடையவனும், விளங்கும் ஸர்வேசுவரன், என்னுள்ளத்தில் வந்து புகுந்து ஸேவை ஸாதித்தான். என் புண்ணியத்தின் பயனே உருவெடுத்தது போல் எழுந்தருளின அமுதைக் கண்ணாரக் கண்டனுபவிக்கப் பெற்ற அடியேன், இனி ஒருக்காலும் விடமாட்டேன்" என்று ஆரம்பித்து இந்தப் பிரபந்தத்தில் மதுஸூதனன பஞ்சபூதங்களிலும அவைகளாலுண்டான பதார்த்தங்களிலும உள்ளும் புறமும ஊடுருவி அந்தர்யாமியாய் விளங்குகிறுனென்கிறார். அவனைத் திருமாலிருஞ் சோலையில் அனுபவித்ததை வர்ணிக்கிறார்.

4. ஸ்வாமி! அடியேன் ஒருவிஷயத்தைக் கேட்க விரும்புகிறேன். முன்பு வராஹ மூர்த்தியாய் இவ்வுலகைத் தூக்கி யெடுத்த திருக்கோலத்தைக் கண்டு களித்து மனோவாக்குக் காயங்களால் போற்றி யனுபவிக்கப் பெறுவேனா. அவ்வனுபவம எவ்வளவு இனியது.

7 இம்மை மறுமையில் ஸகல க்ஷேமத்தையுந்தானே கொடுப்பவனுய் விளங்கும் உபய விபூதி நாதன் திருவரங்கத்தில் அடியார்களுக்கெளியனுய விளங்குகிறுன். அந்தத் திருவேங்கட முடையானுடைய ஸௌலப்யத்தை நினைக்க வல்லவர்களின் பாததூளி என தலையில் இருக்கக் கடவது.

8. அந்தக் காரொளிவண்ணனை கண்ணனை, தித்திக்கும் தேனமுதை, ஆசிரயித்து வாழமாட்டாதவர்கள், இந்த மானிட ஜன்மம கிடைப்பதரிதென்று நினைப்பதில்லை. ஐயோ! இந்த மாம்ஸ பிண்டத்தில் என்றென்றும் வாழவேண்டுமென்று ஸாதனங்களைத் தேடுகிறார்கள்.

9 என் மனதோ ஓரிடத்திலும் நில்லாது. கொழுந்துவிட்டெரியும் நெருப்பின்மேல் கிடந்து துடிக்கும் எறும்புபோல் இந்தப் பிறவித் துய

ரத்தை நினைத்து நடுங்குகிறது. ஸ்வாமி! எந்த நிலைமையிலும் உம்மைத் தவிற எங்களுக்கு வேறு துணையில்லை.

10. மஹா பாபியான என்மனம் ஓரிடத்தில நாடுவதில்லையே, என்ன செய்வேன்? ஆபத் பாந்தவனே! உன்னிடத்தில் இடைவிடாத பக்தியைச் செய்யும்படி அருள்புரியும். உன் திருவடிகளில் கைங்கரியம் செய்வதைத் தவிற மற்றொன்றை யறியேன்.

12. என் னுயிரை, மனக்கோயிலில் எழுந்தருளி யிருக்கும் அடியார்க் கெளியனை, இந்த அசுத்தமான சரீரத்தையும் பிறரைத் துதித்து நாறும் வாயையு முடைய மகாபாபியான நான் துதிக்கத் துணிந்து திருமந்திரத்தைச் சொன்னேன். ஐயோ! என்ன அபராதஞ் செய்து விட்டேனென்று விஷய ஸுகங்களில் மூழ்கின நான் அஞ்சினேன். கண்ணன் வந்து பயப்படாதே யென்று என் கண்ணுக்குள் விளங்கினார்.

13. பழுக்கப் பழுக்கக் காய்ச்சின இரும்பு குடித்த ஜலமும் வெளி யில வந்துவிடும். நான் செய்து அனுபவிக்காமல் தீராத பல பாபங்களும் என்னைவிட்டுப் போயின. திருவரங்கத்தில் விளங்கும் திருமாலை இடை விடாமல் ஸேவித்து, என கண்கள் களித்தன.

14. அழகுவாய்ந்த மாதர்களின் சேர்க்கையையே நினைத்துக் கொண்டு, அநேககாலமாய் அந்தப் படுகுழியிலேயே கிடந்து தேறி னேன. திருக்குடந்தையில வாழும் என அப்பன் ஸகல பாபத்தையும் போக்குவா னென்று நினையாமல் கெட்டேன்.

15. இனி திருவயோத்தியில் எழுந்தருளியிருக்கும் சக்ரவர்த்தி திருமகனுக்கு என எலும்பெல்லாம் உருகி இறறுப்போய, என மனமென்ற பிரேமத்தாலே ஞானமென்ற தீர்த்தத்தைக் கொண்டு அடியேன திருமஞ் ஜனம் செய்விப்பேன.

16. பொனமானைத் தொடர்ந்தவனை மருதமரங்களை முறித்தவனை, கடல் கடைந்து அமுதம் கொடுத்தவனை அடியேன் பரிசுத்தமாய்ப் பாமாலை களால் அலங்கரிப்பேன.

17. எம்பெருமானுடைய பெருமையை வாயவிட்டுப் புகழ்ந்தவர் பிறவிக் கடலைக் கடந்தார்கள். அவனை யேசின சிசுபாலாதிகள் நற்கதி யடைந்தார்கள். இப்படிச சொல்லுவது வழக்கம். நானும அவனைப் புகழ்ந்தேன். இகழ்வதறகு ஸமர்த்தனல்ல. ஆனால இந்த வாழ்க்கையை யொழிப்பதற்கு அவனையே ஆசிரயிக்கவேண்டுமென்று துணிவு வரவர வளர்வது ஸத்தியம்.

20. "வானவர் தங்கள் கோனும் மலர் மிசையயனும், நாளும்
தேமலர் தூவியேத்தும் சேவடிச் செங்கண்மாலை
மானவேல் கலியன் சொன்ன வண்டமிழ்மாலை நாலைந்து
ஊனமதின்றி வல்லாரொளி விசும்பாள்வர்தாமே"

அ-து:—தேவேந்திரனும் நான்முகனும் நாள்தோறும் மணமுள்ள புஷ்பங்களைக் கொண்டு வந்து அர்ச்சித்துத் துதிக்கப் படுகிறவனுய் சிவந்த பாத கமலங்களையும் செந்தாமரைக் கண்களையு முடையவனுய், அடியார்க்கெளியனுன கண்ணனைத் திருமங்கை யாழ்வார் பூஜித்த தமிழ்மாலையான அந்த இருபது பாட்டுகளையும் வேறு பயனை விரும்பாது கற்றவர்கள் சுடரொளியாய் விளங்கும் திருவைகுண்டத்தைத் தமதாய் ஆளப்பெறுவார்கள்.

## திருநெடுந்தாண்டகம்

இது இரண்டாவதாயிரமான திருமொழியில் சேர்ந்த பிரபந்தம். இதற்கு மேற் கண்ட தனியன்களும் உரைகளுமுண்டு.

இதில் 21-வது பாசுரமான "மைவண்ணன்" என்பதற்கு விஸ்தாரமாய் உரையெழுதப்பட்டிருக்கிறது. அதைத தவிற பட்டர் அருளிச்செய்த தனி வியாக்கியானமுமுண்டு. அதில் நாயகனுடன் கலநது பிரிநது அந்தப பிரிவை ஸஹிக்காமல் வருந்தும் ஒரு தலைவி உபாயத்தால் பூந்தோட்டத்தில் மலர் கொய்வதற்குச் சென்றாள். அதையறிந்த நாயகனும் வேட்டையாடுவதற்கென்று அங்கே வர அவர்களின் உபாயம் பலித்து மனோரதங்களும் நிறைவேறின. நாயகன் போன பிறகு இதற்குக் காரணமான தோழி நாயகியிடத்தில் வந்து அவன் என்ன செய்தானென்று கேட்க, நாயகி இப்பாட்டால் அதை வர்ணிக்கிறாள்.

இந்தப் பிரபந்தத்தில் முதல் பத்தும் ஆழ்வாருடைய அனுபவத்தை வெளியிடும் பாசுரம். இரண்டாம் பத்து திருததாயார் பாசுரம். மூன்றும் பத்து நாயகியின் பாசுரம். முதல் பத்தில் கீதவாக்கியத்தின் முதல் பாகமான 'மச்சித்தாஹ' (என்னிடத்திலேயே செலுத்தின சித்தத்தையுடையவர்களாய்) என்றதின் உரை. இரண்டாம் பதது 'மத்கதப்ராணாஹ' (என்னிடத்தில் நாடின உயிரை யுடையவர்களா) யென்றதின் உரை. மூன்றும் பத்து 'போதயந்தஹ பரஸ்பரம்' (ஒருவர்க்கொருவர் அவனுடைய கல்யாண குணங்களை எடுத்துரைப்ப) தென்றதின் உரை.

முதல் பத்தாலே திருமந்திரார்த்தமும், இரண்டாம் பத்தாலே த்வயத்தின் அர்த்தமும், மூன்றும் பத்தாலே சரமசுலோகத்தின் அர்த்தமும் விளக்கப்பட்டன.

முதல் பத்தில் பக்தியும, இரண்டாம் பத்தில பிரபத்தியும், மூன்றும் பத்தில் பிராட்டியின் புருஷகாரமும் உபதேசிக்கப்படுகின்றன.

முதல் பத்தில் பிரணவமும், இரண்டாம் பத்தில் நமஹ என்ற பதமும், மூன்றும் பத்தில் 'நாராயண' வென்ற பதமும் வியாக்கியானஞ் செய்யப்பட்டன.

முதல் பத்தில் அகாரமும், இரண்டாம் பத்தில் உகாரமும், மூன்றும் பததில் மகாரமும் தெளிவாய் ஆதரஞ செய்யபபட்டன.

முதல்பததில் அவனில்லாதபொழுது அவனைக் காணவேண்டுமென்ற ஆசையும், இரண்டாம பத்தில் அவனைக் கண்டவுடன் கட்டியணைத்துக் கொள்ள வேண்டுமென்ற நினைவும், மூன்றும் பததில் சேர்ந்தனுபவித்த பிறகு என்னை விட்டு நீ போகக்கூடாதெனறு தடுப்பதும் விளங்கு

முதல் பததில் எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளைச் சொல்லிற்று. இரண்டாம்பததில் அவனைப் பிரிநது கலங்கினபடி சொல்லிற்று. மூனறும் பததில் கிலேசம தீர்நது அவனையடைந்தபடி சொல்லிற்று. (மேற் சொன்னதில் சுருக்கமாய் அடங்கி யிருக்கும் பல அரிய ரஹஸ்யங்களை வியாக்கியானததில் விரிவாய்க் கண்டு கொள்க) இந்த ஒரு பாசுரத்திறகு 45-பக்கங்கள உரை எழுதப்பட்டிருக்கிறது.

இந்த ப்ரபநதத்தில் சில அரிய பாசுரங்களை மாத்திரம் இங்கே எடுத்துச் சொல்ல முடியும.

2. பாருருவி நீரெரி கால் விசும்பு மாகிப்
பல்வேறு சமயமுமாய்ப பரநது நின்ற
ஏருருவில் மூவருமே யென்ன நின்ற
விமையவா தந்திருவுருவேறெண்ணும் போது
ஒருருவம் பொன்னுருவ மொன்று செந்தீ
யென்றுமா கடலுருவ மொத்து நின்ற
மூவுருவுங் கண்டபோ தொன்றாஞ் சோதி
முகிலுருவமெம் மடிகளுருவந்தானே.

அ-து:—அழகிய பிராணிகளில் மூவரே முதல்வர். அந்த பிரஹ்மவிஷ்ணு ருதர ரூபங்களைப் பிரித்துப் பார்க்கும பொழுது நான்முகனுடைய ரூபமு பொன்னைப் போன்றது; ருத்ரனுடைய ரூபம் சிவந்த அக்னியைப் போன்றது; திருமாலின் உருவம் பெரிய கடலை யொத்தது. சேர்ந்து நிற்கிற மூன்று ரூபங்களையும் பிரமாணததாலே பார்க்கும்பொழுது பஞ்சபூதங்களைப் படைத்தும், அவைகளின் சேர்க்கையால் ஜகததை யமைத்தும், அதில் அந்

தராத்மாவாய் ஊடுருவிநின்றும் விளங்குகிறவன் யாரென்று உண்மையை, விசாரித்தால் பரவொளியாய் ஒருவனாய் நிற்கும் நீலமேகசியாமளனான என் கண்ணனே ஸர்வேசுவரனென்று ஏற்படுகிறது.

10. இகழ்வையே உருவமாயுடைய அடியேன் உன்னை என்னுடைய 'ஆனாய் ஆனா'யென்று கூப்பிடுவதைத்தவிர, உன்னிடத்தில் அதிசபலனான நான் உன் குணங்களில் எதையறிவேன்.

11. என் பெண்ணானவள் பட்டுச்சீலைகளைத் தரியாள்; மோஹித்து அலமல நின்றாள், மரப்பாச்சியை ஆதரியாள், குளிர்ந்து நீண்ட கண்களில் நீர்ததும்ப நின்றாள்; தூங்கியறியாள், ஒரு க்ஷணமேனும் என் மடியில் தங்கியிருக்கப் பொறாள், என்னைப் பிறக்கில்லாமல் செய்த ஸர்வேசுவரனுடைய கோயில் எங்கே எங்கேயென்று பிதற்றுகிறாள். இப்படி என் பெண்ணைச் செய்த கள்வனை யாரென்று கண்டுபிடித்து உண்மையைச் சொல்லக்கடவாயென்று கட்டுவிச்சியைக் கேட்க, அவள் கடல் வண்ணனே இப்படிச் செய்தானென்றாள். தோழீ! இந்தத் துயரத்தைத் தீர்க்கவல்லவா வேறு யார்?

12. மனம் நீராயுருகி அசைவற்று நிற்கிறாள். நெடுமூச்சு விடுகிறாள். மோஹத்தில் ஆழ்கிறாள். ஊணுறக்கத்தைத் துறந்தாள். திருவனந்தாழ்வான் மேல் பள்ளிகொள்ளும் என திருமாலே யென்று இரவும் பகலும் கூவியழைக்கிறாள். அந்தத் திருவாலிநாதனுடைய கோயிலில் போய் அவனை அடையப்பெறுவோமோவென்று பிதற்றுகிறாள். இப்படி எனக்கடங்காத பெண்ணைப் பெற்றேன். இவ்வுலகில் ஒப்பற்ற பழியைப் பெற்றேன். இது நான் செய்த பாவமே.

21. மைவண்ண நறுங்குஞ்சி குழல் பின்தாழ
மகரஞ்சேர் குழையிரு பாடிலங்கி யாட
எய்வண்ண வெஞ்சிலையே துணையாயிங்கே
இருவராய் வந்தாரென் முன்னே நின்றார்.
கைவண்ணந் தாமரை, வாய் கமலம் போலும்,
கண்ணிணை யுமரவிந்த, மடியுமஃதே,
அவ்வண்ணத்தவர் நிலைமை கண்டுந் தோழீ!
அவரை நாம் தேவரென்றஞ்சினோமே.

அ-து. கறுத்த நிறத்தையுடையதாய்ப் பரிமளம் மிகுந்ததாய் அலகலகாயுள்ள திருக்குழல்கற்றை பின்னே அலைய, இருபுறத்திலும் மகரகுண்டலங்களணிந்த காதுகள் பிரகாசித்துக்கொண்டு அசைந்துவர, தன் வில்லையே துணையாகக்கொண்டு இந்தத் திருமணக் கொல்லையில் தாமும் இளைய பெருமாளு

மாக அவர் வந்தார். அதை எதிர்பார்த்திருந்த என் முன்னே வந்து நின்றார். அவருடைய திருக்கைகள கமலத்தை யொக்கும்; திருப்பவளச் செவ்வாய் தாமரையை யொக்கும், திருக்கைகளும் திருவடிகளும் அந்நிறமே. அவ்விதமான மணிவண்ணனுடைய நிலைமையைக் கண்டவுடன், தோழி! அவரைப் பரதேவதை யென்று பயப்பட்டோமே. (இதற்கு விஸ்தாரமான வியாக்யானத்தைப் படிப்பது அவசியம், ஆயினும் இந்தப் பிரபந்தத்தின் பொதுக்கருத்தைச் சொல்வதை இங்கு கவனிக்கலாகும். பராசரர் வியாஸர் முதலிய ரிஷிகள் ஞானோபதேசகர்கள், முதலபத்தில சொல்லும் விஷயம் அவர்களுடைய ரீதியாயிருக்கும். ஆழ்வார்கள் எம்பெருமானைப் கூடிப்பிரியும் ஸமயக துக்கங்களையே அனுபவிக்கிறவர்கள், இரண்டாம் பத்து அவர்களுடைய ரீதியாயிருக்கும். பிராட்டியார் தங்களுடைய அனுபவத்தைப் பிறர்க்கு எடுத்துரைப்பதே பிரதானமாயுடையவர்கள். மூன்றும் பத்து அவர்களுடைய ரீதியாயிருக்கும்.)

29 தண் குடந்தைக்கிடந்த மாலை நெடியானை யடிநாயேன் நினைந்திட்டேனேயென்று இவ்வாழ்வார் இந்தப் பிரபந்தத்தை தலைக்கட்டினார். நம்மாழ்வாரோ, அதனிற்பெரிய வென்னவாவென்று திருவாய்மொழியை முடித்தார். இதற்குக் காரணமென்னவென்றால், உலகவாழ்க்கையில் வைராக்கியம் சடகோபருக்குத் துளஸியின் மணம்போலே இயற்கையாய் விளங்கிறது. ஆகையால் எம்பெருமானிடத்தில் பிரேமையையுண்டாக்குவதையே பிரயோஜனமாய நாடியிருந்தார். ஆகையால் அதனிற்பெரிய வென்னவாவென்று பாடினார். இவ்வாழ்வாரோ மங்கையர் வலையில கட்டுண்டு பிறர்பொருளை அடித்துப் பறிக்கும் கொடிய செயலுடையவராய் முனனிருந்தபடியால், ஸம்ஸாரத்தில் வெறுப்பும ஸ்ரீபதியின திருவடிகளில் பக்தியும் தனக்கு அவனால கிடைத்ததை நினைந்து, அடிநாயேன நினைந்திட்டேனே யென்று விண்ணப்பம் செய்வதே அவசியமாயிற்று. ஆகையால் அவ்வாழ்வாரை அப்படியும இவரை இப்படியும் பாடும்படி செய்தவன் திருமாலே. மேலும், ஆரம்பத்தில இவரிடத்தில் யாதொரு யோக்யதையும் காரணமுமின்றி ஈசுவரனுக்குப் பிறந்த அருள், என்றும் இருக்க வேண்டுமென்று நினைந்திட்டேனே யென்று முடித்தார்.

## பெரிய திருமொழி

இது 1084 பாசுரங்களுள்ளது, பிரபந்தங்களில் பெரியது; பல வகை கவன சாதுரியம் வாய்ந்தது. இதற்குத் திருக்கோட்டியூர் நம்பியும் எம்பெருமானாரும் ஆழ்வானும் எம்பாரும் தனியன்களை அருளிச் செய்திருக்கிறார்கள். இதற்குப் பெரிய வாச்சான் பிள்ளையின் வியாக்கியானம் உண்டு. இவ்வாழ்வார் ஆத்மாவை வெயிலிலே வைத்து உடம்பை நிழலிலே

வைத்தவர். அதாவது, பகவத விஷயத்தில் முதலிலே ஈடுபடாமல் விஷய சுகங்களிலேயே ஈடுபட்டவர். ஈசுவரன் இவரைக் கடாக்ஷித்து "இவர் கண்ணால் காண்கிற விஷயங்களுக்கு சமமாய் நம்மையும் அவைகளுடன் பொருட்படுத்தினால் நம்மை விரும்பாம லிரார்" என்று தான் உகந்தருளின திருப்பதிகளிலே வந்து எழுந்தருளி, இவரை ஆட்கொண்டு தன் படிகளை அடையக்காட்டிக்கொடுத்து, தன்னாலல்லது செல்லாதபடி பண்ணி, இவரை அனுபவிக்கும்படி செய்து, இங்கே யிருந்தே பரமபதத்திலுள்ளாருக்கு சமமாகச்செய்து, அந்தத் தேச பிராப்தியையும் இவருக்குப் பண்ணிக் கொடுத்தாரென்பதே இந்த பிரபந்தங்களின் கருத்து. இவரிடத்தில் விளங்கும் ஜீவகாருண்ணியமும் விஷய சுகங்களில் வெறுப்புமே இவரை மீட்பதற்குக் காரணங்களாயின. இவர் பரம ரஸிகராகையாலே ஈசுவரனுடைய மேன்மையை நன்றாயறிந்தவர். அனாதிகாலமாய்ப் பண்ணின பாபத்தைத் தன் கருணைக்கு இரைகொடுத்தது, தனக்கு வாசகமான திருமந்திரம் முன்னாகத் தன் சொரூப ரூபகுண விபூதிகளை அடங்கக் காட்டிக்கொடுத்தார். ஆழ்வார் அவைகளைக் கண்டனுபவித்து, அயோக்கியனான என்னை அது தானே ஹேதுவாக ஆட்கொண்டானென்று நன்றியறிவுள்ளவராகையாலே ஒருகால் சொன்னதை ஒன்பதினகால் சொல்லிக் கூப்பிடுகிறார். பகவத் விஷயத்தில் நாம் செய்யக்கூடியதொன்றுமில்லை, செய்ய வேண்டுவதும் ஒன்றில்லை, அவன் பண்ணின உபகாரத்திற்கு நன்றி மறவாதிருந்தால் போதும்.

I. 1. (வாடினேன்) இவ்வாழ்வார் ஸர்வேசுவரனை ஸாக்ஷாத்கரித்த பிறகு, தான் அதற்கு முன்னிருந்த நிலையை யெல்லாம் நினைத்து நினைத்து "எனக்கும் இந்தபாக்கியம் கிடைத்ததே" யென்கிறார்.

I. 2. (வாலி) பரவியூக விபவ அந்தரிய பாவங்களைச் சேதனர் அறியமுடியாதே கிடப்பதைக்கண்டு ஈசுவரன் அர்ச்சாவதாரத்திலிறங்கித் திருப்பதிகளில் விளங்கும் சீலத்தையும் ஸௌலப்யத்தையும் கண்டு, இவ்வாழ்வார் அங்கங்கே சென்று, அவனை அனுபவித்து, மங்களாசாஸனம் செய்கிறார். இமயமலைக்கருகிலுள்ள திருப்பதியிலிருந்து திருவணை வரையிலுள்ள திவ்ய ஸ்தலங்களில் இவர் புகுந்து அனுபவித்தவர்.

I. 3. (முதுகுபற்றி) தன் மனம் நல்லுபதேசத்தைக் கேட்டு விரைவாய்ச்செல்லாததால் "இந்தத்தேகம் ஸ்திரமல்ல, நோய், மூப்பு, பசி, தாகம், துன்பம் முதலியவைகளால் பீடிக்கப்படுவது. இவை மேலோங்குமுன் அவனை ஆசிரயிப்போ" மென்கிறார்.

I. 6. (வாணிலா) தன்மனம் தனக்குக் கட்டுப்பட்டும் தான் முன்னிருந்த நிலைமையையும் செய்த பாபங்களையும ஹிம்சையையும் நினைத்

தப பயந்து, எனக்கு வேறு கதியில்லையென்று நைமிசாரணியத்தில் விளங்கும் எம்பெருமானைச் சரணம் புகுகிறார்.

I. 9. (தாயே தந்தை) கைங்கரியத்தை விட மனமில்லாதவராய் "என் பாபங்களைப் பார்த்தால் சத்துருக்களை மித்திரர்களாய் நினைத்தும் துன்பங்களை இன்பமாய் நினைத்தும் பிறரை வருத்தியும் ஜீவகாருண்யமின்றியும் உன்னை நினைக்காது மற்றவைகளை நினைத்தும் காலம் போக்கினேன். ஆயினும் இப்பொழுது தேவரீரையே வந்தடைந்தேன். என் குற்றங்களைப் பொறுத்தருளுவதற்குப் பிராட்டி இருக்கையில், என்னை உபேக்ஷிக்கலாமோ"வென்று அலர்மேல்மங்கையைப் புருஷகாரமாக்கிக்கொண்டு சரணம் புகுகிறார்.

I. 10. (கண்ணா) "என் விரோதியைப் போக்கித் தரவேணும். உன்னாலல்லது செல்லாமையைப் பிறப்பிக்கவேணும்"மென்று இவர் அபேக்ஷிக்க, ஈசுவரன் அப்படியே செய்தானென்றது. பிரபன்னனுக்கும் பக்தியுண்டு, பக்திமானாகிற அதிகாரிக்கும் உண்டு.

II. 1 (வானவா) இப்படி பகவத் கைங்கரியத்தில் பிரேமை பிறந்ததற்குக் காரணமென்னவென்று ஆழ்வார் விசாரித்து, அதுவும் அவனுடைய அருளேயென்று மகிழ்ந்து, "நெஞ்சே! உன்னாலல்லோ இந்தப் பாக்கியம் உண்டாயிற்"றென்று கொண்டாடுகிறார்.

III. 2. (ஊன்வாட) விரோதியான தேகத்தைக் கழித்துப் பகவானை அடைய வேண்டியிருப்பவர்களுக்கு 'நீங்கள் விரதம், நியமம், உபவாஸம், கடுந்தவம் முதலிய முறைகளால் சரீரத்தை வாட்டி ஒடுக்கி வருத்தவேண்டாம். பரம ஸுலபனாய கருணாமூர்த்தியாய் நமக்காக வைகுண்டத்தை விட்டுத் திருச்சித்திரகூடத்தில் வந்தெழுந்தருளியிருக்கும் எம்பெருமானைச் சரணமடையுங்கள்'ளென்கிறார்.

III. 5. (வந்துனதடியேன்) 'பரம புருஷனான நீ என்னிடத்தில் யாதொரு யோக்கியதையும் இல்லாததைக் கண்டும் என் மனத்தில் குடிகொண்டாய். எனக்கு உன்னையொழியச் செல்லாமையைப் பிறப்பித்தாய். இனி நீ என்னைவிடில் பிழையேன். உன்னைப் போகவொட்டேன். என்னைக் காட்டிலும் எளியவன் உனக்குக் கிடைப்பானோ? ஆகையால் என் நித்ய கைங்கரியத்தைக் கொண்டருள வேண்டு'மென்கிறார்.

III. 6. (தூவிரிய) நஞ்சீயருடைய தேஹம் நோயால் மெலிந்து கிடக்கையில் ஒருவர் அவரைத் தண்டன் ஸமர்ப்பித்து "இங்குத் தைக்கு வேண்டியிருக்கிறதென்"னென்று கேட்டார். அதற்கு அவர் "தூவிரிய மலருழக்கிப் பாட்டுக் கேட்கவும், பெருமாள் எழுந்தருள

பின்னும் முன்னும் சுற்றும் வந்து திருவடி தொழவும் வேண்டியிரா நின்றேனென்"ன்றார். அப்போதே வரந்தரும பெருமாளரயரை அழைத்து விட்டுப் பாட்டு கேட்டருளா நிற்க "மீனைய கொடி நெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ" என்னுமளவிலே வந்தவாறே "காமசரங்களாலே ஏவுண்ப தற்கு முன்பே வராவிட்டால் பட்ட புண் பரிஹரிக்கவாகிலும் வந்தா லாகாதோ" வென்று அருளிச் செய்தார்.

VI 2. (பொறுத்தேன்) ஸம்ஸாரத்தில் தனக்குண்டான வெறுப்பை விண்ணப்பஞ் செய்தும், அவன விரைவில் வந்து அதைத்த தீர்க்காததால், தன் பூர்வ சரித்திரத்தை நினைத்து 'என் குற்றங்கள் ஒன்றையும் பாராதே தேவரீருடைய திருவருளையே பார்த்துப பிராட்டி புருஷகாரமாக என்னை யாட்கொள்ள வேண்டுமெ'னறு சரணம புகுகிறா.

VI. 3. (துறப்பேன்) "உன்னை மறவாதிருக்கையாகிற இன்பத்தை மறந்தேனல்லேன். அதைத்த தவிர மற்ற இன்பமெல்லாம வேண்டாம" என்கிறார்.

VI. 4. (கண்ணுஞ் சுழன்று) தேகம மெலிந்து ஒடுங்கி ஆவியும் குன்றிப் புத்தியும் தடுமாறு முன் எம்பெருமானை, நெஞ்சமே! சரணம் புக லாகாதோ வென்று எசசரிக்கிறார்.

VII. 1. (கரவாமட) உகந்தருளின நிலங்களில் தன் நிலைமையைக் காட்ட, ஆழவார் எல்லாம் பெறறவராய்க் கிருதார்த்தராகிறா.

VII. 2. (புள்ளாய) இந்தப பாபரூபமான சரீரத்தைக் கொண்டே பெ ரும் பதவிக்கு ஆளாகப பண்ணியருளினானென்று போறறுகிறார்.

VII. 4. (கண்சோர) கண்ணனுடைய திருவடிகளிலேயே நாடின முக்கரணங்களையு முடைய ஸ்ரீ வைஷ்ணவாகளே தான போற்றும் தெய்வ மென்று பாகவத சேஷத்தைக் கொண்டாடுகிறா.

IX. 7. (தந்தைதாய்) 'ஐசுவரியம் தேகம் முதலியவை நித்திய மென்றும் உன்னைக் கடைத்தேறறு மென்றும், நெஞ்சே! நீ நினைத்திருந் தால், அந்நினைவை விடு. அதை நொந்து பழித்துத் திருமாலை யருவெ' ன்று எச்சரிக்கிறா.

X. 1 (ஒருநல்) வாடினேனென்று தொடங்கி இவ்வளவும் திருப் பதிகளை அனுபவித்த ஆழ்வா, மங்கைப் பருவம வாய்ந்த பெண், பிறந் கத்தினின்றும புக்ககத்திறகுப் போகும்போது, தன் உறவு முறையார்களி டத்தில் போய்ச் சொல்லிக்கொண்டு புறப்படுவது போல், இவ்வாழ்வார்

சில திருப்பதிகளிலே புகுந்து எம்பெருமானை அனுபவித்து மங்களாசாஸனம் செய்கிறார்.

X. 2. (இரக்கமின்றி) X. 3 (1) ஏத்துகின்றோம இவவாழ்வார் ராமனால் தோற்ற ராக்ஷஸர்களின தசையை அடைநது எமபெருமானைக் கொண்டாடி அனுபவிக்கிறார்.

X. 4, 5, 6, 7, 8, 9, 10, இவை கண்ணனுடைய பால லீலைகளையும், கோபிமாருடன கூடிக்குலாவினதையும் சொல்லும். இவற்றில் 'காதிற் கடிப் பெ'ன்ற எட்டாவது திருவாய்மொழி வெகு ஆச்சரியகரமானது.

XI. 4. (நிலையிடம்) மஹா விஷ்ணுவின் பதது அவதாரங்களின் சிறப்பு.

XI. 5. (மானமரும்) அந்தச் சிறபபை அனுபவிதது அதிலீடுபட்டு ஆழ்வார் தன்னை மறநது, ஒருததி அவனுடைய தாழ்வுகளைச சொலல, மற்றொருததி அவன் தாழ்வுகள் செய்தானாகிலும நித்தியஸூரிகளுக்கு மேலானவனென்று அவனுடைய மேன்மைகளைச சொலலுகிறதாக, இரண்டு பிராட்டியார் பேச்சாலே அவனுடைய கலயாண குணங்களை வர்ணிக்கும் திருச்சாழலாகும.

XI. 6. (மைந்நின்ற) 'மானிடர்களே! இதர தேவதைகளை யண்டிப் பிழைக்கும நீங்கள் கெடுவீர்காள. அவைகளுக்கும என் பரமபத நாதனுக்கும் ஒப்புண்டோ? இவனையே சரணம் புகுங்களெ'னகிறார்.

XI. 7. (நீணாகம்) அவனைப் போற்றுவதறகாக அவன் கொடுதத அவயவங்களைக கொண்டு அவன செயலகளை அநுபவிககாமல, விஷய சுகங்களிலே ஈடுபட்டுத திரிகிறவர்களுடைய தேகமும அவயவஙகளும் வீணே யென்கிறார்.

XI. 8. (மாறறமுள) இபபடிப் பிறரை நிந்திதத இவர, தனனிலைமையைப் பார்தது, இந்த ஸமஸாரத்தை ஒழிபபது நமமாலாகுமோ? அதுவும் அவனே செய்துகொள்ள வேண்டும், 'அதறகு விரோதியான தேக சம்பநதததை அறுதது தநதருள வேண்டுமென்று திருவடிகளிலே விழுந்து சரணம் புகுகிறார். இநதப பதது்ம் மனதை உருக்கும பாசுரங்கள். சாறறுப் பாட்டுகளாகும்.

அடியிற்கண்ட பாசுரங்களில் இவ்வாழ்வார் பக்தி மிகுந்து தன்னை மறந்து, முன்பு ஆயர்பாடியில கோபியர் கண்ணனிடததில் வைத்திருந்த காதலையும் அடைந்த பாக்கியததையும தாமும் அனுபவிபபவராய், பிராட்டி, திருத்தாயார், தோழிமார் முதலியவருடைய வார்ததைகளால் வெளியிடு

கிறார்:— II. 7. "திவளும்," 8. "திரிபுரம், III. 6. "தூவிரிய", 7. "கள்வன்", IV; 8 "கவளயானை", V. 5. "வெருவாதாள்", VII. 5. "தந்தைகால்"; VIII. 1. "சிலையிலங்கு", 2. "தெள்ளியீர்", 3. "கரையெடுத்த", 4. "விண்ணவர்" 5. "தந்தை", IX. 2. "பொன்னிவர்", 3. "தன்னை" 4, காவா", 5. "தவள விளம்பிறை" 9. "மூவரில்" X. 9. "புள்ளுருவாகி" 30. "திருததாய்", XI. 1. "குனறமொனறு", 2. "குன்றமெடுத்து", 3. "மின்னிலங்கு",

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



# நம்மாழ்வார் வைபவம்.

ஆழ்வார்களில் ஸ்ரேஷ்டரான இவர் கலியுகம் பிறந்த 43-ம் நாளான பிரமாதி ஸூ வைகாசிமீ பௌர்ணமி வெள்ளிக்கிழமை விசாக நக்ஷத்திரம் கடக லக்கினத்தில, பதினெட்டுத் திருப்பதிகளையுடைய பாண்டிய நாட்டில் தாம்ரபர்ணி நதிக்கரையில் திருக்குருகூரில, வேளாள குலத்தில் அவ தரித்தருளினா.

அங்கே வம்சபரம்பரையாய் எமபெருமானுக்குக் கைங்கரியம செய் வதையே புருஷார்த்தமாயக் கொண்ட திருவழுதி வளநாடரென்ற பாகவ தோத்தமனுடைய வம்சத்தியில பொற்காரியென ஒருவா பிறந்தார். அவா மலைநாட்டில் திருவண்பரிசாரத்திலுள்ள திருவாழ் மாப னென்ற பக்தனது புத்திரியான உடைய நங்கையாரை மணம புரிந்தார்.

இந்தத்தம்பதிகள ஒரு தடவை திருவண்பரிசாரத்திற்குப் போயச் சிலகாலம வசித்திருந்து பிறகு ஊருக்குத் திரும்பிவருகையில, திருக்கு றுங்குடியெனனும திருப்பதியில எழுந்தருளியிருக்கும நம்பியென்ற எம பெருமானை ஸேவித்து அடிபணிந்து, எங்களுக்கு புத்திரபாக்கியத்தை அருளவேண்டுமென்று பிராத்தித்தார்கள். அப்பொழுது நம்பி அர்ச்சகமுக மூலமாய், நாமே உங்களுக்கு மகனாய் வந்து பிறக்கிறோம்' என்று திருவாய் மலாந்தருளி, திருமாலை தீர்த்தம திருத்துழாய் திருப்பரிவட்டம முதலிய பிரஸாதங்களைக் கொடுக்கச்செய்தார.

அப்படியே உடையநங்கையார கர்ப்பந்தரித்துத் தருந்தகாலத்தில் பகவான், கௌஸ்துபம (ஆபரணம்), ஸேனைமுதலியாரென்ற மூவரின அம்சமும் கலந்த ஓர் மஹா புருஷனைப் பெற்றாள். (திருமால பஞ்சாயுதங் கள் ஆதிசேஷன் ஸேனைமுதலியாரென்ற வரின அஷ்டாம்சங்களை உடையவரென்றும சொல்வதுணடு.)

இதையறிந்தே திருவனந்தாழ்வான இவர்க்கு எக்காலத்திலும், எத்தேசத்திலும, எந்நிலையிலும்.

“சென்றால குடையாம, இருந்தால் சிங்காசனமாம,
நின்றால் மரவடியாம்—நீள் கடலுள், என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம புல்கும்
அணையாம்—திருமாற்கரவு”! என்றபடி, கைங்கரியஞ் செய்கிற

வராகையால் அங்கே ஓர் புளியமரமாக அவதரித்து, வளர்ந்து வந்தார். (அதற்கு 21 வருஷங்களுக்கு முன்பு ஈசுவர ஸ்ரீ ஆனிமீ மூலநக்ஷத்திரத்தில் இவர் அவதரித்து உறங்காப்புளியென்ற திருநாமத்தையடைந்து ஆழ்வாருக்கு வெயில் மழை பனி முதலியவைகளால் வருத்தமில்லாமல் காப்பாற்றிவந்தார்.)

கர்ப்பத்திலிருக்கும்பொழுது ஞானத்துடன் கூடியிருக்கும் குழந்தைகளைப் பிறந்தவுடனே சடமென்ற வாயு கவர்ந்து ஞானத்தை மறைத்து, அழுதல், புரளுதல், முதலிய அக்ஞான வியாபாரங்களைச் செய்யப்பண்ணும். அது இவரையும் அணுகினபொழுது அதை ஹூங்காரத்தால் துரத்தி யொழித்தார். ஆகையால் இவர்க்குச் சடகோப ரென்று திருநாமமுண்டாயிற்று. மற்றக் குழந்தைகளைப் போல் அழாமல் மலமூத்திரங்களிராமல் பாலுண்ணாமல் லோகவியாபாரம் ஒன்றுமிராமல் வாட்டமில்லாமல் பரமதேஜஸுடன் விளங்குவதைக் கண்ட பெற்றோர் அளவற்ற ஆச்சரியத்தையடைந்தார்கள். எம்பெருமானுடைய திருவவதாரமென்றதை நினையாமல, அக்குழந்தை தன்னினத்தாரைப்போல் எவ்விதத்திலும் இருக்காதெனபதையறியாமல், அவர் பிறந்த பன்னிரண்டாம் நாளில், பொலிந்து நின்ற பிரானுடைய ஸந்நிதியில் எடுத்துக்கொண்டு போய் ஸேவிக்கச்செய்து, அது லோகநடைக்கு முற்றும் மாறுதலாயிருந்ததால் மாறனென்று திருநாமமிட்டு, அருகிலிருந்த திருப்புளியாழ்வாரின் நிழலில் தொட்டிலில் வளர்த்துப் போஷித்து வந்தார்கள்.

இப்படியே ஆழ்வார் பதினறு வருஷங்கள் வரையில் கண் விழியாமல் மௌனம சாதித்து ஸமாதியிலிருந்தார். பொறகாரியும் உடைய நங்கையும "நாம் எம்பெருமானுக்கு ஏதோ பெரிய அபசாரம் செய்திருக்கிறோம். அதன் பயனே" யென்று மனங்கலங்கியிருந்தனா. ஆனால் தன்னைப் போன்ற பக்வமுடையவர் ஒருவரையும் காணாததால், ஆழ்வார் மௌனம் பூண்டிருக்கிறரென்று அறியவில்லை.

அப்பொழுது மாதவனுடைய கட்டளைபபடி, ஸேனை முதலியார் ரஹஸ்யமாய் வநது இவருக்கு ஸகல ஸம்ஸ்காரங்களையும் மந்திரார்த்தங்களையும் உபதேசித்தார். இவருடைய காலத்திற்குச் சற்றுமுன்பு அவதரித்த மதுர கவிகள், திவ்ய தேசயாத்ரை செய்துகொண்டிருக்கையில், ஒரு நாள். அயோத்திமாநகரில் இரவில் ஓர் அகண்டமான ஒளி வீசுவதைக் கண்டு அதைத் தேடிப் பரிசோதிக்கக் கருதி, அங்கிருந்து புறப்பட்டு, அதையே குறியாகவைத்துக்கொண்டு திருக்குருகூரில் திருப்புளியடியில் பத்மாஸனத்தில் வீற்றிருக்கும் ஆழ்வாரைக் கண்டார். அவருடைய அபாரதேஜஸையும் அமைதியையும் கவனித்து 'இவரே நமக்குக் குரு! இவரே

நமக்கு தெய்வம்; இவரே நமக்கு மோக்ஷ' மென்று பத்திபண்ணி மனதாரச் சரணமடைந்தார். ஆயினும் இவருக்கு உணர்ச்சியுண்டோவென்று ஸந்தேஹித்து, அவருக் கெதிரில ஒரு கல்லை எடுத்துப் போட்டார். அந்தச சத்ததால் ஆழ்வார் கண் விழித்துப பார்தது, மதுரகவிகளை கிருபா கடாக்ஷத்தால் அநுக்கிரஹிததார். இவருக்குப் பேச்சு முண்டோவென்று மதுரகவிகள் அறிய வெண்ணிக், கைகூப்பிததலை வணங்கி "ஸ்வாமி! செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத தின்று எங்கேகிடக்கு" மென்றார். (அசிததான இநத சரீரததில் அணுரூபமான ஆதமா புகுந்தால், அது எதை அநுபவிக்கும்? எங்கே தங்கியிருக்கும்). ஆழ்வார் அதற்குப் பதிலாய் "அததைத் தின்று அங்கே கிடக்கும்' என்று உத்திரமளித்தார். (அந்த சரீரத்தினிடததுண்டாகும ஸுகதுக்கங்களையே அநுபவிததுக் கொண்டு அதிலேயே தங்கியிருககும). மதுரகவிகள அவருக்கு ஸாஷ்டாங்கமாகத் தெண்டன் ஸமர்ப்பிதது, தாளும தடக்கையும கூப்பி, "அடியேனை ஆட் கொண்டு கடைத தேறறுவிக்கவேண்டு" மென்று பிரார்த்தித்தார். ஆழ்வார் அதறகிணங்கி அவருடைய கைங்கரியததை அங்கிகரித்து, அவருக்கு ஜீவேசுவர ஸ்வரூபததையும உபாயத்தையும பிரயோசனத்தையும் பற்றின பரம ரஹஸ்யங்களை உபதேசித்தார.

இப்படியிருக்கையில் பரவாஸுதேவன ஆழ்வாருடைய ஞான திருஷ்டிக்கு இலக்காய்ப பெரிய பிராட்டியுடன பெரிய திருவடியின மேல் எழுநதருளி, ஸேவைஸாதிததார். சடகோபர அநத திவ்ய மங்கள விக்ரஹத்தின அழகைக் கண்ணாரக் கண்டு மயிர் சிலிர்தது ஆனநதக் கண்ணீர் பெருகி வாயார வாழ்ததினார்.

பிறகு 108 திருப்பதிகளில் அர்ச்சாரூபமாய விளங்கும் எம்பெருமான்களும் ஆழ்வாரிருக்குமிடததிறகு எழுநதருளி ஸேவை ஸாதிததார்கள். மாறன அவர்களுடைய திவ்ய குணங்களை அநுபவிததததாலுண்டான ஆனந்தம் ததும்பி ஓடித் தன் அநுபவததால ஜீவகோடிகள் நறகதியடையுமாறு, அதை நான்கு வேத ஸாரமான திருவிருததம, திருவாசிரியம, பெரிய திருவந்தாதி, திருவாய் மொழியென்ற பிரபநதங்களால பாடி அவற்றை மதுரகவிகளுக் குபதேசத்தார்.

அப்பொழுது, லோகத்திலுள்ள பாகவத சிரேஷ்டர்களும மஹரிஷிகளும், சுவேதத்வீபத்தில் விளங்கும் மஹாபுருஷர்களும், வைகுண்டததில் வாழும் நித்ய ஸூரிகளும் சடகோபரது மஹிமையைத் தரிசிக்க அங்கே வந்து கூடினார்கள். அவர்களைக் கண்டு ஆழ்வார்

"பொலிக பொலிக பொலிக, போயிற்று வல்லுயிர்ச் சாபம்,
கலியும் நரகமும் கைந்த நமனுக் கிங்கியாதொன்றுமில்லை

கலியும் கெடும் கண்டு கொள் மின். கடல் வண்ணன் பூதங்கள்—மண்மேல்
மலியப் புகுந்திசை பாடி யாடி யுழி தரக் கண்டோம்''

என்று வாழ்த்தினர். இப்படி இவ்வாழ்வார் தமது வாழ்நாள் முழுவதிலும் உலக வாழ்க்கையில் கலக்காமல், பரம ஞான பக்தி வைராக்கியங்களால் விளங்கி, எம்பெருமானுடைய திருவடிகளைத் தவிர வேறென்றும் அறியாதவராய், 35 திருநக்ஷத்திரங்கள் வரையில் இவ்வுலகில் எழுந்தருளி யிருந்து, பிறகு, தனனிருப்பிடமான வைகுந்தமா நகரக்குச் சென்று, திருமாமணி மண்டபத்தில் எப்பொழுதும் போல விளங்கி னிருநர்.

திருக்குருகூரில் எழுந்தருளியிருந்த பொலிந்து நின்ற பிரான் அன்பு கூர்ந்து அருளின மகிழ மலர் மாலையைத் தரித்ததால், இவ்வாழ்வாருக்கு வகுளா பரணரென்றும், பரமதங்களான மதயானைகளைத் தன் பாசுரங்களடங்கிய ஞானமாகிறமா வெட்டியால் குத்திக் கொழுப்படக்கினதால் பராங்குசரென்றும், நம் பெருமாளுக்கு மற்றவரைக் காட்டிலும் உகந்தவராகையால் அவரால் நம்மாழ்வாரென்றும் திருநாமங்களைப் பெற்றவர். மற்ற ஆழ்வார்களைப் போல இவ்வுலக நடையைப் பற்றாமல், பிறந்தது முதல் திவ்ய ஞானத்துடன் விளங்கி, அதினின்றும் மாறாதிருந்ததால், ஆழ்வார்களுக்குத் தலைவராவர். அப்பொழுது இவருக்குப் பூதத்தார் தலை, பொய்கை பேயாழ்வார்களே கண்கள், பெரியாழ்வார் முகம், திருமழிசைப்பிரான் கழுத்து, குலசேகரப்பெருமாளும் திருப்பாணாழ்வாரும் கைகள், தொண்டரடிப்பொடி மார்பு, திருமங்கையாழ்வார் நாபி, மதுரகவியார் திருவடிகள் இந்த அவயவங்களையுடைய நம்மாழ்வார் அவயவியாவர்.

இவர் எம்பெருமானுக்கு பிரியராய் அவருடைய திருவடிகளையே உபாய உபேயமாய்க் கொண்டிருந்ததால், பகவானுடைய பாதுகைகளுக்கு இவருடைய பெயரான ஸ்ரீ சடகோபமென்று திருநாமமிடப்படும்.

## திருவாசிரியம்

இது இயற்பாவில் ஆறாவது திவ்ய பிரபந்தம். இது யஜுர் வேதத்தின் ஸாரம். இதில் பாசுரங்கள் 7. இதற்கு அருளாளப் பெருமாளெம்பெருமானார் அருளிச் செய்த தனியனுண்டு. இதற்கு பெரிய வாச்சான் அருளிச் செய்த மணிப் பிரவாள வியாக்யானமும், அரும்பதமும் மாடபூசி ராமாநுஜாசாரியரால் எழுதப்பட்ட பிரதிபதமும் உண்டு. திருவிருத்தத்தில் ஸர்வேச்வரனுடைய ஸ்வரூப குண விபூதிகளைக் காட்டிக் கொடுக்கக் கண்டு, அவனுடைய உபய விபூதியையும் தியானித்துப், பரமபதத்திலுள்ளவர் ஆனந்தானுபவம் செய்கிறபடி இங்குள்ளோரும் செய்யாமல், மாயையிலகப்பட்டு, தேஹமே ஆத்மாவாய்த் துக்கக் கடலில் ஆழ்ந்திருப்பதைக்

கண்டு, இவ்வாழ்வார் ஸர்வேச்வரனோடே நித்தியானுபவம் பண்ணுகிறவர்களுக்கு ஸமமாய்த் தனக்கும் ப்ராப்தி யுண்டாயிருந்தும், தாம் அதை ஏன் இழந்திருக்க வேண்டுமென்று ஆலோசித்தார். இது இந்த தேஹ ஸம்பந்தத்தால் வந்ததென்றறிந்து, இதைக் கழித்துக்கொள்ளத் தன்னிடத்தில் வேறு உபாயத்தைக் காணாமல், நீயே கதியென்று எம்பெருமானுடைய திருவடிகளில் தன் நிலைமையை விண்ணப்பஞ் செய்தார். இந்தப் பிரபந்தத்தின் தாத்பர்யம் இதுவே. ஆகையால் முதலிலும் முடிவிலும் இந்த அர்த்தமே அநுஸந்திக்கப்படுகிறது.

திருவிருத்தத்தில் ஸர்வேஸ்வரனைக் கண்டனுபவிப்பதற்காக ஆழ்வார் கதறின பதற்றமெல்லாம் தீரும்படி, ஸர்வேச்வரன் தன் ஸ்வரூப ரூப குணவிபூதிகளை ஆழ்வாருக்குக் காட்டினான். அதைக் கண்டு அநுபவித்துப் பரவசராய், அவ்வநுபவத்தை உலகத்தாருக்கு அருளிச் செய்கிறார்.

“ஓ ஸ்வாமி! உன் திவ்யமங்கள விக்ரஹமானது என் கண் முன்னே வந்து தோன்றுகின்றது. அதில் செய்யும் பரபக்தி பரஞான பரமபக்திகளே ஸகல புருஷார்த்தங்களிலும் சிறந்தவை. அப்படி அவனை அண்டி அவனுக்குச் செய்யும் கைங்கரியத்தை அவனுடைய திருமேனிக்குப் பாத்ரர்களான பாகவதர்களிடத்திலும் செய்யவேண்டும். பரமபுருஷனான கண்ணனுக்கு மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டு காலத்தைக் கழிப்பதே ஜீவனுடைய ஸ்வரூபத்திற்குத் தகுந்த நித்யகர்மமாகும். அப்படி மங்களாசாஸனம் செய்வதற்கு ஸ்ரீபதியான நீயே தகுந்தவன். இதர தெய்வங்களுக்கு அதில் யாதும் ஸம்பந்தமில்லை. மஹா பிரளயத்தில் ஸம்ஸாரிகள் யாதொரு புருஷார்த்தத்தையும் பெற யோக்யதையற்றுக் கிடந்தார்கள். அவர்களைக் கரையேற்றக் கருதி ஆதி ஸ்ருஷ்டியில் எம்பெருமான் அவர்களுக்கு தேஹேந்திரியங்களையும் ஞானத்தையும் அளித்தான். பின்னொருகால் இவ்வுலகப் பிரளய ஜலத்திலிருந்தும் தூக்கியெடுத்தான். இனி அப்படி நேராதபடி பிரளயத்திற்கு முன்பே இதைத் தன் வயிற்றில் வைத்து ரக்ஷித்தான். பின்னை இவற்றை நெருங்கிவருந்தாதபடி ஸ்ருஷ்டிகாலத்தில் வெளியில் விட்டான். நடுவில் துஷ்டர்கள் இதைக் கொள்ளாதபடி திருவிக்ரமனாய் அவதரித்து அவர்களை யழித்து இதை மறுபடியும் ரக்ஷித்தான். இன்னும் இதற்கு நேரக்கூடிய ஆபத்துகளை விசாரித்து அவைகளுக்குப் பரிஹாரங்களையும் பண்ணினான். பரம உபகாரியாய் ஜகத்திற்குக் காரணனாய்ப் பரதேவதையாய் அவன் விளங்குகையில் அவனை மறந்து ஸம்ஸாரிகளாய்த் தீஞ்செயல்களையே புரிந்து அல்ப தேவதைகளைப் பூஜித்துத் திரியும் மூடர்கள் அறிவில்லாமல் இந்த ஸம்ஸாரத்தில் விஷயஸுகங்களில் ஆசைவைத்து ஆழ்ந்த சேற்றில் அழுந்தி வருந்துவதற்காகச் செய்த மாயையின் வலையில் கட்டுப்பட்டிருப்பது என்ன

ஆச்சரியம் இவர்களைப் போல் நாமும் விஷயஸுகங்களில் அகப்பட்டுக் கெடாமல் முதலிலேயே அவைகளை வெறுத்துப், பகவானைச் சரணமடைவதே நமக்குப் பரம உபாயமும் பலமுமாகும். அவனை விட்டு நமக்கு வேறு தஞ்சமில்லை. இது நான் பெற்ற மஹா பாக்யமென்பதுடன் இப்பிரபந்தம்

## பெரிய திருவந்தாதி

இது இயற்பாவில் ஏழாவது திவ்யப் பிரபந்தம்; அதர்வணவேத ஸாரம். இதில் பாசுரங்கள் 87. இதற்கு எம்பெருமானார் அருளிச் செய்த தனியனும் பெரியவாச்சான் பிள்ளையின் மணிப்பிரவாள வியாக்கியானமும் அரும்பதமும் மாடபூசி ராமாநுஜாசாரியரின் பிரதிபதமுமுண்டு.

"முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே,
இயற்றுவா யெம்மொடு நீ கூடி,—நயப்புடைய
நாவீன் தொடைகிளவி யுட்பொதிவோம், நற்பூவைப்
பூவின்ற வண்ணன் புகழ்"

அ—து. உத்ஸாஹத்துடன் கூடின மனமே! ஸர்வேசுவரனுடைய கீர்த்தியை அழகிய பதங்களையுடைய பாசுரங்களால போற்றுவோம். நீயும் எனனுடன் கூடிப் புகழ்வாயாக.

ஸ்வாமி! உன்னைத் துதித்தால் உன் கல்யாண குணங்களுக்குத் தகுதியாயிரா தாகையால் நிந்தித்தோமாவோம். துதிக்காவிட்டால் உன் குணங்களுக்கு என்னால் யாதொரு தோஷமும் ஏற்படாதாகையால் நிந்தியாதவர்களாவோம். அதற்கு மேலே நினைத்தோமாகில் நிந்திதேதாமாவோம். நினைககாவிட்டால் நிந்தியாதவர்களாவோம். நீ கோபங்கொள்ளாதே. உன்னைத் துதிப்பதும் விலகுவதும் க்ரூர பாபத்தைச்செய்த எங்களுடைய இயற்கையே. நினையாமையாகிற இவையன்றோ நலம். நினைத்தலாகிற இவையன்றோ கீழ்மையென்ற இநத ஸ்வபாவங்களை யறிந்தேனேயாகிலும் இவையெல்லாம் என்னால் பறறவும விடவும் போகாது. உனக்கு என் மனம் அடிமைப்பட்டது. ஆராய்நது பார்த்தால் என்னைவிட மேலான கீர்த்தியுள்ளவர் யார்.

பெற்ற தாயைப்போல் பிரியமுள்ளவனும நீயே. உண்டாக்கின தகப்பனைப்போல் ஹிதஞ் செய்பவனும் நீயே. வேறு உபாயத்தைக் காண்பித்து உன்னிடத்தினின்றும் அகற்றுகிறாயோ. அந்திகாலமாய் உன்னை அறியாமற் போன எங்களை எதைச் செய்ய நினைத்தாய். எவ்வளவு நன்மையைச் செய்தாலும் நீ இனிக் கைவிட்டால், நாங்கள் எந்த அனர்த்தத்தையடையமாட்டோம், சொல், மலமே! என்னை ஆழமறியாத துக்கத்தில்

தள்ளுவதற்கு எப்பொழுதும் முயலுகிறுயல்லவா. இதை விடு, உனக்கு நன்மையைச் சொன்னாலும் நீ என மேல் சிறிதும் ஒன்றையும் அங்கீகரிக்கமாட்டாய் கண்ணனுடைய திருவடிகளைப் போற்றுவதே உனக்குச் சிறந்த காரியம்.

ஸ்வாமி! நீ எங்களுடன் போட்டிபோடலாமா! அவர்களிடத்திலிருந்து பிரதயுபகாரத்தை எதிர் பார்ப்பது நியாயமோ. அடியார்க் கெளியனுய்ப் பல தடவை விளங்கவில்லையோ. உனக்கேதாவது பதிலுபகாரஞ் செய்யவேண்டுமானால் என் பொல்லாத ஸ்துதியையும கைங்கரியமாகக் கொண்டு உன்னை ஸேவிக்கும்படி அருள்புரி.

நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில ஐந்து திருவந்தாதிகளுண்டு. முதலாழ்வார் மூவரும் திருமழிசைப்பிரானும நம்மாழ்வாரும் அவைகளை இயற்றினவர். ஸ்ரீ சடகோபருடைய பெரிய திருவந்தாதியின் அழகும் மேன்மையும் காம்பீர்யமும் உருக்கமும் ஹிதோபதேசமும் மற்றவைகளில் காணப்படவில்லையென் றெண்ணுகிறேன. இதில ஒவ்வொரு பாசுரத்தையும் எடுத்துச சொல்லத்தகுமானாலும இச்சிறு புத்தகத்தின் எல்லையை ஒட்டி முதலிலும் நடுவிலும் முடிவிலும் சில பாசுரங்களை மாத்திரம் எடுத்துச சொல்லமுடியும். திருவிருத்தம், திருவாய் மொழியென்றவைகளிலும இப்படியே (பக்திமான்கள முழுதையும் ஆராய்வது நலம்).

தம்மை விட்டு வேறொன்றைப் பாராதே தமமுடைய பின்னே அலைந்து தடுமாகிற மனதையுடையவரை ஒருக்காலாகிலும் குளிரப்பார்த்து ஐயோவென்று தயை செய்வாயில்லை. ஐயோ! என பாபமா. கண்ணனுடைய மனது கருங்கல்லைப்போல் கடினமாயிற்றே. கோபாலா! நான உனக்குச சொல்வது ஒரு வார்த்தையுண்டு, நீ உன்னுடைய அடியார்க்கு எந்த உபகாரத்தைச செய்வேனென்று கவலைகொண்டிருக்கிறுய். உன் கல்யாண குணங்களில் ஈடுபடுகிற தங்களுடைய மனதைக்காட்டிலும் முயற்சியைக்காட்டிலும் நீ அவர்களுக்கு ஸ்ரீவைகுண்டமென்று கிருபைசெய்யும் பிரஸித்தமான பரமாகாசம் இனியதாயிருக்குமோ.

துக்கத்தைப் போக்கும் மாதாபிதாக்களாக உன்னை என் மனதிலே இருத்தினேன். இனிப் பாபத்தின நாசத்திலும் விருத்தியிலும் எது வந்தாலெனக்கென்ன. பூமியோடு சேர்ந்த லீலாவிபூதியும் பரந்தபரமபதமும் உன ஸங்கல்பத்திலுள்ளவை. நீ என் காது வழியாய்ப் பிரவேசித்து என் உள்ளத்தில் இடைவிடாது விளங்குகிறுய். நம்மிருவரில யார் பெரியவனென்று அறிவாருமுண்டோ. நீயே விசாரித்துச் சொல.

பூலோகத்தில் எந்த ஜாதியாராயினும் எத்தொழிலைச் செய்தாலும், கோவிந்தனுக்கு அடிமைப்படும் ஜன்மம், அவனுக்கு அந்தரங்க தேசமான திரு நாட்டிலிருக்கும் தேஜஸையுடையதன்றோ. அறுதியான பாபத்தை நினைத்துப் பயப்படுமோ. ஸ்வர்க்கத்தை ஒரு பொருட்டாக நினைக்குமோ.

ஜன்மம் மரணம் கிழத்தனம் வியாதியென்றவைகளை ஓட்டி அதற்கு மேல் அதிக ஸுகமான கைவல்யத்தை அடைந்தானாகிலும், மாதவனுடைய திருவடிகளைப் போற்றாத் தினத்தில் வரும் வியாபாரங்களெல்லாம் துக்கரூபமேயென்று நினைக்காமலிருப்பதெப்படி.

இவ்வாழ்வார் நமது கிருபைக்குத் தகாத தாழ்மையையுடையவர்; நமது குணங்களைத் தியானித்து அநுபவிப்பதற்குத் தகுந்த ஸகாயமில்லாதவரென்று விசாரித்து ஆராயாதவராய், ராப்பகலெனபதையும் விசாரியாமல் என்னைப் போர் செய்து வசிகரித்து, இரண்டு காலங்களிலும் ஆண்டுகொள். மனமே! செய்யத் தகாதவையைச் செய்கிறாய். உன்னைக் கண்டு அஞ்சுகிறேன். கண்ணனை மங்களாசாஸனம் பண்ணு. கடைத்தேறலாம், வழி இதுவே. அவனை மறக்கில் மற; மறவாதிருந்தால் இரு. உனக்கு நன்மையைச் சொன்னேன.

அவனுடைய திருவடிகளை வாழ்த்தி மலர்களை ஸமர்ப்பித்துத் தலையை வணங்கு, இருகைகளையும் கூப்பென்றால், முறட்டுத்தனமாய்க் கோபித்துக்கொண்டோடும் மனமே! அவனை நீ எங்கே நிற்கிறாயென்று ஆதரவாய் அழைத்துத் துதிக்காமல் உன் முயற்சியாலேயே நீ பிழைக்கக் கூடுமானால் பிழை, ஐயோ! பாவமே.

"இப்போது மினனு மினிச்சிறிது நின்றாலும்,
எப்போது மீதேசொல் லென்னெஞ்சே—எப்போதும்
கைகழலா நேமியான் நம்மேல் வினைகடிவான,
மொய் கழலே யேத்த முயல்."

அ—து : எனக்கு விரோதியான என் உள்ளமே! நமது பாபங்களைப் போக்குவதற்காகத் திருவாழியையுடைய ஸ்ரீபதியின் சரணகமலங்களையே துதிக்க ஆசைகொள். இக்காலத்திலும் இதற்கு மேல் இன்னும் சிறிது காலம் கழித்தாகிலும் எக்காலத்திலும இத்திருநாமங்களையே வாய்விட்டுச் சொல்.

## திரு விருத்தம்.

இது நம்மாழ்வார் அருளிச்செய்த நான்கு வேதங்களின் ஸாரமான நான்கு நூல்களில் ரிக்வேத ஸாரமான முதலாவது. ஆழ்வார்

நமது ஞானக் கண்ணுக்கு விளங்கும் எம்பெருமானை நோக்கி "உன்னை அநுபவிப்பதற்கு விரோதியான தேஹ ஸம்பந்தத்தை அறுத்தருளவேண்டு" மென்று இதில் விண்ணப்பஞ்செய்கிறார். இது 100 பாசுரங்களை யுடையது. நூல் தொடக்கமும் நூற்பயனுமாகிய முதல் இறுதிப் பாசுரம் இரண்டும் நீங்க மற்றவைகளிலும் அகப்பொருளிலக்கணம் அமைக்கப் பெற்றது. அந்யாபதேசம் ஸ்வாபதேசமென்ற வெளிப்படைப் பொருள் உள்ளுறைப் பொருளென்னும் இருவகைப் பொருளுமுள்ளது. சொல் பொருள் ஆழ்ந்த கருத்துத் வனி கல்பனை அலங்கார முதலிய சிறப்புகளால் ஒப்பின்றி விளங்குவது; பரமபுருஷனை அகப்பொருள் முறையால் அநுபவிப்பது. சைவ ஸமயத்து மாணிக்கவாசகர் இயற்றிய திருச்சிற்றம்பல கோவையைப் போன்றது. பேரின்பத்தைக் காட்டி வெளிப்படையாய்ச் சிற்றின்பத்தைக் கூறும். பரம புருஷனைத் தவிர மற்ற யாவும் அவனுக்கு ஸ்திரீயைப் போன்றதே. ஜீவன் ஸ்வதந்திரமில்லாதவன்; ஈசனை அண்டினவன். ரிஷிகள் ராமனிடத்தில் ஆசை கொண்டதும், கோபிகள் கண்ணனைக் காதலித்ததும் இப்பொருள் கொண்டே.

இதற்கு நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, வாதிகேஸரி அழகிய மணவாளஜீயர், அப்பிள்ளை, பெரிய பரகால ஸ்வாமியென்றவர்கள் செய்த ஐந்து வியாக்கியானங்களும், பிள்ளையின் வியாக்கியானத்தின் பொருளை விளக்கும் மூன்று அரும்பதவுரைகளுமுண்டு. இம்மூன்றில் அப்பு வரையர் செய்த தொன்று. இதைத் தவிரவும் கோனப்பங்காருடைய அரும்பதமுமுண்டென்று பிரஸித்தி. பரகால ஸ்வாமியின் வியாக்கியானம் வடகலை ஸம்பிரதாயத்தை அநுஸரித்தது.

இதிலுள்ள அகப்பொருளை விளக்கும் நூல்களில் தொல்காப்பியத்துப் பொருளதிகாரம், இறையனாரகப்பொருள், திருக்கோவையார், திருக்குறள் காமத்துப்பால், தஞ்சைவாணன் கோவை, அம்பிகாபதிகோவை, தணிகைப் புராணத்துக் களவுப்படலமும், பெரியாழ்வார், திருமங்கை மன்னன், இவ்வாழ்வாரின் பாசுரங்களில் சிலவும் ஆராயத் தகுந்தவை. நம்பியகப்பொருள் விளக்கம், வீரசோழியம், வேங்கைக் கோவை முதலியவையும் பார்க்கப் பயன் தரும்.

ஸம்ஸ்கிருதத்தில் சில வேதவாக்கியங்களும், ஜயதேவ ஸ்வாமியால் செய்யப்பட்ட கீத கோவிந்தமென்ற இசை நூலும், தீர்த்த நாரயணஸ்வாமியால் பாடப்பட்ட கிருஷ்ண லீலாதரங்கிணியும், தெலுங்கு பாஷையில் க்ஷேத்ரக்ஞரால் பாடப்பட்ட பதங்களும், கிறிஸ்தவ மதகிரந்தத்தில் ஸாலமன் கீதம் (Song of Solomon) என்றதும், இஸ்லாம் மதத்தைச் சேர்ந்த ஸூபிகளென்றவரின் பரமவேதாந்தக் கொள்கையும், இந்தத் திருவிருத்

தத்தைப் போலவே, காம மென்ற மனோபாவத்தைப் பகவானிடத்தில் செலுத்தி, அதனால் மோக்ஷத்தைப் பெறுவதென்ற பரமோபதேசத்தைச் செய்வன.

ஆழ்வார் தம்மைப் பிராட்டியாக வைத்து, தமது விருத்தத்தை (செய்தியை)க் கூறுவதால் இதற்குத் திருவிருத்த மென்ற பெயர் தரும். இயற்பாவில் ஐந்தாவது பிரபந்தமாகிய இதற்குத் தனியனைக் கிடாம்பியாச்சான் அருளிச் செய்திருக்கிறார். (சீராமப்பிள்ளையும் ஆளவந்தாரும் அருளிச் செய்தாரென்று சொல்வது முண்டு).

1. "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்பு
இந்நின்ற நீர்மை யினி யா முறாமையு யிரளிப்பா
னெந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தா யிமை யோர்தலைவா
மெய்ந்நின்று கேட்டருளா யடியேன் செய்யும் விண்ணப்பமே."

அ-து. (இப்பாட்டில் எம்பெருமானை ஞானக் கண்ணுக்கு விஷயமாகக் கண்ட ஆழ்வார் அவரை அழைத்து அவர் முன்னிலையில் தாம் சொல்லும் வினய வார்த்தையைக் கேட்டருளவேண்டுமென்கிறார்.) எல்லா உயிர்களையும் பாதுகாத்தருளும்பொருட்டு பலவகையாய் நின்ற பிறவிகளையுடையவனாய் அவதரித்தவனே, தேவதேவனே, பொய்மை நிலை பெற்ற அறிவும் தீய நடத்தையும் அசுத்தமான தேஹமும் கூடின இந்தப் பிறவித் துன்பத்தை இனி நாம் அடையாதபடி, அடியேன் சொல்லும் உண்மையான வணக்கத்தோடு கூடிய சொல்லைக் கேட்டருளுவாய்.

2. இப்பாசுரத்தில் ஸர்வேசுவரனாகிய நாயகனைக் கூடிப் பிரிந்து, அப்பிரிவை ஆற்றாதவளான நாயகியின் வேறுபாட்டைக் கண்டு ஆச்சரியமடைந்த தோழியின் வார்த்தையே வெளிப் பொருள். "நீலமேக சியாமளனை கண்ணனுடைய திருவடிகளில் அனபைச் செலுத்தின இந்த நாயகிக்குச், சிவந்தரேகையையுடைய கண்கள் அவனைப் பிரிந்த துக்கத்தால் புலம்பின நீர் ததும்பத், தடுமாறுகின்றன. இந்த அன்புநிலை என்றும் நிலைத்து நிற்பதாக. இத்துன்பம் நீங்கி இவள் வாழ்ந்திடுக." எம்பெருமான் திருவடிகளில் ஆழ்வாருக்குண்டான அன்பு மிகுதியாலாகிய கண்கலக்கத்தைக் கண்டு ஆச்சரியமடைந்த நண்பர்கள் சொல்லும் வார்த்தை இதென்பதே, இதற்கு உள்ளுறைப் பொருள். இங்கே ஆழ்வார் நாயகி, எம்பெருமான் நாயகன், நண்பர்கள் தோழி; எம்பெருமான் ஒருக்கால் இவருடைய ஞானக் கண்ணுக்குத் தோன்றினபொழுது, அவனை உடனே சேரவிரும்பிய இவரை அவன் அப்பொழுதே சேர்த்துக்கொள்ளாமல் மறைந்ததாலுண்டான துயரமே நாயகனை விட்டுப் பிரிந்த துன்பம், இப்படியே மற்றப் பாசுரங்களிலும் கண்டு கொள்க.

3. நாயகி இதைக் கண்டறிந்து அவனிடத்தில் போன என் மனம் மீண்டு வருமோ, வராதே போய்விடுமோவெனகிருள். அ—து. ஆழ்வார் தனது அன்புமிகுதியால உண்டான கண்கலக்கத்தைக் கண்டு வியந்த கண்பரை நோக்கி, எம்பெருமான விஷயத்தில தமது நெஞ்சு சென்று லயித்ததை உரைப்பதே இதற்கு உள்ளுறைப பொருள.

7. கார்காலத்திலே மீண்டு வருகிறேனென்று சொல்லிக் காலங் குறித்துச சென்ற நாயகன அப்படியும வாராதிருக்க அந்தக் காலவரையை நோக்கி வருந்தும் தலைவியைத், தோழி அவன சொல்லிப்போன கார்காலம் இதல்ல, வானத்தில் காணப்படுவது மேகங்களல்ல, ஒன்றோடொன்று போர் செய்யும் கறுத்த எருதுகளல்லவாவென்று காலத்தை மாறுபடக்கூறி ஆறுதல் செய்கிருள், இதற்குக் காலமபக்கெனறு பெயர் ஆழ்வார கொண்ட அன்புமிகுதிக்கு ஏற்றபடி உடனே எம்பெருமானைச சேர்ந்து அனுபவித்துப் பேரானந்தம பெறுவதற்குரிய காலமாயிருக்க, அப்படி நேராமல் தாமதித்ததால் அவிவேகமான மேகம மூடிப்பலவாறு துன்பங் களைச் சொரிகிற ஸம்ஸாரமாகிற விடாப்பெருமழைக் காலத்திலே அகப் பட்டேனென்று வருந்தினபொழுது, முக்குணங்களை யுடையோர் உலகம் நடுங்கும்படி ஒருவரகொருவர் மாறுபாடு கொண்டு நிலைகுலைந்து சண்டை யிடும் பூமியல்லவோ இதுவெனறும கூறி ஆழவாரை ஸ்ரீ வைஷ்ணவர் கள் தேற்றுவதே உளளுறைப் பொருள.

53. கட்டுவிச்சி கூறல்— தலைமகளைப் பிரிந்ததால வந்த நோய்க்குப் பரிஹாரம் ஏதோவென்று வினவின செவிலித்தாய முதலானவர்க்குக் கட்டு விச்சி நோய் நாடிப் பரிஹாரஞ் சொன்ன பாசுரமென்று அழகிய மணவாள ஜீயர் வெளிப்படைப்பொருளைக் கூறுகிறார்.

ஆழ்வாரது ஆற்றுத் துயரைக் கண்ட ஞானிகள இதற்குப் பரிஹா ரம் ஏதோவெனறு கலங்கினபொழுது காரண காரிய உண்மையை யுணர்ந்த நிருபகா, எம்பெருமானிடத்தில வைத்த பக்தியால வந்த இத்துயரத்திற்கு அதன் ஸம்பந்தமான பரிஹாரம் செய்வதே தகுமென்று கூறுதல இதற்கு உள்ளுறைப்பொருள்.

54. வண்டு விடு தூது:—ஆழ்வார் தமது ஆற்றுமையை ஆசாரியன் வழியாய் எம்பெருமானுக்குத் தெரிவித்தது, தமது துயரம் தணியக்கருதி அவர்களைத் தனக்குச் சிபாரசு செய்யும்படி வேண்டுதல் இதற்கு உள்ளு றைப் பொருள்.

61. தோழி தலைமகனுடைய நீர்மையைத் தலைவிக்குக் கூறுதல். அவன் பெரியனேயாகிலும் நமக்கு எளியனாய் வருவான பாரென்று

அவனைப் புகழ்வது. எம்பெருமானைச் சேர்வதற்கு விரைகின்ற ஆழ்வாரின் துயரத்தை நோக்கின நண்பர்கள் உபய விபூதி நாதனான ஸர்வேசுவரன் அடியார்க்கெளியனாய்க் கண்ணனாக வந்து அவதரித்த விதம் சொல்லுவதும் சாத்தியமோவென்று அவனுடைய ஸௌலப்யத்தைச் சொல்லி, அவரது துக்கத்தை ஆற்றுதலே இதற்குள்ளுறைப் பொருள்.

65. இளைய மான்பேடை மருண்டு நோக்கும் நோக்கத்திலும் இவளுடைய நோக்கம் அழகிய தென்பதைக் காட்டும் தலைவியின் நோக்கத்தின் மேன்மையைக் கண்டு தலைவன் குறிப்பறிந்து உரைத்தலே இதற்கு வெளிப்படைப்பொருள். ஆழ்வாருடைய ஞானத்திலே பாகவதர் ஈடுபட்டு உரைக்கும் வார்த்தையென்பதே இதற்கு உள்ளுறைப் பொருள்.

84. தலைவி தலைவனைக் காண விரைந்து செல்லுதல்.—தலைமகனுடைய பிரிவாற்றாத தலைமகள் அவனை என ஆசை தீரத் தனியே கண்டு கட்டிக்கூடிக் குலாவி அனுபவிக்கக் கிடைக்காவிட்டாலும் எல்லோரும் கூடியிருக்கும் கூட்டத்தில் எங்கேயாவது காணக்கிடைத்தாலும் அதனால் ஆறுதலடைவேனென்று நினைக்கிறாள். அதேஞாபகத்தால் தலைவனை எதிரில் நிற்கிறதுபோலெண்ணிக் கூறுகிறாள்.

நெஞ்சென்னும் உட்கண்ணால் எம்பெருமானைத் தரிசித்த ஆழ்வார் அவனை மறுபடியும் எங்கேயாது காண ஆசைப்பட்டு அவனை நோக்கித் தனக்குள்ளே உரைத்த வார்த்தை இதற்கு உள்ளுறைப்பொருள்.

91. தோழிக்குத் தலைவி தன் கற்பு உணர்த்தி ஸன்மார்க்கத்தில் நிற்பது:—தலைமகள் பிறரறியாமல் திருமாலாகிய தலைமகனைக் கூட்டி நிற்க, அதையறியாத பெற்றோர் அவளைப் பிறர்க்கு மணஞ்செய்விக்கப்பேசின பொழுது, அவள் தன் நிலைமையைத் தோழி முகமாய் தன் செவிலித்தாய்க்கும், அவளால் தாய்க்கும் அவளால் தந்தைக்கும் மற்றும் பெரியோர்க்கும் தெரிவித்துத் தன்னை அவனுக்கே மணஞ் செய்விக்கும்படி தன் கருத்தைத் தோழியிடத்தில் வெளிப்படுத்துகிறாள். இப்படித் தன் களவை வெளிப்படுத்துதலே நல்வழியில் நிற்பது.

அடியார்களிடத்தில் அன்புடையவனும் ஆபத்தை நீக்குகிறவனும் யாவையும் அறிந்தவனுமான எம்பெருமானையொழிய வேறொரு பொருளை, என்னெஞ்சம் அறியாதென்று ஆழ்வார் அன்பர்க்கு எடுத்துச் சொல்வதே இதன் உட்கருத்து.

92. 'தோள் கண்டார் தோளேகண்டா' ரென்றபடி உன் அழகிய திருவடியில் ஓர் அம்சத்தைக்கண்குளிரக் கண்டு அனுபவிப்பதும், பரமானந்தத்தைக் கொடுக்கும். ஆனால் தேவர்கள் அதனை ஆசைப்பட்டு வேண்டாமல்

உன் காலில் விழுந்து எப்பொழுதும் தம் பகைவரை அழித்துத் தரவேண்டு மென்று வேண்டுவது என்ன ஆச்சரியமென்று தலைவி அவர்களைப் பழித்து இரங்குகிறாள்.

இதின் உட்கருத்து யாதெனில், “உன் இனிய வடிவை அனுபவிக்க ஆசைப்படாமல் தேவர்கள் பூமியில் வந்து பிறந்து, தங்களுடைய பகைவரை அழித்துக் கோரிக்கைகளை நிறைவேற்றித் தருமபடி வேண்டி வேறு பிரயோஜனத்தில் மனத்தைச் செலுத்துவது மிகவும் இகழத்தக்கது. எம்பெருமானை அனுபவித்தலையே விரும்பவேண்டுமென்பது.

93. தலைமகள் எம்பெருமானைப் பிரிந்து அதைப் பொறுக்க முடியாமல் தவிக்கையில் ஸூரியன் அஸ்தமித்து இருள் சூழ்ந்து ஆசை மிகுந்து, அவ்விருள் அவனுடைய கரிய திருமேனியை ஞாபகப்படுத்திறது. தலைவியின் துயரம் அதிகரித்துத் தன் நோய்க்கு அவனுடைய நாமோச்சாரணமே பரிஹாரமென்று கருதி, அதை ஆராய்ந்து நடத்தாத தோழியையும் செவிலித்தாயையும் வெறுத்துக் கூறுகிறாள். இதன் உட்கருத்து யாதெனில் “உலகத்தில் பலர் காலையும் மாலையும் மாறி மாறி வருதலால் காலங்கழிகிற வழியைக் கண்டும், தமது பாலயம், தேஹத்தின் நிலையாமை, கடவுளிடத்தில் ஈடுபடாமல் வீணில் காலம்போக்குதல் முதலியவற்றைக் கொள்வதை ஆழ்வார் வெறுத்துத் துக்கிப்பதே.” ஜீவனங்களைச் சீர்திருத்திக் கடைத்தேற்றும்பொருட்டு இவர் அவதரித்ததாலும் இயற்கையாய்க் கருணாநிதியாகையாலும், பிறருடைய கேட்டைக் கண்டு ஆற்றத் துயரம் கொள்ளுகிறாரென்பது.

97. திருமாலைக் கண்டு கூடிப் பிரிந்து அந்த நிலையில் அல்லும் பகலும் தூக்கம் பிடிக்காமல் வருந்துகிற தலைவி, தன்னைத் தேற்ற முயலும் தோழியைப் பார்த்து, ஸூரியன் உதிப்பதையும் அஸ்தமிப்பதையும் இப்படி நிகழ்ந்து எத்தனையோ காலங்கள் கழிவதும் பார்த்துப் பார்த்து வருந்துவதேயல்லாமல், தேவர்களுடைய கூட்டம் வணங்குவதையும் பரிவாரமாய்ச் சூழ்ந்துகொள்வதையும் செய்யப்பெற்ற திருமாலைக் கண்கள் திருப்தியடையப் பார்த்து, அவனிடத்தில் மிகுந்த ஆசையை வைத்ததற்கும் கண்ணுறக்கம் கொள்ளுதலுண்டோ வென்கிறார்.

எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை முழுவதும் காண விரும்பித் தொடங்கினவற்கு, காலம் முடிவதேயொழிய அவ்வனுபவம் முடியாது. கண்கள் அதைக் கண்டனுபவித்து அலுக்காதென்று ஆழ்வார் அன்பர்க்கு அருளிச்செய்வதே இதற்கு உட்கருத்து.

98. தலைவனுடைய தலைமையையே பாராட்டி, அப்படிப்பட்டவன் எளியளான என்னை விரைந்து கொண்டருளுவனோவென்று மிகுந்த கவலைப் பட்ட தலைவியை நோக்கித் தோழி, அப்படிப் பெரியவனானவனுக்கு உகப் பார்க்கு எளியனாகும் தன்மையும் ஒன்று இயற்கையாகவே உள்ளது. அவன் உன்னை உரிமையாக்கிக்கொள்ளாமலிருக்கமாட்டானென்று கூறி ஆறுதல் செய்தாள்.

எம்பெருமானுடைய மேன்மையிலும் நீர்மையிலும் உண்டான இனிமை எவர்க்கும் அளவிட்டு நிலையிடுதற்கு முடியாதென்று ஆழ்வார் அரு ளிச் செய்வதே இதற்கு உட்கருத்து.

99. தலைவனிடத்தில் தனக்குள்ள அன்பைத் தலைவி தோழிக்குக் கூறுகிறாள்.

"ஏனச்சொல்லாயினும் ஆக, வெறி திரை வையமுற்று
மேனத் துருவாயிடந்த பிரானிருங் கற்பகஞ்சேர்
வானத்தவர்க்கு மல்லாதவர்க்கும் மற்றெல்லாயவர்க்கு
ஞானப் பிரானை யல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே."

அ - து. ஊராரும் செவிலித் தாயும் வெறுத்தும் பழித்தும் கூறும் இழிசொல் பரவட்டும். பிரளயத்திலாழ்ந்த பூமியை வராஹ மூர்த்தியாய்த் தூக்கியெடுத்த என் தலைவனும் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் எல லோர்க்கும் அறிவைக் கொடுக்கிற தலைவனுமாகிய எம்பெருமானை யல்லால் நான் அறிந்த நற்பொருள் வேறில்லையென்பதே இதற்கு உள்ளுறைப் பொருள். பிறவிப் பெருங் கடலினின்று என்னை ஈடேற்றுவதற்குத் தஞ்ச மாக நான் எம்பெருமானையே நினைத்திருப்பேனென்று தம் சித்தாந்தத்தை ஆழ்வார் அன்பர்க்கு அருளிச் செய்தது.

100. நூற்பயன். நற்குண நற்செய்கையை உடையவர்கள் புகழ்ந்து கூறப்படும் திருக்குருகூரில் அவதரித்த திருமாலின் திருநாமங்களைப் பயின்ற தொண்டர்களின் திருவடிகளான பூமாலையைத் தன் முடியில் சூட்டின நம்மாழ்வார், ஸர்வேசவரனுடைய ஸந்நிதியிலே விண்ணப்பஞ் செய்த இந்தச் சொல்மாலையான நூறுபாடல்களையும் கற்று வல்லவர்கள் பிறப்பிறப் பிற்குக் காரணமான ஊழ்வினை யென்ற சேற்றால் நிறைந்த இப்பொய்யுலகில் அழுந்தமாட்டார்.

இதிலுள்ள பாசுரங்கள் ஒவ்வொன்றிற்கும் ஆதாரமான திருவாய் மொழியின் பாடல்கள் அங்கங்கே எடுத்துக் காட்டப்படுவதை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் பதிப்பில் கண்டுகொள்ளலாம்.

# திருவாய்மொழி.

இதுவரையில் ஆழ்வார்களின் வைபவத்தையும் அவர்களால் பாடப்பட்ட பாசுரங்களின் மஹிமையையும் என் புத்திக் கெட்டினவரையிலும் இந்தச் சிறு நூல் இடங்கொடுக்கும்வரையிலும் எழுதிவந்தேன். ஆனால் மற்ற ஆழ்வார்கள் அவயவங்களும் இவ்வாழ்வார் பிரதான ரூபமாய் இருப்பது போல், இவரால் இயற்றப்பட்ட திருவாய்மொழி "ஸர்வ பிரதானமான நான்கு வேதங்களில் நான் ஸாமவேத" மென்று கண்ணன் கீதையில் உபதேசிக்கப்பட்டபடி பகவத் ஸ்வரூபமான ஸாமவேதத்தின் ஸாரமாகும். மற்றவர்களின் பாசுரங்கள் இதற்கு அங்கமாகும். இந்தத் திருவாய்மொழியில் அடங்கியிருக்கும் அருமையான விஷயங்களையும் பரம ரஹஸ்யங்களையும் ஞான பக்தி வைராக்கியமென்ற படிகளில் சேதனர்களின் மனதை ஈடுபடச் செய்யும் திறமையையும் இதுவரையில் எவ்வளவோ மகான்கள் எடுத்துச் சொல்ல முயன்றும் மனதாலும் வாக்காலும் எட்ட முடியாமல் கை சோர்ந்தார்கள். இப்படியிருக்க, நான் இந்தச் சிறு நூலில் அதைப் பற்றிச் சொல்ல முயல்வதே தகாதது. ஆகையால் இந்தப் பாசுரங்களை வேத சாஸ்திரங்களைப் போல் அத்யயனம் செய்து அநுஸந்தானம் செய்து உய்யுமாறு ஆசை உண்டாவதற்காக இது ஒரு விஷயக் குறிப்பாகுமேயல்லாது வேறொன்றையும் இதைப் படிப்பவர்கள் எதிர்பார்க்க நியாயமில்லை.

சேதனரால் கதியென்று அடையப்படுமவனை எம்பெருமானுடைய ஸ்வரூபம், அடையப்புகுகிற ஜீவஸ்வரூபம், அடைதலென்ற பலத்தின் ஸ்வரூபம், அதற்கு உபாயமான பக்தி ஸ்வரூபம், அதற்கு நேரும் விரோதிகளின் ஸ்வரூபம் என்ற இந்த அர்த்த பஞ்சகத்தையும் அடக்கிக்கொண்டிருப்பது ஸகல வேத சாஸ்திரங்களுடைய ஸ்வரூபமாகும். அவைகளின் ஸங்கிரஹமே மந்திர ரத்னமென்ற த்வயம். அது இரண்டு கண்டமாய் பத்து வாக்கியங்களாகும். அதின் விவரணமே இந்தத் திருவாய்மொழி. முதற் பத்தில் "மலர் மகள் விரும்பும் நம் அரும் பெறலடிகள்," "மலராள் மைந்தன்," "திருமா மகளார் தனிக் கேள்வன்" "திருவின் மணாளன்," "மலராள் மணவாளன்" முதலிய பாசுரங்களால் பூர்வ கண்டத்தின் முதல் வாக்கியமான ஸ்ரீமன் என்ற சப்தத்திற்குரிய ஸ்ரீயப்பதி யென்றது உபதேசிக்கப்படுகிறது. இரண்டாம் பத்தில், "எம்பெருமான் நாரணன்" "நாரணன் மூவேழுலகுக்கும் நாதன்" முதலிய பாசுரங்களால் இரண்டாவது வாக்கியமான நாராயண வென்ற சப்தத்தின் பொருளான பகவான் வர்ணிக்கப்படுகிறான். மூன்றாவது பத்தில், "அங்கதிரடியன்," "மூவுலகும் தொழுதேத்தும் சீரடியன்" என்ற பாசுரங்களால் மூன்றாவது வாக்கியமான சரணௌ வென்ற சப்தத்தின் அர்த்தமான அவனு

டைய திருவடிகள் சொல்லப்படுகின்றன. நான்காம் பத்தில், "வல்வினை தீர்க்கும் கண்ணன்," "வெய்ய நோய்கள் முழுதும் வியன் ஞாலத்து வீய," "பிறந்தும் செத்தும் நின்றிடரும் பேதமை தீர்ந்தொழிந்தேன்" "வேட்கை யெல்லாம் விடுவித்து" முதலிய பாசுரங்களால் நான்காம் வாக்கியமான சரணம் என்றபதத்தின் பொருளான இஷ்டப் பிராப்தி அனிஷ்ட நிவிருத்திக்குக் காரணமாய் நின்ற அவனையடைதல் சொல்லப்படுகிறது. ஐந்தாம் பத்தில் "தமியேனுக்கருளாய்," "உன்னாலல்லால் யாவராலும் ஒன்றுங் குறை வேண்டேன்," "நாமங்களாயிரமுடைய நம்பெருமானடி மேல் சேமங் கொள் தென்குருகூர்ச் சடகோபன்," "நாகணை மிசை நம்பிரான், சரணமக் கென்று நாடோறுமேக சிந்தையனாய்" முதலிய பாசுரங்களால் ஐந்தாம் வாக்கியமான பிரபத்யே யென்ற சப்தார்த்தமான பிரார்த்தனை சொல்லப்படுகிறது. ஆறாவது பத்தில் "அடிமை செய்வார் திருமாலுக்கே," "என்திரு மார்பர்," "கோலத்திருமாமகளோடுன்னை," "ஒசிந்த வொண் மலராள் கொழுநன்" முதலிய பாசுரங்களால் உத்தர கண்டத்தின் முதல் வாக்கியமான ஸ்ரீமதே யென்ற நித்யஸம்பந்தம் விளக்கப்படுகிறது, முன் வாக்கியத்தில் பிரார்த்தனை அடங்கி யிருந்தது போல் இங்கே கைங்கரியமும் பிரார்த்திக்கப்படுகிறது. ஏழாவது பத்தில் "கண்ணனேயமுதே," "ஏழுலகை இன்பம் பயக்க" முதலிய பாசுரங்களால் இரண்டாம் வாக்கியமான நாரா வென்ற சப்தத்தின் உட்பொருளான கைங்கரியத்தை அடைவதற்குக் காரமான ஈசுவரனுடைய ஈடற்ற யோக்கியதையை வெளியிடுகிறது. எட்டாவது பத்தில் "அடியேன் பெரியவம்மான்," "அமர்ந்தநாதனே" "மூவுலகாளி" யென்ற பாசுரங்களால் மூன்றும் வாக்கியமான அயன சப்தத்திற்கேற்ற ஸர்வேசுவரனென்ற தன்மை உபதேசிக்கப்படுகிறது. ஒன்பதாம் பத்தில் "நின்றீதத்தவடிக் குற்றேவல்" "தொடர்ந்து குற்றேவல் செய்து" "கொடுமா வினையேனும் பிடிக்க," நானும் மீளாவடிமைப் பணி செய்யப் புகுந்தேன்" முதலிய பாசுரங்களால் நான்காம் வாக்கியமான ஆய என்ற சப்தத்தின் கருத்தாகிய நித்ய கைங்கரியம் சொல்லப்படுகிறது. பத்தாம் பத்தில் "துயர் கெடும்" "இப்பிறப்பறுக்கும்" "பிறவித்துயர் கடிந்தோம்" "பிறவிகெடுத்தேன்," "அவாவற்று வீடு பெற்ற" யென்ற பாசுரங்களால் ஐந்தாம் வாக்கியமான நம: வென்ற சப்தத்தின் ஆர்த்தமாகிய கைங்கரிய பிராப்திக்கு நேரும் இடையூறுகளை வேருடன் அழிப்பதும் உபதேசிக்கப்படு

இப்படி மிக்க வேதியர், வேதத்தி னுட்பொருளென்று சுருதிஸ்மிருதி இதிஹாஸ புராணங்களில் ஆழ்ந்து கிடந்த பரம ரஹஸ்யங்களை வடமொழியி லிருந்து எடுத்து ஸ்திரீ புருஷ பாமர பண்டித குபேர தரித்ர பால விருத்தர்களென்ற பேதமின்றி எல்லோரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி

செய்த ஸ்ரீசடகோபனுடைய திவ்ய ஸூக்திகளின் மஹிமையைச் சொல்லப் புகுவதே ஸாஹஸமாகும்.

இதற்கு நாதமுனிகளும் ஈசுவர முனிகளும் சொட்டை நம்பிகளும் அனந்தாழ்வானும் பட்டரும் தனியன்களை அருளிச் செய்திருக்கிறார்கள்.

I. 1. பரம புருஷனையும் கருணாமூர்த்தியாயுமிருக்கும் எம்பெருமானுடைய திருவடிகளிலே நித்ய கைங்கரியத்தைப் பண்ணிக் கடைத்தேறக் கடவாயென்று தன் மனதை எச்சரிக்கிறார்.

2. மோக்ஷ சாஸ்திரம் தத்வத்தையும் உபாஸனையையும் சொல்லும், தத்வம் முன்பு சொல்லப்பட்டது. இங்கே உபாஸனை சொல்லப்படுகிறது. மற்றவைகளில் வைராக்கியத்தைச் செய்து பகவானிடத்தில் பக்தியைப் பண்ணி ஆசிரயிக்கக் கடவீரென்று பரோபதேசஞ் செய்கிறார்.

அவன் அடியார்களுக்கு எளியவனாகையால் அவனை ஆசிரயிப்பது ஸுலபமென்கிறார்.

6. ஆத்மாக்கள் அவனை அறியாமல் மோசம் போகிறார்களேயென்று "நீங்கள் அவனை ஆராதிப்பது பரம ஸுலப" மென்கிறார்.

7. அந்த ஆராதனம் ஸுகரூபமாயிருக்குமென்கிறார்.

8. தன்னை ஒருநாளும் அணுகமாட்டாத சேதனரிடத்தில் அவனே வந்தடைவானென்கிறார்.

9. இப்படி அவன் தன்னை வந்தடைந்த அனுபவத்தை வர்ணிக்கிறார்.

10. அதற்குத் தம்மிடத்தில் யாதொரு காரணமுமில்லாததால் அவன் செய்த பேருபகாரத்தைக் கொண்டாடுகிறார்.

II. 2. அவனுடைய பரத்வம் முதலிய குணங்கள் அவதாரத்திலுமுண்டென்கிறார்.

3. அவனை அனுபவிப்பதற்கு ஸம்ஸாரிகள் உதவி செய்யார். இதற்கு உதவி செய்யும் நித்யஸூரிகளுடன் எப்பொழுது கூடுவேனென்று பிரார்த்திக்கிறார்.

6. ஆழ்வார் நம்மை விட்டுப் பிரிவாரோ வென்று பயந்த எம்பெருமானை "உன்னை ஒருகாலும் விடத்தக்கதில்லை" யென்றுதேற்றுகிறார்.

7. தனனைப்போல் தன்னைச் சேர்ந்தவரிடத்திலும் அவனுக்குண்

டான பிரீதியைக் கண்டு ஆழ்வார் தன் ஏழு தலைமுறையோரும் கடைத் தேறினார்களென்று அவனுடைய துவாதச நாமங்களைப் போற்றுகிறார்.

8. ஸம்ஸாரிகளையும இப்படியே செயயவேண்டுமென்று அவர் களுக்கு மோக்ஷ உபாயத்தை உபதேசிக்கிறார்.

9. என்னிடததில் நீர் வைத்த பிரீதிககாக இவர்களுக்கு மோக்ஷம் அருளவேண்டாம உன் பிரீதியினாலேயே அபபடிச செய்யவேண்டு மென்று கைங்கரியத்தை வேண்டுகிறார்.

III. 3. எமபெருமானுக்கு ஸகலவித கைங்கரியங்களைச செய்ய வேண்டுகிறார்.

4. அதறகாக ஈசுவரன தன்னை அனுப்பிவிக்கச் செய்யத தான் அதற்குககதபடி பணிவிடை செய்ய முடியாததைப் பறறி வருந்தினா· "நீர இப்படி விருமபினதே போது"மென்று அவன் சொலலக் கேவலம வாக்கினால் கைங்கரியம பண்ணுகிறா.

5. அடியாரைக் கொண்டாடி அல்லாதவரை நிநதிக்கிறார்.

6. பர வியூக விபவ அநதரியாமிகளைக் காட்டிலும அாசசாவதாரமே கைங்கரியத்திறகு ஸுலபமெனகிறா.

7. அடியாா எனக்கு ஸ்வாமிகளென்று பாகவத சேஷததை அருளிச் செய்கிறார்.

8. ஆனால இது பரஸ்பர போதனததிறகு உபயோகமாகாததால் அவனுடைய குணங்களை ஸ்மரிப்பதில் ஒவவொரு இநதிரியமும் பஞ்சேந் திரியங்களின் செயல்களைச் செய்ய விரும்பினவெனகிறா.

"9. உலகததாரே! இதர தெய்வங்களைத துதிததால் பயனென்ன. ஸ்ரீயப்பதியை என்னுடன் போற்றுஙகள். ஸகல அபீஷ்டங்களும் கிடைக் கு"மென்றார்.

10. மற்றவாகளைப் புகழும் கவிகளை எம்பெருமானைத துதிக்குமபடி வேண்ட, அவர்கள் இயங்காததால் தான அப்படிச செய்து பரம லாபங்களை அடைநததைச் சொல்லுகிறார்.

IV. 1. இம்மையில் கிடைக்கும் யாவும் அநித்யம். கைவல்யமும் அல்பம். எம்பெருமானை அனுபவிபபதே நித்யமாயும் நிரபாயமாயுமிருக்கும் பரம புருஷார்த்தமென்று பரோபதேசஞ் செய்கிறார்.

2. அப்படிச் செய்தும் பலிக்காததால் தான் மிகவும் அவனிடத்தில் ஈடுபட்டு அவதாரங்களெல்லாவற்றையும் காட்டும்படி வேண்டுகிறார்.

3. அப்படிக் காட்டினது.

9. என்னைப் பிரிந்தாலும் அதைப் பொறுப்போம். உன்னிடத்தில் பக்தியில்லாதவர்களைப் பார்க்கமாட்டேன். இந்தத் தேஹத்தைத் தவிர்க்கக்கடவாயென்கிறார்.

10. பின்னும் அவர்களிடத்தில் கிருபையுண்டாகி அவனையே சரணடையுங்களென்று உபதேசஞ் செய்கிறார்.

V. 1. பக்தியில்லாமல் பக்தனைப்போல அநுசந்தானத்தைச் சொல்லி லௌகிகனாய்த் திரியும் என்கருத்தன்னை அடையும்படி அருளினனென்று நன்றியறிவைக் காட்டுகிறார்.

2. தம் உபதேசத்தால் கடைந்தேறினவரையும் தம்மைப் பார்க்க வந்த நித்யஸூரிகளையும் மங்களாசாஸனம் செய்கிறார். (இங்கே முதலாவது பாட்டில் "கலியும் கெடும் கண்டு கொண்மின்" என்ற வாக்கியத்திற்கு இனி எம்பெருமானுடைய திருவுள்ளத்தால் அவதரித்து எல்லோரையும் அவனுடைய திருவடிகளில் சேர்ப்பித்த யதிராஜரைக் குறிப்பிடுவதாய்ச் சொல்வதுண்டு.)

8. ஆராவமுத ஆழ்வாரிடத்தில் பிரபத்தி செய்கிறார். (இந்தப் பத்தும் அளவற்ற மகிமையுள்ளதாகையாலே ஆழ்வார்களின் பாசுரங்கள் உலகத்தில் மறைந்தபொழுது இவைமாத்திரம் மிஞ்சின. ஸ்ரீமந் நாதமுனிகள் இதைக் கேட்டு காரிமாறப் பிரானைச் சரணம்புக்கு அவருடைய அருளால் திவ்ய பிரபந்தத்தைப் பெற்று வெளியிட்டார்.)

10. அர்ச்சாவதாரத்தில் தன்னெண்ணம் கைகூடாததால் அவதாரங்களில் புகுந்து வேண்டுகிறார்.

VII. 1. பிரபத்தி பண்ணினாலும் ஆழ்வார் ஆரம்பித்த பிரபந்தத்தை முடிக்கும் வரையில் மோக்ஷத்தைக் கொடுப்பதில்லையென்று ஈச்வரன் தாமதஞ்செய்ய, இன்னும் எத்தனை நாள் இப்படி நலிவேனென்று முறையிடுகிறார்.

5. சேதனர்கள் இதர தேவதைகளை ஆச்ரயித்துக் கெடுவதைக் கண்டு வியந்து தான் பக்தியால் பரம லாபத்தைப் பெற்றதைச் சொல்லுகிறார்.

6. அவனைப் பிரத்யக்ஷமாய்க் காணவேண்டுமென்று ஆசைப்பட்டுக் கிடைக்காமல் வருந்துகிறார்.

8. இப்படிக் கஷ்டப்படும் என்னை இவ்வுலகத்தில் ஏன் நிறுத்தி வைக்கிறீரென, அவன் ஒன்று கேட்க ஒன்று சொல்லி என் மகிமையைப் பாரென்று காட்டினான். இவர் யாவற்றையும் மறந்து அதைக் கண்டு ஆச்சரியப்படுகிறார்.

9. மறுபடியும் அதையே கேட்க, அவன் எனக்கும் என் அடியார்க்கும் இனிமையான பிரபந்தத்தைச் செய்து முடிப்பதற்கே உன்னை வைத்திருக்கிறேனென, ஆழ்வார் இந்த உபகாரத்திற்குக் கைம்மாறு என்ன செய்வேனென்று தடுமாறுகிறார்.

VIII. 3. அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை மங்களாசாஸனம் செய்வதற்கு தன்னைத் தவிர வேறில்லையேயென்று பயப்படுகையில் அவன் "நித்ய முக்தரும் முமுக்ஷுக்களுமிருக்க உமக்குப் பயமென்ன" வென்று ஸமாதானஞ் செய்ததைச் சொல்லுகிறார்.

5. இவ்வளவும் மனதால் அனுபவித்ததேயொழிய பிரத்தியக்ஷமாக இல்லையேயென்று நினைத்து அவனைக் கூவித் தானும் தன் இந்திரியங்களாலும் முறையிடுகிறார்.

8. ஆழ்வார் I. 3-ல் "பத்துடையடியவர்க்கு" என்றபோது முதலாவது தடவை மோஹித்தார். பிறகு V. 10 "பிறந்தவாறும்" என்றபொழுது இரண்டாவது தடவை மோஹித்தார். "கண்கள் சிவந்து" என்ற இந்த எட்டாவது பாசுரத்தில் மூன்றாவது தடவை மோஹிக்கிறார்.

10. ஐசுவரியம் முதல ஸர்வேசுவரனுடைய பதவி வரையிலுள்ள ஸகல புருஷார்த்தங்களும் தனித்தனியாகவும் ஒன்று சேர்ந்தும் அடியார்க்கடிமை செய்யும் பாக்கியத்திற்கு ஈடல்ல வென்கிறார்.

IX. 1. ஈசுவரனே பந்து, அவனே தோழன்; அவனுக்கு அடியாரல்லாதவர் நமக்கு பந்துக்களுமல்ல; நண்பருமல்ல வென்கிறார்.

6. அவன் தன் மேன்மையையும் துறந்து தன்னை வந்தடைந்ததையும் அவனுடைய வடிவழகையும் சொல்லி அதுதான் இப்போதே அனுபவமென்று அவனுடைய சீல்குண ஸ்மரணத்தில் ஈடுபடுகிறார்.

8. அப்படியும் அவன் வாராததால் பதறி 'அங்கே போகமுடியவில்லையே, போகும் நாள் என்றோ, அங்கேபோய் என் கண்ணுறக் கண்டு அடிமை செய்ய முடியவில்லையே' யென்று வருந்துகிறார்.

9. பாதகங்கள் தனித்தனியாயும் யாவும் மேல்விழுந்து வருத்த, அவற்றாலே பட்டவர்களெல்லாரும் கூப்பிட்ட கூப்பாட்டை இவரொருவரே கூப்பிடுகிறார்.

10. ஈசுவரன் இவரை ஸமாதானம் பண்ண "அவனைப் போற்றுங்கள்; முடியாவிட்டால் பிரபத்தி செய்யுங்கள்; முடியாவிட்டால் குணங்களைச் சொல்லுங்கள்; முடியாவிட்டால் நாமகீர்த்தனஞ் செய்யுங்கள். அதைக் கொண்டே அவன் உங்களைக் கைவிடானெ"ன்கிறார்.

X. 1. நமது விரோதிகளைப் போக்கி முடிவுவரையில் கொண்டு போய் வழிநடத்துவான அந்த ஈசுவரனேயென்று முடிவுசெய்து புதிய விடங்களுக்குப் போகிறவர் முன்சென்ற வரையும் பலசாலிகளையும் துணை கொண்டு போவதுபோல், இவ்வாழ்வாரும் சரீரம் நழுவும் ஸமயத்தில் அவனிடத்தில் தன்னை ஒப்புவித்து அவனையே வழித்துணையாகப் பற்றுகிறார்.

2. நடுவில் நேரும் இடையூறுகளைப் போக்கித் தவனைக் கொண்டு போய்விடுவதற்கு அவனைத் துணை பற்றின ஆழ்வார் "அவ்வளவு தான் நமக்குப் போகவேண்டுமோ? இங்கே திருவனந்த புரமே வைகுண்டமாகு" மென்று நிச்சயித்து, நம்மோடு சம்பந்தமுள்ள அநுகூல ஜனங்கள் யாவரும் அங்கேபோய்ச் சேருமெனகிறார்.

4. வீடுமின் முற்றம், பத்துடையடியவரென்ற பாசுரங்களில் செய்த பரோபதேசமே தனக்குத் தாரகமானதை சொல்லுகிறார்.

5. ஸர்வேசுவரனை மந்திரங்களால் பூஜியுங்கள், மலர்களால் அர்ச்சனை செய்யுங்கள், மனோவாக்கு காயங்களால் அனுபவியுங்கள், ஸகல இடையூறுகளும் தாமே போம். பரம புருஷார்த்தமும் கைகூடுமென்று பக்தி யோகத்தைச் சுருக்கமாய் உபதேசிக்கிறார் ('கண்ணன் கழலினை' யென்ற இந்த வாக்கியத்தை ஒரு சீட்டில் மதுரகவிகள் ஆழ்வாரின் உத்திரவால் எழுதிச், சங்கப்பலகையின் மேல் வைக்க, அது அங்கிருந்த புலவரை நீரில் அமிழ்த்தி இந்தச் சீட்டை மாத்திரம் தாங்கிக்கொண்டு மிதந்தது. அதைக் கண்டு சங்கத்தார் ஆழ்வாருடைய மகிமையை அறிந்து கொண்டாடினு ரென்பர்.)

7. தம்மோடே வந்து கலந்து பட்தந்திரனைத் தன் தேகத்தை விடமாட்டாமல் அவனிருப்பதைக் கண்டு ஆழ்வார் "ஐயோ! இந்தப் பாழும் உடலை இப்படிப் பண்ணும்படி விடுவதைத் தவிர்க்கவேண்டு"மென்று வேண்டினர். அவனும் "இவருக்கு இது இஷ்டமில்லாததால் நாமும் தவிர்ப்போ"மென, ஆழ்வார் "நான் சொன்னபடியெல்லாம் செய்வதும்

இவனுடைய எல்லையற்ற சௌலப்யத்தின் குறியோ'' வென்று பிரீதி மிகுந்து பிறர்க்கு எடுத்துச் சொல்லுகிறார்.

8. ஆழ்வார் 'இப்படி இதுவரையில் செய்யாமலிருந்தேன்' என, அவன் ஒன்றும் பதில் சொல்லத் தோன்றாமல் தலை கவிழ்ந்து மௌனமாய் நின்றான். அதைக் கண்டு ஆழ்வார் இப்படி என்னிடத்தில் அவன் வைத்த பிரேமையையும் கருணையையும் நினைந்தால் இதற்கு யாதொரு காரணமுமில்லையேயென்று ஆச்சரியப்படுகிறார்.

9. பரமயோகிகளுக்குப் பிறக்கக் கூடிய பராபக்தி இவருக்குப் பிறந்தது. பரமபதத்திற்குப் போகவேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்பொழுது அவன் முக்தர்கள் போகும் அர்ச்சிராதி மார்க்கத்தையும், சரீரம் நழுவும் ஸமயத்தில் உண்டாகும் கஷ்டமெல்லாம் அறும்படி தான் வந்து ஸேவை ஸாதிப்பதையும், வழியிலுள்ள லோகபாலர்கள் உபசாரஞ் செய்வதையும், போய்ச் சேரவேண்டிய பரமபதத்தையும், நித்யஸூரிகள் எதிர்கொண்டு வந்து வரவேற்பதையும், பிராட்டியாரும் வைகுண்டநாதனும் எதிரே வந்து ஆதரிப்பதையும், நித்ய ஸூரிகள் ஸேவிக்க அவன் பிராட்டியாரோடு வீற்றிருப்பதையும், நித்ய ஸூரிகளின் நடுவில் தானும் ஆனந்த பரவசராய் நிற்பதையும் காட்டினான். அதை வெளியிடுகிறார். (இந்த "சூழ்விசும்பணி முகில்" என்ற பத்தும் மகாபுருஷர்களின் தேஹ வியோக ஸமயத்தில் சொல்வதுண்டு.)

10. இப்படி முக்தனுடைய இருப்பை பரஞானத்தால் கண்டறிந்து அனுபவித்த ஆழ்வார், ஸமாதி கலைந்து அவனுடைய ஸந்நிதியில் தன் முறைமையைத் தெரிவித்து அவன் செய்த உபகாரங்களை எடுத்துச் சொல்லி, பிராட்டியின் மேல் ஆணையிட்டு "எனக்குப் பூர்ணானுபவத்தைத் தரவேண்டு" மென்று நிர்ப்பந்தித்தார். அதற்கேற்க அவனும் பிராட்டியோடு பெரிய திருவடிமேல் பூர்ண ஸ்வரூபத்துடன் தோன்றி இவருடைய பிரகிருதி ஸம்பந்தத்தை அறுத்து நித்ய ஸூரிகளிலே புகச்செய்தான். இவரும் "என்ன வறவறச்சூழ்ந்தாயே, அவா வற்று வீடுபெற்றே''னென்று தாமே சொல்லும்படி இவருடைய விடாயைத் தீர்த்து தன் விடாயும் தீரும்படி இவரைக் கலந்து அனுபவித்ததை வர்ணித்து இந்தப் பிரபந்தத்தைத் தலைக்கட்டுகிறார்.

இவ்வாழ்வார் எம்பெருமானிடத்தில் பரம பக்தி செய்து அதனால் அவன் தன்னை வந்தடைந்து கலந்து அனுபவித்ததைக் 'கேவலம் மனதால் உணர்ந்ததேயொழியத் தேஹேந்திரியங்களுக்கு இலக்காகும்படியான' அனுபவத்தைப் பெறவில்லை. ஆகையால் இவர் அடிக்கடி காதல் மிகுந்து தன்னை மறந்து கண்ணனிடத்தில் காமுற்ற பிராட்டியின் தசையை அடை

நத்தன் குறைகளையும் கோறிக்கைகளையும் அடியிற்கண்ட பாசுரங்களால் வெளியிட்டிருக்கிறார். இவைகளுக்கு வெளிப்படையான பொருளும் உள்ளுறைப் பொருளும் (ஸ்வாபதேசம் அந்யாபதேசம்) உண்டு. அதை பெரியோரால் இயற்றப்பட்ட வியாக்கியானங்களிலிருந்தும் குருசிஷ்ய க்ரமமாய் உபதேசத்தாலும் கண்டு கொள்க — I. 4, II. 1 4, IV 4, 6, 7, 8, V, 3, 4, 5, 6, 7, 9, 10, VI, 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10 VII. 2, 3, 7, VIII, 2, 9, IX, 5, 7, X, 3.

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

# மதுரகவியாழ்வார் வைபவம்.

தென்னாட்டில் திருக்குருகூர்க்கருகில் விளங்கும் திருக்கோளூரென்ற புண்ணிய க்ஷேத்ரத்தில், த்வாபர யுகத்தில் 8, 63879 வதான ஈசுவர ௵ சித்திரைமீ˚ சுக்லபக்ஷம சுக்ரவாரம் சித்திரை நக்ஷத்திரத்தில், இவ்வாழ்வார் கணநாயகரான குமுதருடைய அம்சமும் கருடாழ்வாரின் அம்சமுமாய், முன் குடுமிபிராமணர் குலத்தில் அவதரித்தார். ஸூரியனுக்கு ஸாரதியாய் முதலில் காணப்படும் அருணனைப்போல், நம்மாழ்வாருடைய அவதார காலத்திற்குச் சற்று முன் தோன்றின இவர், கிரமப்படி பால்யத்திலேயே வேத வேதாங்கங்களைக் கற்று, மெய்யுணர்வு பெற்று, அவா வற்று, விஷ்ணு பக்தி மிஞ்சி, இனிய கவிகளைப் பாடவல்லவராய் மதுரகவியென்று கீர்த்தி பொருந்திய, திவ்ய தேசயாத்திரை செய்யக் கருதி திருப்பதிகளை ஸேவித்துக்கொண்டு வந்தார்.

வடநாட்டுத் திருப்பதிகளில் சக்கிரவர்த்தி திருமகன் அவதரித்த புண்ணிய க்ஷேத்திரங்கள் ஏழில் முதலாவதான திருவயோத்தியில் விளங்கும் ஸீதா காந்தனை ஸேவித்து, அங்கேயே சிலகாலம் தங்கியிருந்தார்.

ஒரு நாளிரவில் இவர் திருக்கோளூர் எம்பெருமானார் வைத்தமாநிதியைப் போற்ற நினைத்து அத்திசை நோக்கிப் பார்க்கையில், ஏதோ அகண்டமான ஓர் திவ்யசோதி விளங்கக் கண்டு 'இதென்ன! கிராம நகரங்கள் நெருப்புப் பிடித்த தெரிகின்றனவோ, அல்லது காட்டுத் தீயோ' வென்று நினைத்தார். இப்படியே அடுத்த மூன்று ராத்ரிகளிலும் கண்டு அதின் ரஹஸ்யத்தை அறிய விரும்பி, இரவெல்லாம் அதையே குறியாக வைத்துக்கொண்டு அதிவேகமாய் வழி நடந்து, முடிவில் ஆழ்வார்திருநகரிக்கு வந்தார். அங்கேயும் அந்த சோதி தோன்றிற்று; அதைத் தாண்டிச் சென்று பார்க்கையில் அது தனக்குப் பின் புறத்தில் காணப்பட்டது. ஆகையால் திரும்பி அது உண்டாகுமிடத்திற்கு வந்து பார்க்கையில், குருகூரில் திருப்புளிமரத்தின் கீழ் யோகஸமாதியில் எழுந்தருளியிருக்கும் சடகோபரைக் கண்டு அவ்வொளி அவருடைய திருமேனியிலிருந்து உண்டானதென்றறிந்தார். பூர்வ ஜன்ம ஸம்பந்தத்தாலும் புண்ய வசத்தாலும் அவரிடத்தில் தன் மனம்நாடி எல்லையற்ற அன்பும் பக்தியும் உண்டாகி அவரே தனக்குக் குருவென்றும் தெய்வமென்றும் நிச்சயித்து, இவருக்கு உணர்ச்சியுண்டோவென்று சோதிக்கக் கருதி, இவர் முன்னிலையில் ஒரு சிறு கல்லையெடுத்துப்

போட்டார். அது விழுந்த சத்தத்தைக் கேட்ட நம்மாழ்வார் கண்களை விழித்துப்பார்க்க, மதுரகவிகள் இவருக்குப் பேசுந் திறமையுண்டோவென் றறிய விரும்பி, 'செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கு''மென்று கேட்டார். (அசித்தான சரீரத்தில் அணுரூப மான ஆத்மா வந்து சேர்ந்தால் அது எதை யனுபவிக்கும், எங்கே தங்கி யிருக்குமெனபது)

அதைக்கேட்டுப் பராங்குசர் 'அத்தைத்தின்று அங்கே கிடக்கு'' மென்று பதிலருளிச் செய்தார். (''அந்தத் தேஹத்தில் வரும் ஸுக துக்கங்களை யனுபவித்துக் கொண்டு அதையே பற்றுகக் கொண்டிருக்கும்) உடனே மதுரகவிகள் அகமகிழ்ந்து அவருடைய திருவடிகளில் ஸாஷ்டாங்கமாய் விழுந்து தாளுநதடக்கையுங் கூப்பிச சரணமடைநதார். நம் மாழ்வார அவரைக் குளிரக்கடாக்ஷித்து அவருக்குப் பஞ்ச ஸம்ஸ்காரம் பிரஸாதித்து ஆட்கொண்டு வேத வேதாந்தங்களின் அகப்பொருளான தமிழ் நூல்களை இயற்றி அவற்றை மதுரகவிகளுக் குபதேசித்தருளினர்.

பிறகு மதுரகவிகள் தான் ஆழவாரது அருளால பெற்ற திவ்ய பிர பந்தங்களைப் பண்ணிசையுடன பொறறுளங் கொண்டு எப்பொழுதும் அதையே உபாயமாயும உபமேயமாயும் போறறிப்பாராயணம் செய்துவந்தார். பகவத கைங்கரியம செய்த பரதாழ்வானுக்கு பாகவத கைங்கர்யஞ் செய்து கடைத்தேறின சதருக்னுழ்வானைப் போல, மதுரகவிகள் தன் ஆசாரி யனுன நமமாழ்வாரையே பரமபொருளாய்ப் பாவித்து ஆசாரிய நிஷ்டை யெனற தர்மததை யனுஷ்டிததுக் காட்டினர். நம்மாழவாருடைய பிர பாவத்தைத தான் கண்டனுபவிததபடி உலகததாரும கண்டு உய்யுமாறு கண்ணிநுண் சிறுத்தாமபு எனற திவ்ய பிரபநதததைப பாடினா. இதற் குள் பராங்குசர் திருநாட்டை யலங்கரிக்க, மதுரகவிகள ஆராத்துயரங் கொண்டு, காரிமாறனுடைய உக்கிரஹததை திருநகரியிலே எறியருளப் பண்ணி பிரதிஷ்டை செய்து, அவருக்கு மஹோதஸவங்களைச் சிறப்பாக நடத்திக்கொண்டு வநதாா. அப்பொழுது ஆழவாருடைய விருதுகளைக் கூறித் திருச்சின்னம் முழங்கக்கேட்ட சங்கப்புலவாகள அது பொறுமல் அங்கே வந்து எதிர்தது ''உங்களுடைய ஆழ்வாா ஸாமானிய பக்தரே. பகவானல்லவே. இவா எங்களில் ஒருவரோ. இவா செய்த திருவாய் மொழி சங்கமேறின நூலோ. இப்படி யிருக்க, இவரை வேதந்தமிழ் செய்தவரென்றும், தெய்வப புலவரென்றும் அளவிலா ஞானத்தவரென் றும் கொண்டாடந்தகாது. இதறகு இடங்கொடோ''மென்று தடுத்தனர். அப்பொழுது மதுரகவிகள் மனம்பொறுமல் நொநது ஆழ்வாரைத் தியா னித்துச் சரணமடைந்து ''ஸ்வாமி! இநதத் துஷ்டர்களுக்கு நல்ல புத்தி வருமாறு தேவரீரே உபாயம் செய்யவேண்டு''மென்று பிரார்த்தித்தார்.

அவருடைய கனவில் சடகோபர் ஒரு வயது சென்ற வேதியரின் உருவத்துடன் தோன்றி "ஏன் வருந்துகிறீர். திருவாய்மொழியில் 'கண்ணன் கழலிணை'யென்ற பாசுரத்தின் முதலடியை ஒரு ஏட்டிலெழுதி சங்கப்பலகையில் வையும். பிறகு நடப்பதைப் பாரு"மென்றருளி மறைந்தார்.

ஆசாரியனுடைய கட்டளைப்படி மதுரகவிகள் 'கண்ணன் கழலிணையை' ஏட்டிலெழுதிக் கொண்டு போய்ப் பொற்றாமரைப் பொய்கையில் புலவர்கள் வீற்றிருந்த சங்கப்பலகையில் வைத்தார். உடனே அப்பலகை நீரில் மூழ்கிப் புலவர்களைத் தள்ளிவிட்டு மேலெழுந்து கண்ணன் கழலிணை யெழுதியிருந்த ஏட்டை மாத்திரம் தாங்கி மிதந்தது. புலவர்கள் கட்டித் தடுமாறிக் கரைசேர்ந்து, "நசனருளால் ஸகல வேத சாஸ்திரங்களையும் இயற்கையாயுணர்ந்த ஆழ்வாருடைய தெய்வத் தன்மையை யறியாமல் இறுமாந்து அபசாரப்பட்டோமே"யென்று வருந்தி, அதற்குப் பரிஹாரமாய் ஒவ்வொருவரும் பாடல்களைப் பாடினார்கள். ஆனால் அவையாவும்

"சேமங் குருகையோ செய்ய திருப்பாற்கடலோ
நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமந்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு
முளவோ பெருமானுனக்கு"

என்ற பாடலாயக் கொஞ்சமேனும் வேற்றுமையின்றி கேட்கப்பட்டது. அதைக்கண்டு அவர்கள் திகைத்து 'இதுவும் ஆழ்வாருடைய பிரபாவமே' யென்று பலவிதமாய் அவரைத் துதித்து அன்று முதல் தாங்களே அவருக்குப் பதினமடங்கு அதிகமாய விருதுகளைக் கூறிவந்தார்கள். நண்பனைக் காணாதவிடத்திலும் ஆசாரியனை எவ்விடத்திலும் கொண்டாடவேண்டுமென்ற முறைமைப்படி மதுரகவியாழ்வார் ஆசாரிய கைங்கரியத்தைத்தவிர யாதொன்றும் அறியாமல் அவருடைய பாசுரங்களைப் பாராயணம் செய்வதும் பிறர்க்குபதேசிப்பதும், அவருடைய மஹிமையையே வெளியிடுவதும், அவரையே தனக்குக் கடைத்தேறும் உபாயமாய் நம்பி அந்தத் திருப்பதியிலேயே வெகு காலம் வாழ்ந்தருளியிருந்து பெரும்பதத்தை யடைந்தார்.

இவர் நம்மாழ்வாருக்குப் பாததூளியாய் விளங்கினதால் ஆழ்வாருடைய திருவடிகளை இப்பொழுதும் மதுரகவிகளென்று சொல்வது வழக்கம்.

## கண்ணிநுண் சிறுத்தாம்பு.

இதற்கு ஸ்ரீமந் நாதமுனிகள் தனியனை அருளிச்செய்திருக்கிறார். இதற்குப் பெரியவாச்சான் பிள்ளையும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் இயற்றிய வியாக்கியானங்களுண்டு. பராசரர் முதலிய மஹரிஷிகள் பகவானிடத்திலேயே ஈடுபட்டவர்களாய் அவருடைய மஹிமையை அக்ஞா

ரிகளான ஸம்ஸாரிகள் அறியும்படி புராணங்களாலே உபதேசித்ததால் நம்மைப்போன்ற சேதனர்களைக் காட்டிலும் மேலானவர். ஆனால் அறத்துடன் காமம் அர்த்தமென்ற புருஷார்த்தங்களையும் கலந்து உபதேசித்தார்கள். ஆழ்வார்களோ அப்படியல்ல. பரோபதேசம் பண்ணும்பொழுதும் மோக்ஷமென்ற பரம புருஷார்த்தத்தையே அடியிலும் நடுவிலும் முடிவிலும் உபதேசித்தது அதற்கு ஸாதனம் பகவானுடைய திருவடிகளேயென்று போதித்தது அதுவுமல்லாமல் அப்படி நடந்துகொண்டு அனுஷ்டித்துக்காட்டின நம்மாழ்வாரின் மஹிமை இன்னும் மேலானது. ஆனால் இவரைக்காட்டிலும் ஸ்ரீமதுரகவிகளுக்கு இன்னும் மேன்மையுண்டு. ஏனென்றால் தன் ஆசாரியனான ஆழ்வாரே புருஷார்த்தமென்றும் அவரைப் பெறுவதற்கு ஸாதனம் அவருடைய திருவடிகளென்றும் உபதேசித்த அதைத் தானும் அனுஷ்டித்துக்காட்டினார். ஆழ்வார் பகவத்பக்தி யென்ற முதற்படியில் நின்றவர். மதுரகவிகள் பாகவதபக்தி யென்ற கடைசிப்படியில் நின்றவர். நம்மாழ்வாருக்கு நாச்சிமாரில் பிராட்டியே பகவானுக்கு உகந்த பொருளென்றதற்கு நிதர்சனம். நித்திய கைங்கரியத்திற்கும் ஸ்ரீவைஷ்ணவ பாரதந்திரனென்பதற்கும் இளையபெருமாளான லக்ஷ்மணன் உதாரணம். மோக்ஷமடைய விரும்புவோர்களின் பரிதாபமான நிலைமையைக் கண்டு உபதேசம் பண்ணுவதற்கு பிரஹ்லாதாழ்வான் நிதர்சனம். ஆனால் மதுரகவிகளுக்கு பாகவத கைங்கரிய விஷயத்தில் பெரியாழ்வாருடைய திருமகளான சூடிக்கொடுத்த நாச்சியாரே நிதர்சனம். நிஷ்டர்களில் ஸ்ரீசத்ருக்னாழ்வான் நிதர்சனம். முமுக்ஷுக்களில் பெரியமுதலியார் நிதர்சனமாவார். சத்ருக்னன் ராமனுடைய குணத்திலே பரதனைப்போல் ஈடுபடவில்லை. இவர் கிருஷ்ணனுடைய குணங்களில் ஈடுபட்டவரல்ல

நம்மாழ்வார் பகவத்விஷயத்தைக் கவிபாடியதனாலே தமதுடைய அனுபவத்தைச் சொன்னாரேயல்லாது அழுந்தியிருந்து இவருடைய காலத்திலே கேட்கப்பெறாத குறையை இவர் தீர்க்கிறார். அவருடைய குணங்கள் ஆழ்வாருடைய வாக்காலே திருந்தினபடி ஆழ்வாருடைய குணங்களும் இவருடைய வாக்காலே திருந்தின.

இப்படியே இவர் அருளிச்செய்த பிரபந்தம் முக்குணங்களால கட்டுப்பட்டவர்க்கு ஏற்ற பலன்களைச்சொல்லும் வேதங்களைப் போலவும், பகவத்குணங்களைப்பாடும் ஆயிரம் பாசுரங்களையுடைய திருவாய்மொழியைப்போலுமில்லாமல் ஆழ்வாருடைய திவ்ய குணங்களையே உபதேசிக்கின்றது வேதத்தைப்போல ஆனந்தமாயில்லை. திருவாய்மொழியைப்போல் ஆயிரமாயில்லை. வெகு சுருக்கமாயிருப்பதால் அவைகளைக் காட்டிலும் மேலானது. திருவாய்மொழியோ வேதஸாரம், இந்தப் பதிகமோ திருவாய்மொழியின் ஸாரம்.

ஒரு சேதனனுக்கு ஆப்தராயிருப்பவர் நால்வரே. அவர் ஸர்வேசுவரனும் பிராட்டியும் ஆசாரியனும் ஸ்ரீவைஷ்ணவர்களுமாவர். மாயையில் மயங்கிக்கிடக்கும் சேதனர்களைக்கடாக்ஷித்து தேஹேந்திரியாதிகளைக் கொடுத்து நற்கதி சேர்ப்பிக்கிறான், இவனுக்கு ஆதாரமாகிறான். இவன் இஷ்டத்தை யடைவதற்கும் அனிஷ்டத்தை விலக்கவும் உபாயமாகிறான், யாதொரு காரணமின்றி நமக்கு மித்திரனாகிறான். நாம் அடையவேண்டிய பரம் பொருளும் அவனே.

பிராட்டி ஜீவனிடத்தில் தாயைப்போல் அகாரணமான அன்பை யுடையவள். இவன் தான முன்பு செய்த பாபங்களை நினைத்துப் பயந்து பகவானை நெருங்குவதற்குக் கூசினால் அந்த அபராதத்தைப்பொறுக்கும்படி வேண்டி அவனுடைய திருவடிகளில் சேர்ப்பிக்கிறாள். இவன் உபாயத்தைக்கைப்பற்றும்படி செய்கிறாள். எம்பெருமானுக்கு ஸமமான பதவியை யுடையவள். பகவானை ஆசிரயிப்பதற்குத்தான புருஷகார மாயிருப்பது போல் தனக்கு வேறு புருஷகாரம் வேண்டாதவள்.

ஆசாரியன் ஜீவனுக்கு பகவத்விஷயத்தையும் பிராட்டியின் வைபவத்தையும் உபதேசிக்கிறான்; தானும் அனுஷ்டித்துக்காட்டி இவனையும் அனுஷ்டிக்கச் செய்கிறான், இவன் குற்றஞ்செய்தாலும் கைவிடுவதில்லை, இவனுடைய நன்றியறிதலால் பண்ணும கைங்கரியத்திற்குப் பிரத்யக்ஷமாய் இலக்காகிறான். இவனைப்போல் தானும ஒரு சேதனனாகையால் சுலபமானவன். இவனுடைய ஹிதத்தையே நாடித்தன் காரியத்தையும் மறக்கிறவன்.

ஸ்ரீவைஷ்ணவர்கள் இவனுக்கு ஆதியில் ருசியைப் பிறப்பித்தவர்கள்; ஆசாரியனால் உபதேசிக்கப்பட்ட ஞானத்தை வளர்க்கிறார்கள்; கூடவிருந்து உதவிசெய்கிறார்கள். ஆசாரியனுக்கு இவனிடத்திலுள்ள அன்பை வளரச்செய்கிறார்கள். இவனுக்குச் சில ஸமயங்களில் புத்தி பிசகினாலும் அதைத் தெரிவித்துத திருத்துகிறவர்கள், இவனால் பூஜிக்கததகுந்தவர்கள். ஆனால், இந்நால்வரில் சேதனனுக்கு அத்தியந்தம் ஹிதகாரிகள் யாரென்றால், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய மஹிமையையும், பிராட்டியின் கருணையையும், ஈசுவரனுடைய ஞானத்தையும், உபதேசிக்கும் ஆசாரியனே ஆதரிக்கத்தகுந்தவன். ஆகையால் இவ்வாழ்வாரும ஆசாரியவைபவத்தை நன்ருய் அறிந்தவராகையாலும் ஆழ்வார் திருவடிகளிலே நெடுநாள் பரிசரியை பண்ணி அவருடைய அருளுக்கு ஆளானதாலும் அவர் பண்ணின உபகாரத்திற்குப் பிரதயுபகாரம் செய்ய நினைக்காதவராகையாலும் அவரை வாயாறப் புகழ்ந்து அவருடைய உபகாரத்தை அடிக்கடி நினைப்பதும் சொல்லுவதுமே உபாயமாகக்கொண்டவராகையாலும் இந்தப் பிரபந்தத்தால் நம்மாழ்

வாருடைய வைபவத்தைப்பேசுகிறார். ஈசுவரனை யாராதிப்பது ஸுலப மல்ல, ஆசாரியனை ஆராதிப்பது ஸுலபம்; ஈசுவரனை யாராதிப்பதற்குத் திருவாயமொழி திருவாசிரியம் திருவிருத்தம் திருவந்தாதி யென்ற நூற்றுக் கணக்கான பாசுரங்களுள்ள நான்கு பிரபந்தங்கள் வேண்டியிருந்தது. ஆழ் வாரை யாராதிப்பதற்கோ இந்த பத்துப் பாசுரங்கள் போதும்.

1. முடிகளையுடையதாய் நேரியதாய் சிறியதான கயிற்றினால் தன்னைப் பிறர் கட்டும்படி பண்ணின மஹா மாயாவியான எனக்கு ஸ்வ ஸ்வாமியான ஈசுவரனைக் காட்டிலும் ப்ரீதியுடன் ஆசிரயித்து திருக்குரு கூரில் எழுந்தருளியிருக்கும் ஆழ்வாரின் திருநாமத்தைச் சொன்னால் என் நாக்கில் அமிருதம் ஊறும். (இங்கே ஆழ்வாருடைய ஒப்பற்ற யோக்கியதை யைச் சொல்லுகிறார். ஆழ்வாரைத் துதிக்க வேண்டியிருக்க கண்ணனைச் சொல்லுவதேனென்றால், ஆழ்வாருக்கு உகப்பான பகவானைத் துதிப்பதும் அவனைக் காட்டிலும் இவரே மேலென்று நிரூபிப்பதுமே கருத்து)

2 பகவானிடத்தில் ஈடுபட்ட அடியாரைத் துதிக்க வேண்டிய நாவினால் ஒப்பற்ற ஆனந்தத்தைப் பெற்றேன். ஆழ்வாருடைய அழகிய திருவடிகளையே பொருந்தினேன். ஸத்யமாய் ஆழ்வாரை யொழிய வேறொரு தெய்வத்தையும் அறியேன். ஆழ்வாருடைய திருவாயமொழி யோடுகூடின இனிய கானத்தைப் பாடிக்கொண்டு திரிவேன். (ஆழ்வாரு டைய பாசுரமே தேஹபோஷணத்திற்குப் பரம உபாயமென்கிறார்.)

3. மீண்டாகிலும் ஈசுவரனுடைய நீலமேகசியாமளமாய அழகாய் பிராட்டியாரோடு கூடியிருக்கும் திருமேனியைப் பகவத் விஷயத்தைவிட்ட நான் காண்பேன். மஹா உதாரராய்த் திருக்குருகூரில் எழுந்தருளியிருக் கும் ஆழ்வாருக்குரிய அடியனாய் நான் பெற்ற லாபம் இதே. (ஆழ்வாரிடத் தில் செய்த ஒப்பற்ற பக்தியால் ஆழ்வார் பகவானிடத்தில் செய்த பக்தியும் பலமும் தனக்குக் கிடைக்கு மென்கிறார்.)

4. அதிகாரிகளிடத்திலும் உபகாரம் செய்யும் தன்மையால் விசே ஷம் பெற்றவர்களாய் நான்கு வேதங்களுக்கும் வியாஸர்களைப் போன்றவர் களாயிருப்பவர்கள் என்னைக் கண்டு வெறுத்து அகற்றுவார்கள். ஆழ் வாரோ என் தோஷங்களை முற்றும் அறிந்திருந்தும் எனக்குத் தாயாய் தந் தையாய் என்னை ஆண்டிடும் தன்மையை உடையவராய் என் அக்ஞானத்தை நீக்கி என் குறையைத் தீர்த்தார். (என் தன்மையைப் பாராமல் என்னை யொருபொருளாய்க் கொண்டதைப் பார்த்தால் அவருகந்த விஷயத்தையே நாளும் புகழ்வேன் என்கிறார்.)

5. அநாதிகாலமெல்லாம் ஈசுவரனுடைய விலக்ஷணமான ஆத்ம வஸ்துவையும் நம்பினேன். ஸ்திரீகளையும் நம்பினேன். என் ஆசாரி

யனுக்கு அன்பனாய் அடியேன் இன்று அவருக்கு சேஷமானபொழுதே கடைத்தேறினேன்.

6. இன்று முதல் எக்காலத்திலும் எம்பிரான் தன் கல்யாண குணங்களைத் துதிக்கும்படி கிருபை செய்தார். ஆழ்வார் எக்காலத்திலும் என்னை ஆதரிக்காமலிரார்.

7. தன்னுடைய பெருமையை யறியாத என்னை என் தோஷத்தைப் பாராமலேயே ஆட்கொண்டு ஆழ்வார் அநாதிகாலமாய் ஓங்கி வளர்ந்த என் பாவத்தை யழித்துத தன்னையே துதிக்கும்படி யருளினான். அழகிய தமிழ்ப் பிரபந்தத்தை யருளிச் செய்து ஸம்ஸாரிகளின் அக்ஞானத்தைப் போக்கின ஆழ்வாருடைய கிருபையையே எட்டுத் திக்கிலுமுள்ளவரும் அறியும்படி சொல்லுகிறேன்.

8. அடியார் ஆனந்த பரவசராய் அவனுடைய அருளைக் கொண்டாடும்படி வேதங்களின் உட்கருத்தைப் பாசுரமாய் அருளினார். ஈசுவர கிருபையைப் பின்பற்றி ஆயிரம் பாடல்களாய் இனிய திருவாய்மொழியைப் பாடினார். இவ்வுலகத்தில ஆழ்வாருடைய அருளே மேலோங்கி யிருக்கிறது.

9. மேலான பிராமணர்கள் சொல்லும் வேதத்தின் பரம ரஹஸ்யமான அர்த்தத்தை இறகும்படி பிரபத்தி விஷயமாகப் பாடி என மனதில் நிறுத்தினான். என ஆசாரியனுக்கு அடிமை செய்ய வேண்டுமென்ற காதல் ஒன்றே அந்தக் கைங்கரியத்துக்குப் பலமாயிறறு.

10. பிரயோஜனமில்லாதே போனாலும் பாங்கற்றவர்களாகிலும் தம் செயலாலே அனுஷ்டித்துக் காட்டிப், பகவத் பாகவத கைங்கரியத்தில என்னைக் கொண்டுபோய் ஈடுபடுத்தின தேவரீருடைய சிலாக்கியமான திருவடிகளில என்றும் மாறாத அன்பையே வேண்டுகிறேன் (ஆசாரிய விஷயத்தில் எலலாம செய்தாலும அவன பண்ணின உபகாரத்தைப் பார்த்தால் ஒன்றும் செய்யவில்லையே யென்ற குறைவே தோன்று மென்பது).

மதுரகவியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ், சென்னை.